திருமகள்கலையதூர்திசயமாதுபூமி
திசைதெய்வமானபலவும்
அருநெறிநல்லநல்லவவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே.

மதிநுதன்மங்கையோடுவடபாலிருந்து
மறையோதுமெங்கள்பரமன்
நதியொடுகொன்றைமாலைமுடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனல்
கொதியுறுகாலனங்கிநமனோடுதூதர்
கொடுநோய்களானபலவும்
அதிகுணநல்லநல்லவவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே.

நஞ்சணிகண்டனெந்தைமடவாடனோடும்
விடையேறுநங்கள்பரமன்
துஞ்சிருள்வன்னிகொன்றைமுடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனல்
வெஞ்சினவவுணரோடுமுருமிடியுமின்னு
மிகையானபூதமவையும்
அஞ்சிடுநல்லநல்லவவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே

வாள்வரியதளதாடை வரிகோவணத்தர்
மடவாடனோடுமுடனாய்
நாண்மலர்வன்னிகொன்றைநதிசூடிவந்தெ
னுளமேபுகுந்தவதனல்
கோளரியுழுவையோடுகொலையானைகேழல்
கொடுநாகமோடுகரடி
ஆளரிநல்லநல்லவவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே.

செப்பிளமுலைநன்மங்கையொருபாகமாக
விடையேறுசெல்வனடைவார்
ஒப்பிளமதியுமப்புமுடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனல்
வெப்பொடுகுளிரும்வாதமிகையானபித்தும்
வியா
அப்படிநல்லநல்லவவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே.

**Up in the morning gets through the work.**

வேள்படவிழிசெய்தன்றுவிடைமேலிருந்து
மடவாடனோடுமுடனாய்
வாண்மதிவன்னிகொன்றைமலர்சூடிவந்தெ
னுளமேபுகுந்தவதனால்
ஏழ்கடல்சூழிலங்கையரையன்றனோடு
மிடரானவந்துநலியா
வாழ்கடனல்லநல்லவவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே.

பலபலவேடமாகும்பரனாரிபாகன்
பசுவேறுமெங்கள்பரமன்
சலமகளோடெருக்குமுடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
மலர்மிசையோனுமாலுமறையோடுதேவர்
வருகாலமானபலவும்
அலைகடன்மேருநல்லவவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே.

கொத்தலர்குழலியோடுவிசயற்குநல்கு
குணமாயவேடவிகிர்தன்
மத்தமுமதியுநாகமுடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
புத்தரொடமணைவாதிலழிவிக்குமண்ண
றிருநீறுசெம்மைதிடமே
அத்தகுநல்லநல்லவவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே.

தேனமர்பொழில்கொளாலைவிளைசெந்நெறுன்னி
வளர்செம்பொனெங்குநிகழ
நான்முகனாதியாயபிரமாபுரத்து
மறைஞானஞானமுனிவன்
தானுறுகோளுநாளுமடியாரைவந்து
நலியாதவண்ணமுரைசெய்
ஆனசொன்மாலையோதுமடியார்கள்வானி
லரசாள்வராணைநமதே.

அப்பர் - அடிமை.

குலம்பலம்பாவருகுண்டர்முன்னேநமக்குண்டுகொலோ
வலம்பலம்பாவருதண்புனலாரூரவிர்சடையான்
சிலம்பலம்பாவருசேவடியான்றிருமூலட்டானம்
புலம்பலம்பாவருதொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே.

Long in bed does little work.

மற்றிடமின்றிமனை துறந்தல் லுணுவல்லமணர்
சொற்றிடமென்று துரிசுபட்டேனுக்குமுண்டுகொலோ
விற்றிடம்வாங்கிவிசயனொடன்றொருவேடுவனுய்ப்
புற்றிடங்கொண்டான்றன்றொண்டாக்குத்தொண்டராம்புண்ணிய
குற்றமுண்டயவமணர்திறமதுகையகன்றிட் [மே.
டுற்றகருமஞ்செய் துய்யப்போந்தேனுக்குமுண்டுகொலோ
மற்பொலிதோளானிராவணன்றன்வலிவாட்டுவித்த
பொற்கழலானடித்தொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே.

சுந்தரர் - அடிமை. முழுப்பதிகம்

தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத வியற்பகைக்கு மடியே
னிளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற் கடியேன்
அல்லிமென் முல்லையந்தா ரமர்நீதிக் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே.

இலைமலிந்த வேனம்பி யெறிபத்தற்கடியே
னேனாதி நாதன்ற னடியார்க்கு மடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பற் கடியேன்
கடவூரிற் கலயன்ற னடியார்க்கு மடியேன்
மலைமலிந்த தோள்வள்ளன் மானக்கஞ் சாற
னெஞ்சாத வாட்டாய னடியார்க்கு மடியேன்
அலைமலிந்த புனன்மங்கை யானயற் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே.

மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்
முருகனுக்கு முருத்திர பசுபதிக்கு மடியேன்,
செம்மையே திருநாளைப் போவாற்கு மடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் மடியார்க்கு மடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதையை மழுவினா லெறிந்த
அம்மையா னடிச்சண்டிப் பெருமானுக் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே.

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக்கரையன்ற னடியார்க்கு மடியேன்
பெருநம்பி குலச்சிறைத னடியார்க்கு மடியேன்
பெருமிழலைக் குறும்பற்கும் பேயார்க்கு மடியேன்

ஒருநம்பி யப்பூதி யடியார்க்கு மடியே
ளொலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கற் கடியேன்
அருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே.

வம்பறா வரிவண்டு மணநாற மலரு
மதுமலர்நற் கொன்றையா னடியலரற் பேணு
எம்பிரான் சம்பந்த னடியார்க்கு மடியே
னேயர்கோன் கலிக்காம னடியார்க்கு மடியேன்
நம்பிரான் றிருமூல னடியார்க்கு மடியே
னாட்டமிகு தண்டிக்கு மூர்க்கற்கு மடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே.

வார்கொண்ட வனமுலையா ளுமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியற்கு மடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கு மடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டற் கடியேன்
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கு மடியேன்
கடற்காழிக் கணநாத னடியார்க்கு மடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோ னடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே.

பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன்
மெய்யடியா னரசிங்க முனையரையற் கடியேன்
விரிதிரைசூழ் கடனாகை யதிபத்தற் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோ னடியார்க்கு மடியேன்
ஐயடிகள் காடவர்கோ னடியார்க்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே.

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்குங் காரிக்கு மடியேன்
நிறைக்கொண்ட சிந்தையா னெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்
துறைக்கொண்ட செம்பவள மிருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலா னடியார்க்கு மடியேன்
அறைக்கொண்ட வேனம்பி முனையடுவாற் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே.

---

Neither listen to, nor tell, secrets.

கடல்சூழ்ந்த வுலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைதன் னடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதண்மே லரவாட வாடி
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கு மடியேன்
அடல்சூழ்ந்த வேனம்பி கோட்புலிக்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே.

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியேன்
அப்பாலு மடிச்சார்ந்த வடியார்க்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே.

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கு நேசனுக்கு மடியேன்
தென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனா மரனடியே யடைந்திட்ட சடைய
னிசைஞானி காதலன் றிருநாவ லூர்க்கோன்
அன்னவனா மாரூர னடிமைகேட் டுவப்பா
ராரூரி லம்மானுக் கன்பரா வாரே.

---

## பஞ்சபூத ஸ்தலவரிசை தேவாரம்.

### பிருதிவிலிங்கம் - காஞ்சிபுரம்.

சம்பந்தர்-பண்-இந்தளம்.

மறையானைமாசிலாப்புன்சடைமல்குவெண்
பிறையானைப் பெண்ணொடாணாகியபெருமானை
இறையானையேர்கொள்கச்சித்திருவேகம்பத்
துறைவானையல்லதுள்காதெனதுள்ளமே.

அப்பர்-திருவிருத்தம்.

கருவுற்றநாண்முதலாகவுன்பாதமேகாண்பதற்கு
உருகிற்றெனுள்ளமுநானுங்கிடந்தலந்தெய்த்தொழிந்தேன்
திருவொற்றியூராதிருவாலவாயாதிருவாரூரா
ஒருபற்றிலாமையுங்கண்டிரங்காய்கச்சியேகம்பனே.

பாம்பரைச்சேர்த்திப் படருஞ்சடைமுடிப்பால்வண்ணனே
கூம்பலைச்செய்தகரதலத்தன்பர்கள்கூடிப்பன்னாட்
சாம்பலைப்பூசித்தரையிற்புரண்டுநின்றாள்சரணென்
றேம்பலிப்பார்கட்கிரங்குகண்டாய்கச்சியேகம்பனே

### திருக்குறுந்தொகை.

பண்டுசெய்த பழவினையின்பயன்
கண்டுங்கண்டுங்களித்திகாணெஞ்சமே
வண்டுலாமலர்ச்செஞ்சடையேகம்பன்
தொண்டனாய்த்திரியாய் துயர்தீரவே.

மருந்தினோடுநற் சுற்றமுமக்களும்
பொருந்திநின்றெனக்காயவெம்புண்ணியன்
கருந்தடங்கண்ணினாளுமைகைதொழ
விருந்தவன்கச்சியேகம்பத்தெந்தையே.

பண்ணிலோசைபழத்தினிலின்சுவை
பெண்ணொடாணென்றுபேசற்கரியவன்
வண்ணமில்லிவடிவேறுயவன்
கண்ணினுண்மணிகச்சியேகம்பனே.

### திருத்தாண்டகம்.

தாயவன்காணுலகிற்குத்தன்னொப்பில்லாத்
தத்துவன்காண்மலைமங்கைபங்காவென்பார்
வாயவன்காண்வரும்பிறவிநோய்தீர்ப்பான்காண்
வானவர்க்குந்தானவர்க்குமண்ணுளோர்க்குந்
சேயன்காணினைவார்க்குச்சித்தமாரத்
திருவடியேயுள்கிநினைந்தெழுவாருள்ளம்
ஏயவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி
யேகம்பன்காணவனென்மனத்துளானே.

### சுந்தரர்-பண்-தக்கேசி.

சிந்தித்தென்றுநினைந்தெழுவார்கள்
சிந்தையிற்றிகழுஞ்சிவன்றன்னைப
பந்தித்தவினைப்பற்றறுப்பானைப்
பாலொடானஞ்சுமாட்டுகந்தானை
அந்தமில்புகழாளுமைநங்கை
யாதரித்துவழிபடப்பெற்ற
கந்தவார்சடைக்கம்பனெம்மானைக்
காணக்கண்ணடியேன்பெற்றவாறே.

சுவாமி-ஏகாம்பரநாதர், தேவி-காமாட்சியம்மை.

**Frugality proves an easy chair for old age.**

## அப்புலிங்கம்—திருவானைக்கா (ஜம்புகேசுரம்.)

சம்பந்தர்-பண்-இந்தளம்.

மழையார்மிடறாமழுவாளுடையாய்
உழையார்கரவாவுமையாள்கணவா
விழவாருரும்வெண்ணாவலின்மேவியவெம்
அழகாவெனுமாயிழையாளவளே.

பண்-கௌசிகம்.

வானைக்காவில்வெண்மதிமல்குபுல்குவார்சடைத்
தேனைக்காவலின்மொழித்தேவிபாகமாயினான்
ஆனைக்காவிலண்ணலையபயமாகவாழ்பவர்
ஏனைக்காவல்வேண்டுவார்க்கேதுமேதமில்லையே.

திருக்கயிலாயமுந் திருவானைக்காவுந் திருமகேந்திரமுந்
திருவாரூருங் கூட்டிச்சதுக்கம்.

மண்ணதுவுண்டரிமலரோன்காணா
வெண்ணாவல்விரும்புமகேந்திரரும்
கண்ணதுவோங்கியகயிலையாரும்
அண்ணலாரூராதியானைக்காவே.

அப்பர் - திருக்குறுந்தொகை.

துன்பமின்றித்துயரின்றியென்றுநீர்
இன்பம்வேண்டிவிராப்பகலேத்துமின்
என்பொனீசனிறைவனென்றுள்குவார்க்
கன்பனாயிடுமானைக்காவண்ணலே.

திருத்தாண்டகம்.

எத்தாயரெத்தந்தையெச்சுற்றத்தா
ரெம்மாடுசும்மாடாமேவர்நல்லார்
செத்தால்வந்துதவுவாரொருவரில்லைச்
சிறுவிறகாற்றீமூட்டிச்செல்லாநிற்பர்
சித்தாயவேடத்தாய்நீடுபொன்னித்
திருவானைக்காவுடையசெல்வாவென்றன்
அத்தாவுன்பொற்பாதமடையப்பெற்றா
லல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே.

சுந்தரர் - பண் - காந்தாரம்.

தாரமாகியபொன்னித்தண்டுறையாடிவிழுத்தும்
நீரினின்றடிபோற்றிநின்மலாகொள்ளெனவாங்கே
ஆரங்கொண்டவெம்மானைக்காவுடையாதிநாளும்
ஈரமுள்ளவர்நாளுமெய்ம்மையுமாளுடையாரே.

சுவாமி - ஜம்புகேசுவரர், தேவி - அகிலாண்டநாயகி.

**Diligence alone is a good patrimony.**

## தேயுலிங்கம்-திருவண்ணாமலை.

சம்பந்தர்-பண்-நட்டபாடை.

உண்ணாமுலையுமையாளொடு முடனாகியவொருவன்
பெண்ணாகியபெருமான்மலை திருமாமணிதிகழ
மண்ணார்ந்தனவருவித்திரண் மழலைம்முழவதிரு
அண்ணாமலைதொழுவார்வினை வழுவாவண்ணமறுமே.

பண்-தக்கேசி.

வந்தித்திருக்குமடியார் தங்கள்வருமேல்வினையோடு
பந்தித்திருந்தபாவந்தீர்க்கும்பரமனுறைகோயின்
முந்தியெழுந்தமுழ விழைசைமுதுகல்வரைகண்மேல்
அந்திப்பிறைவந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே.

அப்பர்-திருநேரிசை.

ஓதிமாமலர்கடூவியுமையவள்பங்காமிக்க
சோதியே துளங்குமெண்டோட்சுடர்மழுப்படையினானே
ஆதியேயமரர்கோவேயணியணாமலையுளானே
நீதியானின்னையல்லானினையுமாநினைவிலேனே.

திருக்குறுந்தொகை.

வட்டனைமதிசூடியைவானவர்
சிட்டனைத்திருவண்ணாமலையனை
இட்டனையிகழ்ந்தார்புரமூன்றையும்
அட்டனையடியேன்மறந்துய்வனோ.

முந்திச்சென்றுமுப்போதும்வணங்குமின்
அந்திவாயொளியான்றனண்ணாமலை
சிந்தியாவெழுவார்வினைதீர்த்திடுங்
கந்தமாமலர்சூடுங்கருத்தனே.

சுவாமி—அருணசலேசுவரர், தேவி—உண்ணாமுலையம்மை.

---

## வாயுலிங்கம்-திருக்காளத்தி.

சம்பந்தர்-பண்-கொல்லி.

சந்தமாரகிலொடுசாதிதேக்குமரம்
உந்துமாமுகலியின்கரையினிலுமையோடும்
மந்தமார்பொழில்வளர்மல்குவண்காளத்தி
எந்தையாரிணையடியென்மனத்துள்ளவே.

**Better go to bed supperless than rise in debt.**

பண்-சாதாரி.

வானவர்கடானவர்கள்வாதைபடவந்ததொருமாகடல்விடந்
தானமுதுசெய்தருள்புரிந்தசிவன்மேவுமலைதன்னைவினவில்
ஏனமினமானினொடுகிள்ளைதினைகொள்ளவெழிலார்கவணினால்
கானவர்தமாமகளிர்கனகமணிவிலகுகாளத்திமலையே

அப்பர்-திருத்தாண்டகம்.

விற்றானொன்றில்லாதநல்கூர்ந்தான்காண்
வியன்கச்சிக்கம்பன்காண்பிச்சையல்லால்
மற்றானொன்றில்லாதமாசதுரன்காண்
மயானத்துமைந்தன்காண்மாசொன்றில்லாப்
பொற்றூண்காண்மாமணிநற்குன்றொப்பான்காண்
பொய்யாதுபொழிலேழுந்தாங்கிநின்ற
கற்றூண்காண்காளத்திகாணப்பட்ட
கணநாதன்காணவனென்கண்ணுளானே.

சுந்தரர்-பண்-நட்டராகம்.

செண்டாடும்விடையாய்சிவனேயென்செழுஞ்சுடரே
வண்டாருங்குழலாளுமைபாகமகிழ்ந்தவனே
கண்டார்காதலிக்குங்கணநாதனெங்காளத்தியாய்
அண்டாவுன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே.

சுவாமி—காளத்திநாதர், தேவி—ஞானப்பூங்கோதையம்மை.

## ஆகாயலிங்கம்-சிதம்பரம்.

சம்பந்தர்-பண்குறிஞ்சி.

கற்றாங்கெரியோம்பிக்கலியைவாராமே
செற்றார்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
முற்றாவெண்டிங்கண்முதல்வன்பாதமே
பற்றாநின்றாரைப்பற்றாபாவமே.

பண்-காந்தாரபஞ்சமம்.

ஆடினாய்நறுநெய்யொடுபாற்றயிரந்தணர்பிரியாதசிற்றம்பலம்
நாடினாயிடமாநறுங்கொன்றைநயந்தவனே
பாடினாய்மறையோடுபல்கீதமும்பல்சடைப்பனிகால்கதிர்வெண்
சூடினாயருளாய்சுருங்கவெமதொல்வினையே. [டிங்கள்

அப்பர்-திருக்குறுந்தொகை.

அன்னம்பாலிக்குந்தில்லைச்சிற்றம்பலம்
பொன்னம்பாலிக்குமேலுமிப்பூமிசை
என்னம்பாலிக்குமாறுகண்டின்புற
இன்னம்பாலிக்குமோவிப்பிறவியே.

திருக்குறுந்தொகை.

பனைக்கைமும்மதவேழமுரித்தவன்
நினைப்பவர்மனங்கோயிலாக்கொண்டவன்
அனைத்துவேடமாமம்பலக்கூத்தனைத்
தினைத்தனைப்பொழுதும்மறந்துய்வனே.

திருநேரிசை.

பத்தனாய்ப்பாடமாட்டேன்பரமனேபரமயோகீ
எத்திறற்பத்திசெய்கேனென்னைநீயிகழவேண்டாம
முத்தனேமுதல்வாதில்லையம்பலத்தாடுகின்ற
அத்தாவுன்னாடல்காண்பானடியனேன்வந்தவாறே.

திருவிருத்தம்.

படைக்கலமாகவுன்னாமத்தெழுத்தஞ்செனாவிற்கொண்டேன்
இடைக்கலமல்லேனெழுபிறப்பும்முனக்காட்செய்கின்றேன
றுடைக்கினும்போகேன் றொழுதுவணங்கித்தூனீறணிந்துன்
அடைக்கலங்கண்டாயணிதில்லைச்சிற்றம்பலத்தரனே.

காடவெடுத்ததுதக்கன்றன்வேள்வியிற்சந்திரனை
வீடவெடுத்ததுகாலனைநாரணன்முகனும்
தேடவெடுத்ததுதில்லையுட்சிற்றம்பலத்துநட்டம்
ஆடவெடுத்திட்டபாதமன்றோநம்மையாட்கொண்டதே.

பெரிய திருத்தாண்டகம்.

அரியானையந்தணர்தஞ்சிந்தையானை
யருமறையினகத்தானையணுவையார்க்குந
தெரியாததத்துவனைத்தேனைப்பாலைத்
திகழொளியைத்தேவர்கடங்கோனைமற்றைக்
கரியானைநான்முகனைக்கனலைக்காற்றைக்
கனைகடலைக்குலவரையைக்கலந்துநின்ற
பெரியானைப்பெரும்பற்றப்புலியூரானைப்
பேசாதநாளெல்லாமபிறவாநாளே.

அருந்துணையையடியார்தமல்லறீர்க்கு
மருமருந்தையகன்ஞாலத்தகத்துட்டோன்ற
வருந்துணையுஞ்சுற்றமும்பற்றும்விட்டு
வான்புலன்களகத்தடக்கிமடவாரோடும்
பொருந்தணைமேல்வரும்பயனைப்போகமாற்றிப்
பொதுநீக்கித்தனைநினையவல்லோர்க்கென்றும்
பெருந்துணையைப்பெரும்பற்றப்புலியூரானைப்
பேசாதநாளெல்லாம்பிறவாநாளே.

சுவாமி-சபாநாயகர்-திருமூலநாயகர். தேவி-சிவகாமியம்மை-உமையம்மை

## திருவாலவாய்-மதுரை.

சம்பந்தர்-பண்-கொல்லி.

மானினேர்விழிமாதராய்வழுதிக்குமாபெருந்தேவிகேள்
பானல்வாயொருபாலனீங்கிவனென்றுநீபரிவெய்திடேல்
ஆனைமாமலையாதியாயவிடங்களிற்பலவல்லல்சேர்
ஈனர்கட்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே.

பண்-கௌசிகம்.

செய்யனேதிருவாலவாய்மேவிய
ஐயனேயஞ்சலென்றருள்செய்யெனைப்
பொய்யராமமணர்கொளுவுஞ்சுடர்
பையவேசென்றுபாண்டியற்காகவே.

குற்றநீகுணங்கணீகூடலாலவாயிலாய்
சுற்றநீபிரானுநீதொடர்ந்திலங்குசோதிநீ
கற்றநூற்கருத்துநீயருத்தமின்பமென்றிவை
முற்றுநீபுகழ்ந்துமுன்னுரைப்பதென்முகம்மனே.

திருவியமகம்.

ஆலநீழலுகந்ததிருக்கையேயானபாடலுகந்ததிருக்கையே
பாலினேர்மொழியாளொருபங்கனேபாதமோதலர்சேர்புரபங்கனே
கோலநீறணிமேதகுபூதனேகோதிலார்மனமேவியபூதனே
ஆலநஞ்சமுதுண்டகளத்தனேயாலவாயுறையண்டர்களத்தனே.

பண்-புறநீர்மை.

மங்கையர்க்கரசிவளவர்கோன்பாவைவரிவளைக்கைமடமானி
பங்கயச்செல்விபாண்டிமாதேவிபணிசெய்துநாடொறும்பரவப்
பொங்கழலுருவன்பூதநாயகனால்வேதமும்பொருள்களுமருளி
அங்கயற்கண்ணிதன்னொடுமமர்ந்தவாலவாயாவதுமிதுவே.

அப்பர்-திருநேரிசை.

வேதியாவேதகீதாவிண்ணவரண்ணாவென்றென்
றோதியேமலர்கடூவியொருங்கிநின்கழல்கள்காணப்
பாதியோர்பெண்ணைவைத்தாய்படர்சடைமதியஞ்சூடும்
ஆதியேயாலவாயிலப்பனேயருள்செயாயே.

சுவாமி—சொக்கலிங்கமூர்த்தி, தேவி—மீனாட்சியம்மை.

To be prudent is the best revenue

## திருவாரூர்.

சம்பந்தர்-பண்-காந்தாரம்.

தந்தையார்போயினார் தாயரும்போயினார் தாமும்போவார்
கொந்தவேல்கொண்டொரு கூற்றத்தார்பார்க்கின்றார்கொண்டுபோ
வெந்தநாள்வாழ்வதற்கேமனம்வைத்தியாலேழைநெஞ்சே [வார்
அந்தணாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சனெஞ்சே.

அப்பர்-பண்-காந்தாரம்.

பாடிளம்பூதத்தினானும்பவளச்செவ்வாய்வண்ணத்தானுங்
கூடிளமென்முலையாளைக்கூடியகோலத்தினானும்
ஓடிளவெண்பிறையானுமொளிதிகழ்சூலத்தினானும்
ஆடிளம்பாம்பசைத்தானுமாரூரமர்ந்தவம்மானே.

பண்-குறிஞ்சி.

துன்பநும்மைத்தொழாதநாள்களென்பாரும்
இன்பநும்மையேத்துநாள்களென்பாரும்
நும்பினெம்மைநுழையப்பணியேயென்பாரும்
அன்பனாரூராதிரைநாளாலதுவண்ணம.

திருநேரிசை.

உயிர்நிலையுடம்பேகாலாவுள்ளமேதாழியாகத்
துயரமேயேற்றமாகத்துன்பக்கோலதனைப்பற்றிப்
பயிர்தனைச்சுழியவிட்டுப்பாழ்க்குநீரிறைத்துமிக்க
அயர்வினாலைவர்க்காற்றேனாரூர்மூலட்டனீரே.

பத்தனாய்வாழமாட்டேன்பாவியேன்பரவிவந்து
சித்தத்துள்ளைவர்தீயசெய்வினைபலவுஞ்செய்ய
மத்துறுதயிரேபோலமறுகுமென்னுள்ளந்தானும்
அத்தனேயமரர்கோவேயாரூர்மூலட்டனீரே.

திருவிருத்தம்.

ஆராய்ந்தடித்தொண்டராணிப்பொனாரூரகத்தடக்கிப்
பாரூர்பரிப்பத்தம்பங்குனியுத்திரம்பாற்படுத்தான்
ஆரூர்நறுமலர்நாதனடித்தொண்டனம்பிநந்தி
நீராற்றிருவிளக்கிட்டமைநீணாடறியுமன்றே.

சுந்தரர்-பண்-இந்தளம்.

சொல்லிடிலெல்லையில்லைச்சுவையிலாப்பேதைவாழ்வு
நல்லதோர்கூரைபுக்குநலமிகவறிநதேனல்லேன்
மல்லிகைமாடநீடுமருங்கொடுநெருங்கியெங்கும்
அல்லிவண்டியங்குமாரூரப்பனேயஞ்சினேனே.

சுவாமி—வன்மீகநாதர், தேவி—அல்லியங்கோதையம்மை

---

A word before is worth two behind.

## திருவையாறு.

சம்பந்தர்-பண்-மேகராகக்குறிஞ்சி.

புலனைந்தும்பொறிகலங்கிநெறிமயங்கியறிவழிந்திட்டைமேலுந்தி
அலமந்தபோர்தாகவஞ்சேலென்றருள்செய்வானமருங்கோயில்
வலம்வந்தமடவார்களடமாடமுழவதிரமழையென்றஞ்சிச்
சிலமந்தியலமந்துமரமேறிமுகில்பார்க்குந்திருவையாறே.

எல்லாவுலகமுமானாய்நீயே
  யேகம்பமேவியிருந்தாய்நீயே
நல்லாரைநன்மையறிவாய்நீயே
  ஞானச்சுடர்விளக்காய்நின்றாய்நீயே
பொல்லாவினைகளறுப்பாய்நீயே
  புகழ்ச்சேவடியென்மேல்வைத்தாய்நீயே
செல்வாயசெல்வந்தருவாய்நீயே
  திருவையாறகலாதசெம்பொற்சோதீ.

சுவாமி—செம்பொற்சோதி, தேவி—அறம்வளர்தாள்.

## திருவிடைமருதூர்.

சுந்தரர்-பண்-தக்கேசி.

கொடுக்ககிற்றிலே னொண்பொருடன்னைக்
  குற்றஞ்செற்றமிவைமுதலாக
விடுக்ககிற்றிலேன்வேட்கையுஞ்சினமும்
  வேண்டிலம்புலனென்வசமல்ல
நடுக்கமுற்றதோர்மூப்புவந்தெய்த
  நமன்றமர்நரகத்திடலஞ்சி
இடுக்கணுற்றனனுய்வதொன்றறியே
  னிடைமருதுறைஎந்தைபிரானே.

சுவாமி— மருதப்பர், தேவி—நன்முலைநாயகி.

---

## திருவாவடுதுறை.

திருத்தாண்டகம்.

திருவேயென்செல்வமேதேனேவானோர்
  செழுஞ்சுடரேசெழுஞ்சுடர்நற்சோதிமிக்க
உருவேயென்னுறவேயென்னூனேயூனி
  னுள்ளமேயுள்ளத்தினுள்ளேநின்ற

கருவேயென்கற்பகமேகண்ணேகண்ணிற்
கருமணியேமணியாடுபாவாய்காவாய்
அருவாயவல்வினைநோயடையாவண்ண
மாவடுதண்டுறையுறையுமமரரேறே.

சுவாமி-மாசிலாமணியீசர், செம்பொற்றியாகர், தேவி-ஒப்பிலாமுலையம்மை.

## திருமயிலாடுதுறை (மாயவரம்)

அப்பர்-திருக்குறுந்தொகை.

நிலைமைசொல்லுநெஞ்சேதவமென்செய்தாய்
கலைகளாயவல்லான்கயிலாயநன்
மலையன்மாமயிலாடுதுறையனந்
தலையின்மேலுமனத்துளுந்தங்கவே.

சுவாமி—மாயூரநாதர், தேவி—அஞ்சநாயகி.

## கும்பகோணம்.

அப்பர்-திருகுறுந்தொகை.

தொண்டராகித்தொழுதுபணிமினோ
பண்டைவல்வினைபற்றறவேண்டுவீர்
விண்டவர்புரமூன்றெரிமாத்திரைக்
கொண்டவனுறையுங்குடமூக்கிலே.

சுவாமி—கும்பேசர், தேவி—மங்களநாயகி.

## நாகப்பட்டினம்.

சுந்தரர்-பண்-கொல்லிக்கௌவாணம்.

பத்தூர்புக்கிரந்துண்டுபலபதிகம்பாடிப்
பாவையரைக்கிறிபேசிப்படிறாடித்திரிவீர்
செத்தார்தம்மெலும்பணிந்துசேவேறித்திரிவீர்
செல்வத்தைமறைத்துவைத்தீரெனக்கொருநாளிரங்கீர்
முத்தாரமிலங்கிமிளிர்மணிவயிரக்கோவை
யவைபூணத்தந்தருளிமெய்க்கினிதாநாறுங்
கத்தூரிகமழ்சாந்தும்பணித்தருள்வேண்டுங்
கடனாகைக்காரோணமேவியிருந்தீரே.

சுவாமி—காயாரோகணேசர், தேவி—நீலாயதாக்ஷியம்மை.

## திருமறைக்காடு.

அப்பர்-திருக்குறுந்தொகை.

பண்ணினேர்மொழியாளுமைபங்கரோ
மண்ணினார் வலஞ்செய்மறைக்காடரோ
கண்ணினாலுமைக்காணக்கதவினைத்
திண்ணமாகத்திறந்தருள்செய்ம்மினே.

சுவாமி—வேதாரணியநாதர், தேவி—யாழைப்பழித்தமொழியம்மை.

## உறையூர்.

சம்பந்தர்-பண்-செவ்வழி.

சாந்தம்வெண்ணீறெனப்பூசிவெள்ளஞ்சடைவைத்தவர்
காந்தளாரும்விரலேழையொடாடியகாரணம்
ஆய்ந்துகொண்டாங்கறியந்நிறைந்தாரவரார்கொலோ
வேந்தன்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோர்மெய்ம்மையே.

சுவாமி—பஞ்சவர்ணநாதர், தேவி—காந்திமதியம்மை.

## திருச்சிராப்பள்ளி.

சம்பந்தர்-பண்-குறிஞ்சி.

நன்றுடையானைத்தீயதிலானைநரைவெள்ளே
றொன்றுடையானையுமையொருபாகமுடையானைச்
சென்றடையாததிருவுடையானைச்சிராப்பள்ளிக்
குன்றுடையானைக்கூறவென்னுள்ளங்குளிருமே.

அப்பர்-திருக்குறுந்தொகை.

தாயுமாயெனக்கேதலைகண்ணுமாய்ப்
பேயனேனையுமாண்டபெருந்தகை
தேயநாதன்சிராப்பள்ளிமேவிய
நாயனாரெனநம்வினைநாசமே.

சுவாமி—தாயுமானவர், தேவி—மட்டுவார்குழலி.

---

## திருவீழிமிழலை.

அப்பர்-திருக்குறுந்தொகை.

பழகநின்னடிசூடியபாலனைக்
கழகின்மேல்வைத்தகாலனைச்சாடிய
அழகனேயணிவீழிமிழலையுள்
குழகனேயடியேனைக்குறிக்கொளே.

சுவாமி—வீழியழகர், தேவி—சுந்தரகுசாம்பிகை.

திருப்பாதிரிப்புலியூர்-அப்பர்-திருவிருத்தம்.

ஈன்றாளுமாயெனக்கெந்தையுமாயுடன்றோன்றினராய்
மூன்றாயுலகம்படைத் தூகந்தான்மனத் துள்ளிருக்க
ஏன்றானிமையவர்க்கன்பன்றிருப்பாதிரிப்புலியூர்த்
தோன்றாத் துணையாயிருந்தனன் றன்னடியோங்களுக்கே.

கருவாய்க்கிடந்துன்கழலேநினையுங்கருத் துடையேன்
உருவாய்த்தெரிந்துன் றனாமம்பயின்றேனுனதருளால்
திருவாய்ப்பொலியச்சிவாயநமவென் றுநீறணிந்தேன்
தருவாய்சிவகதிநீபாதிரிப்புலியூரானே.

புழுவாய்ப்பிறக்கினும்புண்ணியாவுன்னடியென்மனத்தே
வழுவாதிருக்கவரந்தரவேண்டுமிவ்வையகத்தே
தொழுவார்க்கிரங்கியிருந்தருள்செய்பாதிரிப்புலியூர்ச்
செழுநீர்ப்புனற்கங்கைசெஞ்சடைமேல்வைத்ததீவண்ணனே.

சுவாமி—தோன்றாத்துணைநாதர், தேவி—தோகைநாயகியம்மை.

---

திருவதிகைவீரட்டம்-திருவிரிஞ்சிபுரம்-வைப்புஸ்தலம்-அப்பர்.

தெண்ணீர்ப்புனற்கெடிலவீரட்டமுஞ்சீர்காழிவல்லந்திருவேட்டியும்
உண்ணீராரேடகமுமூறலம்பருதையூர்நறையூரணிநல்லூர்
விண்ணார்விடையான்விளமர்வெண்ணிமீயச்சூர்வீழிமிழலைமிக்கார்
கண்ணார்நுதலார்கரபுரமுங்காபாலியாரவர்தங்காப்புக்களே.

சுவாமி-ஸ்ரீமூர்க்கசகாயநாதர், தேவி-மரகதவல்லியம்மை.

---

திருவொற்றியூர்-அப்பர்-திருநேரிசை.

ஓம்பினேன்கூட்டைவாளாவுள்ளத்தோர்கொடுமைவைத்துக்
காம்பிலாமூழைபோலக்கருதிற்றேமுகக்கமாட்டேன்
பாம்பின்வாய்த்தேரைபோலப்பலபலநினைக்கின்றேனை
ஓம்பிநீயுய்யக்கொள்ளாயொற்றியூருடையகோவே.

மனமெனுந்தோணிபற்றிமதியெனுங்கோலையூன்றிச்
சினமெனுஞ்சரக்கையேற்றிச்செறிகடலோடும்போது
மதனெனும்பாறைதாக்கிமறியும்போதறியவொண்ணா
துனையுனுமுணர்வைநல்காயொற்றியூருடையகோவே.

சுவாமி—மாணிக்கத்தியாகர், தேவி—வடிவுடைநாயகி.

---

திருமயிலாப்பூர்-சம்பந்தர்-பண்-சீகாமரம்.

மட்டிட்டபுன்னையங்கானன்மடமயிலைக்
கட்டிட்டங்கொண்டான்கபாலீச்சரமமர்ந்தான்
ஒட்டிட்டபண்பினுருத்திரபல்கணத்தார்க்
கட்டிட்டல்காணாதேபோதியோபூம்பாவாய்.

Pry not into others' letters.

திருமழபாடி-சுந்தரர்-பண்-நட்டராகம்.

பொன்னார்மேனியனேபுலித்தோலையரைக்கசைத்து
மின்னார்செஞ்சடைமேன்மிளிர்கொன்றையணிந்தவனே
மன்னேமாமணியேமழபாடியுண்மாணிக்கமே
அன்னேயுன்னையல்லாலினியாரைநினைக்கேனே.

கீளார்கோவணமுந்திருநீறுமெய்பூசி யுன்றன்
தாளேவந்தடைந்தேன்றலைவாவெனையேன்றுகொணீ
வாளார்கண்ணிபங்காமழபாடியுண்மாணிக்கமே
ஆளாய்நின்னையல்லாலினியாரைநினைக்கேனே.

திருத்தூங்கானைமாடம்-அப்பர்-பண்-திருவிருத்தம்

பொன்னார்திருவடிக்கொன்றுண்டுவிண்ணப்பம்போற்றிசெய்யு
மென்னாவிகாப்பதற்கிச்சையுண்டேலிருங்கூற்றகல
மின்னாருருவமிலைச்சூலமென்மேற்பொறிமேவுகொண்டல்
துன்னார்கடந்தையுட்டூங்கானைமாடச்சுடர்க்கொழுந்தே.

திருவாலங்காடு-சுந்தரர்-பண்-பழம்பஞ்சுரம்.

முத்தாமுத்தித்தரவல்லமுகிழ்மென்முலையாளுமைபங்கா
சித்தாசித்தித்திறங்காட்டுஞ்சிவனேதேவர்சிங்கமே
பத்தாபத்தர்பலர்போற்றும்பரமாபழையனூர்மேய
அத்தாவாலங்காடாவுன்னடியார்க்கடியேனாவேனே.

சுவாமி-ஊர்த்ததாண்டவர்—தேவி-வண்டார்குழலியம்மை.

திருவிராமேச்சுரம்-சம்பந்தர்-பண்-காந்தாரபஞ்சமம்.

அலைவளர்தண்மதியோடயலேயடக்கியுமை
முலைவளர்பாகமுயங்கவல்லமுதல்வன்முனி
இலைவளர்தாழைகள்விம்முகானலிராமேச்சுரம்
தலைவளர்கோலநன்மாலையன்றானிருந்தாட்சியே.

திரிதரும்மாமணிநாகமாடத்திளைத்தொருதீயழல்வாய்
விரிதிக்கவெரியேந்தியாடுநலமேதெரிந்துணர்வார்
எரிகதிர்முத்தமிலங்குகானலிராமேச்சுரமேய
விரிகதிர்வெண்பிறைமல்குசென்னிவிமலர்செயுஞ்செயலே.

அப்பர்-திருநேரிசை.

பாசமுங்கழிக்ககில்லாவரக்கரைப்படுத்துத்தக்க
வாசமிக்கலர்கள்கொண்டுமதியினான்மால்செய்கோயில்
நேசமிக்கன்பினாலேநினைமினீர்நின்றுநாளுந்
தேசமிக்கானிருந்ததிருவிராமேச்சுரமே.

சுவாமி—இராமநாதர், தேவி—பருவதவர்த்தனி.

## தொண்டைநாட்டு ஸ்தல பதிகங்கள்

1. திருக்கச்சியேகம்பம்—அப்பர்.

கரவாடும்வன்னெஞ்சர்க்கரியானைக்கரவார்பால்
விரவாடும்பெருமானைவிடையேறும்வித்தகனை
அரவாடச்சடைதாழவங்கையினிலனலேந்தி
இரவாடும்பெருமானையென்மனத்தேவைத்தேனே

* 2. திருக்கச்சிமேற்றளி அப்பர்.

மறையது பாடிப்பிச்சைக்கென்றகந்திரிந்து வாழ்வார்
பிறையது சடைமுடிமேற்பெய்வளையாடனோடே
கறையது கண்டங்கொண்டார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
இறையவர்பாடலாடலிலங்குமேற்றளியனாரே.

* 3. திருவோணகாந்தன்றளி—சுந்தரர்.

நெய்யும்பாலுந்தயிருங்கொண்டுநித்தல்பூசனைசெய்யலுற்றார்
கையிலொன்றுங்காணமில்லைக் கழலடிதொழுதுய்யினல்லால
ஐவர்கொண்டிங்காட்டவாடியாழ்குழிப்பட்டழுந்துவேற்கு
உய்யுமாறென்றருளிச்செய்யீரோணகாந்தன்றளியுளீரே.

* 4. திருக்கச்சியனேகதங்காவதம்—சுந்தரர்.

தேனெய்புரிந்துழல்செஞ்சடையெம்பெருமானதிடந்திகழைங்க
ணையக், கோனையெரித்தெரியாடியிடங்குலவானதிடங்குறையாம
லையா, மானையிடத்ததொர்கையனிடமதமாறுபடப்பொழியும்
மலைபோல், யானையுரித்தபிரானதிடங்கலிக்கச்சியனேகதங்காவத
மே

* 5 திருக்கச்சிநெறிக்காரைக்காடு—சம்பந்தர்.

வாரணவுமுலைமங்கைபங்கினராயங்கையினில்
போரணவுமழுவொன்றங்கேந்திவெண்பொடியணிவர்
காரணவுமணிமாடங்கடைநவின்றகலிக்கச்சி
நீரணவுமலர்ப்பொய்கைநெறிக்காரைக்காட்டாரே.

* 6. திருக்குரங்கணின்முட்டம்—சம்பந்தர்.

விழுநீர்மழுவாட்படையண்ணல்விளங்கும்
கழுநீர்குவளைம்மலரக்கயல்பாயும்
கொழுநீர்வயல்சூழ்ந்தகுரங்கணின்முட்டம்
தொழுநீர்மையர்தீதுறுதுன்பமிலரே.

First be just, then you may be generous.

* 7. திருமாகறல்—சம்பந்தர்.

விங்குவிளைகழனிமிகுகடைசியர்கள்பாடல்விளையாடலரவம்
மங்குலொடுநீள்கொடிகண்மாடமலிநீடுபொழின்மாகறலுளான்
கொங்குவிரிகொன்றையொடுகங்கைவளர்திங்களணிசெஞ்சடையி
னன், செய்கண்விடையண்ணலடிசேர்பவர்கடீவினைகடீருமுடனே.

*8. திருவோத்தூர்—சம்பந்தர்.

பூத்தேர்ந்தாயனகொண்டுநின்பொன்னடி
ஏத்தாதாரில்லையெண்ணுங்கால்
ஓத்தூர்மேயவொளிமழுவாளங்கைக்
கூத்தீருமகுணங்களே.

*9. திருவன்பார்த்தான்பனங்காட்டூர்—சுந்தரர்.

விடையின்மேல்வருவானைவேதத்தின்பொருளானை
அடையிலன்புடையானையாவர்க்குமறிவொண்ணு
மடையில்வாளைகள்பாயும்வன்பார்த்தான்பனங்காட்டூர்ச்
சடையிற்கங்கைதரித்தானைச்சாராதார்சார்பென்னே.

10. திருவல்லம்—சம்பந்தர்.

எரித்தவன்முப்புரமெரியின்மூழ்கத்
தரித்தவன்கங்கையைத்தாழ்சடைமேல்
விரித்தவன்வேதங்கள்வேறுவேறு
தெரித்தவனுறைவிடந்திருவல்லமே.

* 11. திருமாற்பேறு—சம்பந்தர்.

ஊறியார்தருநஞ்சினையுண்டுமை
நீறுசேர்திருமேனியர்
சேறுசேர்வயற்றென்னிருமாற்பேற்றின்
மாறிலாமணிகண்டரே.

12 திருவூறல்—(திருவாலங்காடு) சம்பந்தர்.

மாறிலவுணரரணம்மவைமாயவோர்வெங்கணையாலன்று
நீறெழவெய்தவெங்கணிமலனிடமினவில்
தேறலிரும்பொழிலுந்திகழ்செங்கயல்பாய்வயலுஞ்சூழ்ந்த
ஊறலமர்ந்தபிரானொலியார்கழலுள்குதுமே.

*காஞ்சிபுரம். Hasty climbers have a sudden fall

13 திருவிலம்பையங் கோட்டூர்—(கடம்பந்தூர்)—சம்பந்தர்.

மலையினார்பருப்பதந் துருத்திமாற்பேறுமாசிலாச்சீர்மறைக்காடுநெ
ய்த்தாண, நிலையினானெனதுரை தனதுரையாகநீறணிந்தேறுகந்தே
றியநிமலன், கலையினார்மடப்பிணை துணையொடுந்துயிலக்கானலம்
பெடைபுல்கிக்கணமயிலாலு, மிலையினார்பைம்பொழிலிலம்பையங்
கோட்டூரிருக்கையாப்பேணியென்னெழில்கொள்வதியல்பே.

14 திருவிற்கோலம் (கடம்பத்தூர்)—சபம்ந்தர்.

உருவினாருமையொடுமொன்றிநின்றதோர்
திருவினான்வளர்சடைதிங்கள்கங்கையான்
வெருவிவானவர்தொழவெகுண்டுநோக்கிய
செருவினாறுறைவிடந்திருவிற்கோலமே.

15 திருவாலங்காடு—சம்பந்தர்.

துஞ்சவருவாருந்தொழுவிப்பாரும்வழுவிப்போய்
நெஞ்சம்புகுந்தென்னைநினைவிப்பாருமுனைநட்பாய்
வஞ்சப்படுத்தொருத்திவாணாள்கொள்ளும்வகைகேட்
டஞ்சும்பழையனூராலங்காட்டெம்மடிகளே.

16 திருப்பாசூர் (திருவள்ளூர்)—சம்பந்தர்.

சிந்தையிடையார்தலையின்மிசையார்செஞ்சொல்லார்
வந்துமாலைவைகும்போழ்தென்மனத்துள்ளார்
மைந்தர்மணாளரென்னமகிழ்வாரூர்போலும்
பைந்தண்மாதவிசோலைசூழ்ந்தபாசூரே

17 திருவெண்பாக்கம் (திருவள்ளூர்)—சுந்தரர்.

பிழையுளனபொறுத்திடுவரென்றடியேன்பிழைத்தக்கால்
பழியதனைப்பாராதேபடலமென்கண்மறைப்பித்தாய்
குழைவிரவுவடிகாதாகோயிலுளாயேயென்ன
உழையுடையானுள்ளிருந்துவுளோம்போகீரென்றானே.

18 திருக்கள்ளில் (ஆவடி)—சம்பந்தர்.

முள்ளின்மேன்முதுகூகைமுரலுஞ்சோலை
வெள்ளின்மேல்விடுகூறைக்கொடிவிளைந்த
கள்ளின்மேயவண்ணல்கழல்கணாளும்
உள்ளுமேலுயர்வெய்தலொருதலையே.

19 திருக்காளத்தி—சுந்தரர்.

மறிசேர்கையினனேமதமாவுரிபோர்த்தவனே
குறியேயென்னுடையகுருவேயுன்குற்றேவல்செய்வேன்
நெறியேநின்றடியார்நினைக்குந்திருக்காளத்தியுள்
அறிவேயுன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே.

**Great talkers are not great doers.**

20 திருவொற்றியூர்—அப்பர்.

தானத்தைச்செய்துவாழ்வான்சலத்துளேயழுந்துகின்றீர்
வானத்தைவணங்கவேண்டில்வம்மின்கள்வல்லீராகிச்
ஞானத்தைவிளக்கையேற்றிநாடியுள்விரவவல்லார்
ஊனத்தையொழிப்பர்போலுமொற்றியூருடையகோவே.

21 திருவலிதாயம் (வில்லிவாக்கம்)—சம்பந்தர்.

பத்தரோடுபலரும்பொலியம்மலரங்கைப்புனறூவி
ஒத்தசொல்லியுலகத்தவர்தாந்தொழுதேத்தவுயர்சென்னி
மத்தம்வைத்தபெருமான்பிரியாதுறைகின்றவலிதாயம்
சித்தம்வைத்தவடியாரவர்மேலடையாமற்றிடர்நோயே.

22 வடதிருமுல்லைவாயில் (அம்பத்தூர்)—சுந்தரர்.

திருவுமெய்ப்பொருளுஞ்செல்வமுமெனக்குன்சீருடைக்கழல்க
ளென்றெண்ணி, யொருவரைமதியாதுறாமைகள்செய்துமூடியுமு
றைப்பனாய்த்திரிவேன், முருகமர்சோலைசூழ்திருமுல்லைவாயிலாய்
வாயினாலுன்னைப், பரவிடுமடியேன்படுதுயர்களையாய் பாசுபதாபர
ஞ்சுடரே.

23 திருவேற்காடு (ஆவடி)—சம்பந்தர்.

ஒள்ளிதுள்ளக்கதிர்காமிவனொளி
வெள்ளியானுறைவேற்காடு
உள்ளியாருயர்ந்தாரிவ்வுலகினில்
தெள்ளியாரவர்தேவரே.

24 திருமயிலாப்பூர்—சம்பந்தர்.

கானமர்சோலைக்கபாலீச்சரமமர்ந்தான்
தேனமர்பூம்பாவைப்பாட்டாகச்செந்தமிழான்
ஞானசம்பந்தனலம்புகழ்ந்தபத்தும்வல்லார்
வானசம்பந்தத்தவரோடும்வாழ்வாரே.

சுவாமி—கபாலீசுவரர், தேவி—கற்பகவல்லித்தாயார்.

25 திருவான்மியூர்—சம்பந்தர்.

கரையுலாங்கடலிற்பொலிசங்கம்வெள்ளிப்பிவன்
திரையுலாங்கழிமீனுகளுந்திருவான்மியூர்
உரையுலாம் பொருளாயுலகாளுடையீர்சொலீர்
வரையுலாமடமாதுடனாகியமாண்பதே.

26 திருக்கச்சூராலக்கோயில் (சிங்கபெருமாள் கோயில்)—சுந்தரர்.

முதுவாயோரிகதறமுதுகாட் டெரிகொண்டாடன்முயல்வானே
மதுவார்கொன்றைப்புதுவீசூடுமலையான்மகடன்மணவாளா
கதுவாய்த்தலைபிற்பலிநீகொள்ளக்கண்டாலடியார்கவலாரே
அதுவேயாமாறிதுவோகச்சூராலக்கோயிலம்மானே.

Little comforts be get much happiness.

27 திருவிடைச்சுரம் (செங்கல்பட்டு)—சம்பந்தர்.

வரிவளரவிரொளியரவரை தாழவார்சடைமுடிமிசைவளர்மதிசூடிக் கரிவளர்தருகழல்கால்வலனேந்திக்கனலெரியாடுவர்காடரங்காக விரிவளர்தருபொழிலிளமயிலாலவெண்ணிறத்தருவிகடிண்ணென வீழு, மெரிவளரினமணிபுனமணிசாரலிடைச்சுரமேவியவிவர்வண மென்னே.

28 திருக்கழுக்குன்றம்—சம்பந்தர்.

தோடுடையானொருகாதிற்றூயகுழைதாழ
ஏடுடையான்றன்றலைகலனாகவிரந்துண்ணும்
நாடுடையானள்ளிருளேமநடமாடும்
காடுடையான்காதல்செய்கோயில்கழுக்குன்றே.

29 திருவச்சிறுபாக்கம்—சம்பந்தர்.

பொன்றிரண்டன்னபுரிசடைபுரளப்பொருகடற்பவளமொடழனிறம்புரையக், குன்றிரண்டன்னதோளுடையகலங்குலாயவெண்ணூலொடுகொழும்பொடியணிவர், மின்றிரண்டன்னநுண்ணிடையரிவைமெல்லியலாளைபோர்பாகமாப்பேணி, யன்றிரண்டுருவமாயவெம்மடிகளச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே.

30 திருவக்கரை—சம்பந்தர்.

கறையணிமாமிடற்றான்கரிகாடரங்காவுடையான்
பிறையணிகொன்றையினானொருபாகமும்பெண்ணமர்ந்தான்
மறையவன்றன்றலையிற்பலிகொள்பவன்வக்கரையில்
உறைபவனெங்கள்பிரானொலியார்கழலுள்குதுமே.

31 திருவரசிலி (மைலம்)—சம்பந்தர்.

பாடல்வண்டறைகொன்றைபான்மதிபாய்புனற்கங்கை
கோடல்கூவிளமாலைமத்தமுஞ்செஞ்சடைக்குலாவி
வாடல்வெண்டலைமாலைமருவிடவல்லியந்தோண்மேல்
ஆடன்மாசுணமசைத்தவடிகளுக்கிடமரசிலியே.

32 திருவிரும்பைமாகாளம் (மைலம்)—சம்பந்தர்

மண்டுகங்கைசடையிற்கரந்தும்மதிசூடிமான்
கொண்டகையாற்புரமூன்றெரித்தகுழகன்னிடம்
எண்டிசையும்புகழ்போய்விளங்குமிரும்பைதனுள்
வண்டுகீதம்முரல்பொழில்சூலாய்நின்றமாகாளமே.

திருச்சிற்றம்பலம்.

**Father is kind, mother kinder, but God kindest of all.**

## கொங்கு நாட்டு ஸ்தல பதிகங்கள்.

1 திருப்புக்கொளியூரவிநாசி—சுந்தரர்.

எற்றான்மறக்கேனெழுமைக்குமெம்பெருமானையே
உற்றாயென்றுன்னையேயுள்குகின்றேனுணர்ந்துள்ளத்தால்
புற்றாடரவாப்புக்கொளியூரவிநாசியே
பற்றாகவாழ்வேன்பசுபதியேபரமேட்டியே.

2 திருமுருகன்பூண்டி—சுந்தரர்.

கொடுகுவெஞ்சிலைவடுகவேடுவர்விரவலாமைசொல்லித்
திடுகுமொட்டெனக்குத்திக்கூறைகொண்டாறலைக்குமிடம்
முடுகுநாறியவடுகர்வாழ்முருகன்பூண்டிமாநகர்வாய் [ரானிரே.
இடுகுநுண்ணிடைமங்கைதன்னொடுமெத்துக்கிங்கிருந்தீரெம்பி

3 திருநணா (பவானி)—சம்பந்தர்.

பந்தார்விரன்மடவாள்பாகமாநாகம்பூண்டேறதேறி
அந்தாரரவணிந்தவம்மானிடம்போலுமந்தண்சாரல்
வந்தார்மடமந்திகூத்தாடவார்பொழிலில்வண்டுபாடச்
செந்தேன்றெளியொளிரத்தேமாங்கனியுதிர்க்குந்திருநணாவே.

4 திருக்கொடிமாடச்செங்குன்றூர்—சம்பந்தர்.

வெந்தவெண்ணீறணிந்துவிரிநூறிகழ்மார்பினல்ல
பந்தணவும்விரலாளொருபாகமமர்ந்தருளிக்
கொந்தணவும்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்நின்ற
அந்தணனைத்தொழுவாரவலமறுப்பாரே.

5 திருவெஞ்சமாக்கூடல்—சுந்தரர்.

எறிக்குங்கதிர்வேயுதிர்முத்தமொடேலமிலவங்கந்தக்கோலமிஞ்சி
செறிக்கும்புனலுட்பெய்துகொண்டுமண்டித்திளைத்தெற்றுசிற்றா
றதன்கீழ்க்கரைமேன்,முறிக்குந்தழைமாமுடப்புன்னைஞாழல்குருக்
கத்திகண்மேற்குயில்கூவலறா, வெறிக்குங்கலைமாவெஞ்சமாக்கூடல்
விகிர்தாவடியேனையும்வேண்டுதியே.

6 திருப்பாண்டிக்கொடுமுடி—சம்பந்தர்.

பெண்ணமர்மேனியினாரும்பிறைபுல்குசெஞ்சடையாரும்
கண்ணமர்நெற்றியினாருங்காதமருங்குழையாரும்
எண்ணமருங்குணத்தாருமிமையவரேத்தநின்றாரும்
பண்ணமர்பாடலினாரும்பாண்டிக்கொடுமுடியாரே.

7 திருக்கருவூரானிலை—சம்பந்தர்.

தொண்டெலாமலர்தூவியேத்தநஞ்
சுண்டலாருயிராயதன்மையர்
கண்டனார்கருவூருளானிலை
அண்டனாருளீயுமன்பரே.

Pleasure is precarious but virtue is immortal.

## பொது தேவாரம்.

அப்பர்.

மாசில்வீணையுமாலைமதியமும்
வீசுதென்றலும்வீங்கிளவேனிலும்
மூசுவண்டறைபொய்கையும்போன்றதே
ஈசனெந்தையிணையடிநீழலே.

வாழ்த்தவாயுநினைக்கமடநெஞ்சும்
தாழ்த்தச்சென்னியுந்தந்ததலைவனைச்
சூழ்த்தமாமலர் தூவித்துதியாதே
வீழ்த்தவாவினையேனெடுங்காலமே.

விறகிற்றீயினன்பாலிற்படுநெய்போல்
மறையநின்றுளன்மாமணிச்சோதியான்
உறவுகோனட்டுணர்வுகயிற்றினால்
முறுகவாங்கிக்கடையமுன்னிற்குமே.

(இஃது சுரம்தீரும்பொருட்டுப் பாடியது.)

திருநீலகண்டம்-சம்பந்தர்.

அவ்வினைக்கிவ்வினையாமென்றுசொல்லுமஃதறிவீர்
உய்வினைநாடாதிருப்பதுமுந்தமக்கூனமன்றே
கைவினைசெய்தெம்பிரான்கழல்போற்றுதுநாமடியோஞ்
செய்வினைவந்தெமைத்தீண்டப்பெறாதிருநீலகண்டம்.

காவினையிட்டுங்குளம்பலதொட்டுங்கனிமனத்தால்
ஏவினையாலெயின்மூன்றெரித்தீரென்றிருபொழுதும்
பூவினைக்கொய்துமலரடிபோற்றுதுநாமடியோம்
தீவினைவந்தெமைத்தீண்டப்பெறாதிருநீலகண்டம்.

முலைத்தடமூழ்கியபோகங்களுமற்றெவையுமெல்லாம
விலைத்தலையாவணங்கொண்டெமையாண்டவிரிசடையீர்
இலைத்தலைச்சூலமுந்தண்டுமழுவுமிவையுடையீர்
சிலைத்தெமைத்தீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம்.

விண்ணுலகாள்கின்றவிச்சாதரர்களும்வேதியரும்
புண்ணியரென்றிருபோதுந்தொழப்படும்புண்ணியரே
கண்ணிமைபாதனீர்மூன்றுடையீருங்கழலடைந்தோம்
திண்ணியதீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம்.

**Morning is welcome to the industrious.**

மற்றிணையில்லாமலை திரண்டன்ன திண்டோளுடையீர்
கிற்றெமையாட்கொண்டுகேளா தொழிவதுந்தன்மைகொலோ
சொற்றுணைவாழ்க்கைதுறந்துன்றிருவடியேயடைந்தோம்
செற்றெமைத்தீவினை தீண்டப்பெறா திருநீலகண்டம்.

மறக்குமனத்தினை மாற்றியெமமாவியைவற்புறுத்திப்
பிறப்பில்பெருமான்றிருந்தடிக்கீழ்ப்பிழையாதவண்ணம்
பறித்தமலர்கொடுவந்துமையேத்தும்பணியடியோம்
சிறப்பிலித்தீவினை தீண்டப்பெறா திருநீலகண்டம்.

கருவைக்கழித்திட்டுவாழ்க்கைகடிந்துங்கழலடிக்கே
உருகிமலர்கொடுவந்துமையேத்துதுநாமடியோம்
செருவிலரக்கனைச்சீரிலடர்த்தருள்செய்தவரே
திருவிலித்தீவினை தீண்டப்பெறா திருநீலகண்டம்.

நாற்றமலர்மிசைநான்முகனாரணன்வாதுசெய்து
தோற்றமுடையவடியுமுடியுந்தொடர்வரியீர்
தோற்றினுந்தோற்றுந்தொழுதுவணங்குதுநாமடியோம்
சீற்றமதாம்வினை தீண்டப்பெறா திருநீலகண்டம்.

சாக்கியப்பட்டுஞ்சமணுருவாகியுடையொழிந்தும்
பாக்கியமின்றியிருதலைப்போகமும்பற்றும்விட்டார்
பூக்கமழ்கொன்றைப்புரிசடையீரடிபோற்றுகின்றோம்
தீக்குழித்தீவினை தீண்டப்பெறா திருநீலகண்டம்.

பிறந்தபிறவியிற்பேணியெஞ்செல்வன்கழலடைவான்
இறந்தபிறவியுண்டாகிலிமையவர்கோனடிக்கண்
திறம்பயின்ஞானசம்பந்தனசெந்தமிழ்பத்தும்வல்லார்
நிறைந்தவுலகினில்வானவர்கோனொடுங்கூடுவரே.

அப்பர்-திருவங்கமாலை-பண்-சாதாரி.

தலையேநீவணங்காய்-தலை-மாலை தலைக்கணிந்து
தலையாலேபலிதேருந்தலைவனைத்-தலையேநீவணங்காய்.

கண்காள்காண்மின்களோ-கடல்-நஞ்சுண்டகண்டன்றன்னை
எண்டோள்வீசிநின்றாடும்பிரான்தன்னைக்-கண்காள்காண்மின்களோ.

செவிகாள்கேண்மின்களோ-சிவன்-எம்மிறைசெம்பவள
எரிபோன்மேனிப்பிரான்றிறமெப்போதும்-செவிகாள்கேண்மின்களோ.

மூக்கேநீமுரலாய்-முது-காடுறைமுக்கணனை
வாக்கேநோக்கியமங்கைமணாளனை-மூக்கேநீமுரலாய்.

வாயேவாழ்த்துகண்டாய்-மத-யானையுரிபோர்த்துப்
பேய்வாழ்காட்டகத்தாடும்பிரான்றன்னை-வாயேவாழ்த்துகண்டாய்.

நெஞ்சேநீநினையாய்-நிமிர்-புன்சடைநின்மலனை
மஞ்சாடும்மலைமங்கைமணாளனை-நெஞ்சேநீநினையாய்.

கைகாள்கூப்பித்தொழீர்-கடி-மாமலர்தூவிநின்று
பைவாய்ப்பாம்பரையார்த்தபரமனைக்-கைகாள்கூப்பித்தொழீர்.

ஆக்கையாற்பயனென்-னரன்-கோயில்வலம்வந்து
பூக்கையாலட்டிப்போற்றியென்னாதவிவ்-வாக்கையாற்பயனென்.

கால்களாற்பயனென்-கறைக்-கண்டனுறைகோயில்
கோலக்கோபுரக்கோகரணஞ்சூழக்-கால்களாற்பயனென்.

உற்றாராருளரோ-உயிர்-கொண்டுபோம்பொழுது
குற்றாலத்துறைகூத்தனல்லானமக்-குற்றாராருளரோ.

இறுமாந்திருப்பன்கொலோ-வீசன்-பல்கணத்தெண்ணப்பட்டுச்
சிறுமானேந்திதன்சேவடிக்கீழ்ச்சென்றங்-கிறுமாந்திருப்பன்கொ

தேடிக்கண்டுகொண்டேன்-திரு-மாலொடுநான்முகனும் [லோ.
தேடித்தேடொணாத்தேவனையென்னுளே-தேடிக்கண்டுகொண்
டேன்.

தனிமையான பெருமையைக்குறித்த பதிகங்கள்.

உடம்பெனுமனையகத்துள்ளமேதகளியாக
மடம்படுமுணர்நெய்யட்டியுயிரெனுந்திரிமயக்கி
இடம்படுஞானத்தீயாலெரிகொளவிருந்துநோக்கில்
கடம்பமாகாளைதாதைகழலடிகாணலாமே.

வஞ்சப்பெண்ணரங்குகோயில்வாளெயிற்றரவந்துஞ்சா
வஞ்சப்பெண்ணிருந்தசூழல்வான்றவழ்மதியுந்தோயும்
வஞ்சப்பெண்வாழ்க்கையாளன்வாழ்வினைவாழலுற்று
வஞ்சப்பெண்ணுறக்கமானேன்வஞ்சனேனென்செய்கேனே.

மோத்தையைக்கண்டகாக்கைபோலவல்வினைகண்மொய்த்துன்
வார்த்தையைப்பேசவொட்டாமயக்கநான்மயங்குகின்றேன்
சீத்தையைச்சிதம்புதன்னைச்செடிகொணோய்வடிவொன்றில்லா
ஊத்தையைக்கழிக்கும்வண்ணமுணர்வுதாவுலகமூர்த்தீ.

அங்கத்தைமண்ணுக்காக்கியார்வத்தையுனக்கேதந்து
பங்கத்தைப்போகமாற்றிப்பாவித்தேன்பரமாநின்னைச
சங்கொத்தமேனிச்செல்வாசாதனாளேயேனுன்னை
எங்குற்றாயென்றபோதாவிங்குற்றேனென்கண்டாயே.

மெய்ம்மையாமுழவைச்செய்துவிருப்பெனும்வித்தைவித்திப்
பொய்ம்மையாங்களையைவாங்கிப்பொறையெனுநீரைப்பாய்ச்சித்
தம்மையுநோக்கிக்கண்டுதகவெனும்வேலியிட்டுச்
செம்மையுணிற்பராகிற்சிவகதிவிளையுமன்றே.

Preseverance is the bridge by which difficu lty is overcome.

காயமேகோயிலாகக்கடிமனமடிமையாக
வாய்மையேதூய்மையாகமனமணியிலிங்கமாக
நேயமேநெய்யும்பாலாநிறையநீரமையவாட்டிப்
பூசனையீசனார்க்குப்போற்றவிக்காட்டினோமே.

நடுவிலாக்காலன்வந்துநணுகும்போதறியவொண்ணா
அடுவனவஞ்சுபூதமவைதமக்காற்றலாகேன்
படுவனபலவுங்குற்றம்பாங்கிலாமனிதர்வாழ்க்கை
கெடுவதிப்பிறவிசீசீகிளரொளிச்சடையினீரே.

விளக்கினார்பெற்றவின்பமெழுகினாற்பதிற்றியாகும்
துளக்கினன்மலர்தொடுத்தாற்றூயவிண்ணேறலாகும்
விளக்கிட்டார்பேறுசொல்லின்மெய்ஞ்ஞெறிஞானமாகும்
அளப்பிலகீதஞ்சொன்னார்க்கடிகடாமருளுமாறே,

கற்றிலேன்கலைகண்ஞானங்கற்றவர்தங்களோடும்
உற்றிலேனாதலாலேயுணர்வுக்குஞ்சேயனானேன்
பெற்றிலேன்பெருந்தடங்கட்பேதைமார்தமக்கும்பொல்லேன்
எற்றுளேனிறைவனேநானென்செய்வான்றோன்றினேனே.

மக்களேமணந்ததாரமவ்வயிற்றவரையோம்பும்
சிக்குளேயழுந்தியீசன்றிறம்படேன்றவமதோரேன்
கொப்புளேபோலத்தோன்றியதனுளேமறையக்கண்டும்
இக்களேபரத்தையோம்பவென்செய்வான்றோன்றினேனே.

முன்னையென்வினையினாலேமூர்த்தியைநினையமாட்டேன்
பின்னைநான்பித்தனாகிப்பிதற்றுவன்பேதையேனான்
என்னுளேமன்னிநின்றசீர்மையதாயினானை
என்னுளேநினையமாட்டேனென்செய்வான்றோன்றினேனே.

வளைத்துநின்றைவர்கள்வர்வந்தெனைநடுக்கஞ்செய்யத்
தளைத்துவைத்துலையையேற்றித்தழலெரிமடுத்தநீரில்
திளைத்துநின்றாடுகின்றவாமைபோற்றெளிவிலாதேன்
இளைத்துநின்றாடுகின்றேனென்செய்வான்றோன்றினேனே.

தாரித்திரந்தவிராவடியார்தடுமாற்றமென்னும்
மூரித்திரைப்பௌவநீக்குகண்டாய்முன்னைநாளொருகால்
வேரித்தண்பூஞ்சுடரைங்கணைவேள்வெந்துவீழச்செந்தீப்
பாரித்தகண்ணுடையாயெம்மையாளுமபசுபதியே.

வானந்துளங்கிலென்மண்கம்பமாகிலென்மால்வரையும்
தானந்துளங்கித்தலைதடுமாறிலென்றண்கடலும்
மீனம்படிலென்விரிசுடர்வீழிலென்வேலைநஞ்சுண்
டூனமொன்றில்லாவொருதனுக்காட்பட்டவுத்தமர்க்கே.

முருகார்நறுமலரிண்டைதழுவிவண்டேமுரலும்
பெருகாறடைசடைக்கற்றையினாய்பிணிமேய்ந்திருந்த
இருகாற்குரம்பையிதுநானுடையதிதுபிரிந்தால்
தருவாயெனக்குன்றிருவடிக்கீழோர்தலைமறைவே.

ஏயிலானையெனிச்சையகம்படிக்
கோயிலானைக்குணப்பெருங்குன்றினை
வாயிலானைமனோன்மணியைப்பெற்ற
தாயிலானைத்தழுவுமென்னாவியே.

முன்னைஞானமுதற்றனிவித்தினைப்
பின்னைஞானப்பிறங்குசடையனை
என்னைஞானத்திருளறுத்தாண்டவன்
தன்னைஞானத்தளையிட்டுவைப்பனே.

ஞானத்தாற்றொழுவார்சிலஞானிகள்
ஞானத்தாற்றொழுவேனுனைநானலேன்
ஞானத்தாற்றொழுவார்கடொழக்கண்டு
ஞானத்தாயுனைநானுந்தொழுவனே.

புழுவுக்குங்குணநான்கெனக்குமதே
புழுவுக்கிங்கெனக்குள்ளபொல்லாங்கில்லை
புழுவினுங்கடையேன்புனிதன்றமர்
குழுவுக்கெவ்விடத்தேன்சென்றுகூடவே.

காள
நிலையினின்றுகலங்கப்பெறுதிரேல்:
தலைவனாகியவீசன்றமர்களைக்
கொலைசெய்யானைதான்கொன்றிடுற்குமே.

கற்றுக்கொள்வனவாயுளநாவுள
இட்டுக்கொள்வனபூவுளநீருள
கற்றைச்செஞ்சடையானுளனாமுளோம
எற்றுக்கோநமனான்முனிவுண்பதே.

மனிதர்காளிங்கேவம்மொன்றுசொல்லுகேன்
கனிதந்தாற்கனியுண்ணவும்வல்லிரோ
புனிதன்பொற்கழலீசனெனுங்கனி
இனிதுசாலவுமேசற்றவர்கட்கே.

என்னையேதுமறிந்திலனெம்பிரான்
தன்னைநானுமுன்னேதுமறிந்திலேன்
என்னைத்தன்னடியானென்றறிதலும்
தன்னைநானும்பிரானென்றறிந்தேனே.

Economy is the easy chair of old age.

தெள்ளத்தேறித்தெளிந்துதித்திப்பதோர்
உள்ளத்தேறலமுதவொளிவெளி
கள்ளத்தேன்கடியேன்கவலைக்கடல்
வெள்ளத்தேனுக்கெவ்வாறுவிளைந்ததே.

பற்பல்காலம்பயிற்றிப்பரமனைச்
சொற்பல்காலநின்றேத்துமின்றொல்வினை
வெற்பிற்றோன்றியவெங்கதிர்கண்டவப்
புற்பனிக்கெடுமாறதுபோலுமே.

இளமைகவிட்டகறுவுமூப்பினர்
வளமைபோய்ப்பிணியோடுவருதலால்
உளமெலாமொளிபாய்மதியாயினோன்
கிளமையேகிளையாகநினைப்பனே.

தன்னிற்றன்னையறியுந்தலைமகன்
தன்னிற்றன்னையறியிற்றலைப்படும்
தன்னிற்றன்னையறிவிலனாயிடில்
தன்னிற்றன்னையுஞ்சார்தற்கரியனே.

பாவமும்பழிபற்றறவேண்டுவீர்
ஆவிலஞ்சுகந்தாடுமவன்கழல்
மேவராய்ப்புகழ்மொழிந்துள்குடின்
காவலாளன்கலந்தருள்செய்யுமே.

கங்கையாடிலென்காவிரியாடிலென்
கொங்குதண்குமரித்துறையாடிலென்
ஓங்குமாகடலோதநீராடிலென்
எங்குமீசனெனாதவர்க்கில்லையே.

வேதமோதிலென்சாத்திரங்கேட்கிலென்
நீதிநூலபலநித்தல்பயிற்றிலென்
ஓதியங்கமோராறுமுணரிலென்
ஈசனையுள்குவார்க்கன்றியில்லையே.

காலைசென்றுகலந்துநீர்மூழ்கிலென்
வேலைதோறும்விதிவழிநிற்கிலென்
ஆலைவேள்வியடைந்ததுவேட்கிலென்
ஏலவீசனென்பார்க்கன்றியில்லையே.

கானநாடுகலந்துதிரியிலென்
ஈனமின்றியிருந்தவஞ்செய்யிலென்
ஊனையுண்டலொழிந்துவானோக்கிலென்
ஞானனென்பவர்க்கன்றிநன்கில்லையே.

நன்றுநோற்கிலென்பட்டினியாகிலென்
குன்றமேறியிருந்தவஞ்செய்யிலென்
சென்றுநீரிற்குளித்துத்திரியிலென்
என்றுமீசனென்பார்க்கன்றியில்லையே.

செத்துச்செத்துச்பிறப்பதேதேவென்று
பத்திசெய்மனப்பாறைகட்கேறுமோ
அத்தனென்றரியோடுபிரமனும்
துத்தியஞ்செயநின்றநற்சோதியே.

நாறுகோடிபிரமர்களொழிந்தனர்
ஆறுகோடிநாராயணரங்ஙனே
ஏறுகங்கைமணலெண்ணிலிந்திரர்
ஈறிலாதவனீசனொருவனே.

வாதுசெய்துமயங்குமனத்தராய்
ஏதுசொல்லுவீராகிலுமேழைகாள்
யாதோர்தேவரெனப்படுவார்க்கெலாம்
மாதேவனலாற்றேவர்மற்றில்லையே.

விருத்தாசலமென்று வழங்கும் திருமுதுகுன்றம்-சுந்தரர்-பண்-நட்டராகம்.

பொன்செய்தமேனியினீர்புலித்தோலையரைக்கசைத்தீர்
முன்செய்தமூவெயிலுமெரித்தீர்முதுகுன்றமர்ந்தீர்
மின்செய்தநுண்ணிடையாள் பரவையிவடன்முகப்பே
என்செய்தவாறடிகேளடியேனிட்டளங்கெடவே.

உம்பரும்வானவரும்முடனேநிற்கவேயெனக்குச்
செம்பொனைத்தந்தருளித்திகழும்முதுகுன்றமர்ந்தீர்
வம்பமருங்குழலாள்பரவையிவள்வாடுகின்றாள்
எம்பெருமானருளீரடியேனிட்டளங்கெடவே.

பத்தாபத்தர்களுக்கருள்செய்யும்பரம்பரனே
முத்தாமுக்கணனேமுதுகுன்றமர்ந்தவனே
மைந்தாருந்தடங்கண்பரவையிவள்வாடாமே
அத்தாதந்தருளாயடியேனிட்டளங்கெடவே.

மங்கையொர்கூறமர்ந்தீர்மறைநான்கும்விரித்துரைத்தீர்
திங்கள்சடைக்கணிந்தீர்திகழும்முதுகுன்றமர்ந்தீர்
கொங்கைநல்லாள்பரவைகுணங்கொண்டிருந்தாண்முகப்பே
அங்கணனேயருளாயடியேனிட்டளங்கெடவே

மையாரும்மிடற்றாய்மருவார்புரமூன்றெரித்த
செய்யார்மேனியனேதிகழும்முதுகுன்றமர்ந்தாய்
பையாரும்மரவேரல்குலாளிவள்வாடுகின்றாள்
ஐயாதந்தருளாயடியேனிட்டளங்கெடவே.

A clear conscience fears no accusation.

நெடியானான்முகனுமிரவியொடுமிந்திரனும்
முடியால்வந்திறைஞ்சமுதுகுன்றமமர்ந்தவனே
படியாருமியலாள்பரவையிவடன்முகப்பே
அடிகேடந்தருளாயடியேனிட்டளங்கெடவே.

கொந்தணவும்பொழில்சூழ்குளிர்மாமதின்மாளிகைமேல்
வந்தணவும்மதிசேர்சடைமாமுதுகுன்றுடையாய்
பந்தணவும்விரலாள்பரவையிவளடன்முகப்பே
அந்தணனேயருளாயடியேனிட்டளங்கெடவே.

ஏத்தாதிருந்தறியேனிமையோர்தனிநாயகனே
மூத்தாயுலகுக்கெல்லாமுதுகுன்றமமர்ந்தவனே
பூத்தாருங்குழலாள்பரவையிவடன்முகப்பே
கூத்தாதந்தருளாய்கொடியேனிட்டளங்கெடவே.

பிறையாருஞ்சடையெம்பெருமானருளாயென்று
முறையால்வந்தமரர்வணங்கும்முதுகுன்றர்தம்மை
மறையார்தங்குரிசில்வயனாவலாரூரன்சொன்ன
இறையார்பாடல்வல்லார்க்கெளிதாஞ்சிவலோகமதே.

## திருத்தாண்டகம்

நிலைபெறுமாறெண்ணுதியேனெஞ்சேநீவாநித்தலுமெம்பிரானுடையகோயில்புக்குப், புலர்வதன்முன்னலகிட்டுமெழுக்குமிட்டுப்பூமாலைபுனைந்தேத்திப்புகழ்ந்துப்பாடித், தலையாரக்கும்பிட்டுக்கூத்துமாடிச்சங்கராசயபோற்றிபோற்றியென்றும், அலைபுனல்சேர்செஞ்சடையெம்மாதீயென்றுமாரூராவென்றென்றேயலறாநில்லே.

பேசப்பொருளலாப்பிறவிதன்னைப்பெரிதென்றுன்சிறுமனத்தால்வேண்டியீண்டு, வாசக்குழன்மடவார்போகமென்னும்வலைப்பட்டுவீழாதேவருகநெஞ்சே, தூசக்கரியுரித்தான்றூநீறாடித்துதைந்திலங்குநூன்மார்பன்றொடரகில்லா, நீசர்க்கரியவனெய்த்தானமென்றுநினையுமாநினைந்தக்காலுய்யலாமே.

மண்ணல்லைவிண்ணல்லைவலயமல்லைமலையல்லைகடலல்லைவாயுவல்லை, யெண்ணல்லையெழுத்தல்லையெரியுமல்லையிரவல்லைபகலல்லையாவுமல்லை, பெண்ணல்லையாணல்லைபேடுமல்லைபிறிதல்லையானாயும்பெரியாய்நீயே, யுண்ணல்லைநல்லார்க்குத்தீமையல்லையுணர்வரியவொற்றியூருடையகோவே.

**When angry, count ten beforo you speok ; if very angry a hundred.**

✓ பேராயிரம்பரவிவானோரேத்தும் பெம்மானைப் பிரிவிலாவடியார்க்கென்றும், வாராதசெல்வம்வருவிப்பானைமந்திரமுந்தந்திரமும் மருந்துமாகித், தீராநோய்தீர்த்தருளவல்லான்றன்னைத்திரிபுரங்கடீயெழத்திண்சிலைகைக்கொண்ட, போரானைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதேயாற்றநாள்போக்கினேனே

எவரேனுந்தாமாகவிலாடத்திட்டதிருநீறுஞ்சாதனமுங்கண்டாலுள்கி, யுவராதேயவரவரைக் கண்டபோது வுகந்தடிமைத்திறநினைந்தங்குவந்துநோக்கி, யிவர்தேவரவர்தேவரென்றுசொல்லியிரண்டாட்டாதொழிந்தீசன்றிறமேபேணிக், கவராதேதொழுமடியார் நெஞ்சினுள்ளேகன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே.

தந்தையார்தாயாருடன்பிறந்தார்தாரமார்புத்திரரார்தாந்தாமாரே, வந்தவாறெங்ஙனேபோமாறேதோமாயமாமிதற்கேதுமகிழவேண்டாஞ், சிந்தையீருமக்கொன்றுசொல்லக்கேண்மின்றிகழ்மதியும்வாளரவுந்திளைக்குஞ்சென்னி, யெந்தையார்திருநாமநமச்சிவாயவென்றெழுவார்க்கிருவிசும்பிலிருக்கலாமே.

மைப்படிந்தகண்ணாளுந்தானுங்கச்சிமயானத்தான்வார்சடையானென்னினல்லா, னொப்புடையனல்லனொருவனல்லனோரூரனல்லனோருவமனில்லி, யப்படியுமந்நிறமுமவ்வண்ணமுமவனருளேகண்ணாகக்காணினல்லா, லிப்படியனிந்நிறத்தனிவ்வண்ணத்தனிவனிறைவனென்றெழுதிக்காட்டொணாதே.

நாமார்க்குங்குடியல்லோநமனையஞ்சோநரகத்திலிடர்ப்படோநடலையில்லோ, மேமாப்போம்பிணியறியோம்பணிவோமல்லோமின்பமேயெந்நாளுந்துன்பமில்லை, தாமார்க்குங்குடியல்லாத்தன்மையானசங்கரனற்சங்கவெண்குழையோர்காதிற், கோமாற்கேநாமென்றுமீளாவாளாய்க்கொய்ம்மலர்ச்சேவடியிணையேகுறுகினோமே.

அப்பனீயம்மைநீயையனுநீயன்புடையமாமனுமாமியுநீ, யொப்புடையமாதருமொண்பொருளுநீ யொருகுலமுஞ்சுற்றமுமோரூருநீ, துய்ப்பனவுமுய்ப்பனவுந்தோற்றுவாய்நீ துணையாயென்னெஞ்சந்துறப்பிப்பாய்நீ, யிப்பொன்னீயிம்மணிநீயிம்முத்துநீயிறைவனீயேறூர்ந்தசெல்வனீயே.

ஆட்டுவித்தாலாரொருவராடாதாரேயடக்குவித்தாலாரொருவரடங்காதாரே, யோட்டுவித்தாலாரொருவரோடாதாரேயுருகுவித்தாலாரொருவருருகாதாரே, பாட்டுவித்தாலாரொருவர்பாடாதாரேபணிவித்தாலாரொருவர்பணியாதாரே, காட்டுவித்தாலாரொருவர்காணாதாரேகாண்பாரார்கண்ணுதலாய்க்காட்டாக்காலே.

---

**One kind word may turn aside a torrent of anger.**

திருக்கோயிலில்லாத திருவிலூருந் திருவெண்ணீறணியாத திருவிலூரும், பருக்கோடிப்பத்திமையாற்பாடாவூரும்பாங்கினொடு பலதளிகளில்லாவூரும், விருப்போடுவெண்சங்கமூதாவூரும்விதானமும்வெண்கொடியுமில்லாவூரு, மருப்போடுமலர்பறித்திட்டுண்ணாவூருமவையெல்லாமூரல்லவடவிகாடே.

திருநாமமஞ்செழுத்துஞ்செப்பாராகிற்றீவண்ணர்திறமொருகாற்பேசாராகி, லொருகாலுந்திருக்கோயில்சூழாராகிலுண்பதன்முன்மலர்பறித்திட்டுண்ணாராகி, லருநோய்கள்கெடவெண்ணீறணியாராகிலளியற்றார்பிறந்தவாறேதோவென்னிற், பெருநோய்கண்மிகநலியப்பெயர்த்துஞ்செத்துப்பிறப்பதற்கேதொழிலாகி யிறக்கின்றாரே.

சங்கநிதிபதுமநிதியிரண்டுந்தந்துதரணியொடுவானாளத்தருவரேனு, மங்குவாரவர்செல்வமதிப்போமல்லோமாதேவர்க்கேகாந்தரல்லராகி, லங்கமெலாங்குறைந்தழுகுதொழுநோயராயாவுரித்துத்தின்றுழலும்புலையரேனுங், கங்கைவார்சடைக்கரந்தார்க்கன்பராகிலவர்கண்டீர்நாம்வணங்குங்கடவுளாரே.

எண்ணுகேனென்சொல்லியெண்ணுகேனோவெம்பெருமான்றிருவடியேயெண்ணினல்லாற், கண்ணிலேனற்றோர்களைகணில்லேன்கழலடியேகைதொழுதுகாணினல்லா, லொண்ணுளேயொன்பதுவாசல்வைத்தாயொக்கவடைக்கும்போதுணரமாட்டேன், புண்ணியாவுன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர்மேவிய புண்ணியனே.

கருவாகிக்கண்ணுதலாய்நின்றான்றன்னைக்கமலத்தோன்றலையரிந்தகாபாலியை, யுருவார்ந்தமலைமகளோர்பாகத்தானையுணர்வெலாமானானையோசையாகி வருவானைவலஞ்சுழியெம்பெருமான்றன்னை மறைக்காடுமாவடுதண்டுறையுமேய, திருவானைத்தென்பரம்பைக்குடியின்மேயதிருவாலம்பொழிலானைச்சிந்திநெஞ்சே.

மாதாபிதாவாகிமக்களாகிமறிகடலுமாலவிசும்புந்தானேயாகிக் கோதாவிரியாய்க்குமரியாகிக் கொல்புலித்தோலாடைக் குழகனாகிப் போதாயமலர்கொண்டு போற்றிநின்று புனைவார்பிறப்பறுக்கும்புனிதனாகி, யாதானுமெனநினைந்தார்க்கெளிதேயாகியழல்வண்ணவண்ணர்தாநின்றவாறே.

திருச்சிற்றம்பலம்.



**Purity of conscience is the best promoter of peace of mind.**

# திருவாசகம்.

நேரிசைவெண்பா.

தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
யல்லலறுத் தானந்த மாக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்.

நமச்சிவாய வாஅழ்க நாதன்றாள் வாழ்க
இமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான் றாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் றாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் றாள்வாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க
ஈச னடிபோற்றி யெந்தை யடிபோற்றி
தேசனடி போற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கு மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநந் தேவ னடிபோற்றி
யாராத வின்ப மருளுமலை போற்றி
சிவனவனென் சிந்தையு ணின்ற வதனா
லவனரு ளாலே யவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுது மோய வுரைப்பனியான்
கண்ணுதலான் றன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
யெண்ணுதற் கெட்டா வெழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியா
யெண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்

செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்து
ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றே
னுய்யவென் னுள்ளத்து ளோங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்க
ளையா வெனவோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியா யியமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
யெஞ்ஞான மில்லாதே னின்பப் பெருமானே
யஞ்ஞானந் தன்னை யகல்விக்கு நல்லறிவே
யாக்க மளவிறுதி யில்லா யனைத்துலகு
மாக்குவாய் காப்பா யழிப்பா யருடருவாய்
போக்குவா யென்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பி
னாற்றத்தி னேரியாய் சேயாய் நணியானே
மாற்ற மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுட் டேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கு மெங்கள் பெருமா
னிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தா யெம்பெருமான் வல்வினையேன் றன்னை
மறைந்திட மூடிய மாய விருளை
யறம்பாவ மென்னு மருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரு மொன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்
கலந்தவன் பாகிக் கசிந்துள் ளுருகு
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த வடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கு மாரியனே
நேச வருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
யாரா வமுதே யளவிலாப் பெம்மானே

Care in summer, comfort in winter.

யோராதா ருள்ளத் தொளிக்கு மொளியானே
நீரா யுருக்கியென் னாருயிராய் நின்றானே
யின்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே
யன்பருக் கன்பனே யாவையுமா யல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
யாதியனே யந்த நடுவாகி யல்லானே
யீர்த்தென்னை யாட்கொண்ட வெந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தி
னோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
யாற்றின்ப வெள்ளமே யத்தா மிக்காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையு
ளூற்றான வுண்ணா ரமுதே யுடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
வாற்றேனெம் மையா வரனேயோ வென்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளி னட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
யல்லற் பிறவி யறுப்பானே யோவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவா
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து.

## திருச்சதகம்.

மெய்தா னரும்பி விதிர்விதிர்த் துன்விரை யார்கழற்கென்
கைதான் றலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பியுள்ளம்
பொய்தான் றவிர்ந்துன்னைப் போற்றி சயசய போற்றியென்னுங்
கைதா னெகிழ விடேனுடை யாயென்னைக் கண்டுகொள்ளே.

நாடகத்தா லுன்னடியார்போ னடித்து நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றே
னாடகச்சீர் மணிக்குன்றே யிடையறா வன்புனக்கென்
னூடகத்தே நின்றுருகத் தந்தருளெம் முடையானே.

Truth is the hidden gem we all should dig for.

வெள்ளந்தாழ் விரிசடையாய் விண்ணோர்
　　பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலிற் கீழ்மே லாகப்
　　பதைத்துருகு மவர்நிற்க வென்னை யாண்டாய்க்
குள்ளந்தா ணின்றுச்சி யளவு நெஞ்சா
　　யுருகாதா லுடம்பெல்லாங் கண்ணா யண்ணா
வெள்ளந்தான் பாயாதா னெஞ்சங் கல்லாங்
　　கண்ணிணையு மரமாந்தீ வினையி னேற்கே.

ஆடுகின் றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை யென்புருகிப்
பாடு கின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடு கின்றிலை தெருவுதோ றலறிலை செய்வதொன் றறியேனே.

இருகை யானையை யொத்திருந் தென்னுளக்
கருவை யான்கண்டி லேன்கண்ட தெய்வமே
வருக வென்று பணித்தனை வானுளோர்க்
கொருவ னேகிற்றி லேன்கிற்ப னுண்ணவே.

ஈச னேயென் னெம்மானே யெந்தை பெருமா னென்பிறவி
நாச னேநான் யாதுமொன் றல்லாப் பொல்லா நாயான
நீச னேனை யாண்டாய்க்கு நினைக்கமாட்டேன் கண்டாயே
தேசனே யம்பலவனே செய்வதொன்று மறியேனே.

தரிக்கிலேன் காயவாழ்க்கை சங்கரா போற்றி வான
விருத்தனே போற்றி யெங்கள் விடலையே போற்றி யொப்பி
லொருத்தனே போற்றி யும்பர் தம்பிரான் போற்றி தில்லை
நிருத்தனே போற்றி யெங்கள் நின்மலா போற்றி போற்றி.

புணர்ப்ப தொக்க வெந்தை யென்னை யாண்டு பூண நோக்கினாய்
புணர்ப்ப தன்றி தென்ற போது நின்னொடென்னொடென்னிதாம்
புணர்ப்ப தாக வன்றி தாக வன்பு நின்க ழற்கணே
புணர்ப்ப தாக வங்க ணாள புங்க மான போகமே.

விச்சுக் கேடுபொய்க்காகா தென்றிங் கெனைவைத்தா
யிச்சைக் கானா ரெல்லாரும் வந்துன்றாள் சேர்ந்தா
ரச்சத்தாலே யாழ்ந்திடு கின்றே னாரூரெம்
பிச்சைத் தேவா வென்னான் செய்கேன் பேசாயே.

மாறி லாதமாக் கருணை வெள்ளமே
　　வந்து முந்திநின் மலர்கொ டாளிணை
வேறி லாப்பதப் பரிசுபெற்றநின்
　　மெய்ம்மை யன்பருன் மெய்ம்மை மேவினார்

Putting off does no work.

ஈறி லாதநீ யெளியை யாகிவந்
தொளிசெய் மானுட மாக நோக்கியுங்
கீறி லாதநெஞ் சுடைய நாயினேன்
கடைய நாயினேன் பட்ட கீழ்மையே.

நீத்தல் விண்ணப்பம்.

கடையவனேனைக் கருணையினாற்கலந்தாண்டுகொண்ட
விடையவனேவிட்டிடுதிகண்டாய்விறல்வேங்கையின்றோ
லுடையவனேமன்னுமுத்தரகோசமங்கைக்கரசே
சடையவனேதளர்ந்தேனெம்பிரானென்னைத்தாங்கிக்கொள்ளே.

திருவெம்பாவை—(தனுர்மாத பாராயணம்.)

ஆதியுமந்தமுமில்லாவரும்பெருஞ்
சோதியையாம்பாடக்கேட்டேயும்வாட்டடங்கண்
மாதேவளருதியோவன்செவியோநின்செவிதான்
மாதேவன்வார்கழல்கள்வாழ்த்தியவாழ்த்தொலிபோய்
வீதிவாய்க்கேட்டலுமேவிம்மிவிம்மிமெய்ம்மறந்து
போதாரமளியின்மேனின்றும்புரண்டிங்க
னேதேனுமாகாள்கிடந்தாளென்னேயென்னே
யீதேயெந்தோழிபரிசேலோரெம்பாவாய்.

பாசம்பரஞ்சோதிக்கென்பாயிராப்பகனும்
பேசும்போதெப்போதிப்போதாரமளிக்கே
நேசமும்வைத்தனையோநேரிழையாய்நேரிழையீர்
சீசீயிவையுஞ்சிலவோவிளையாடி
யேசுமிடமீதோவிண்ணோர்களேத்துதற்குக்
கூசுமலர்ப்பாதந்தந்தருளவந்தருளுந்
தேசன்சிவலோகன்றில்லைச்சிற்றம்பலத்து
ளீசனார்க்கன்பார்யாமாரேலோரெம்பாவாய்.

முத்தன்னவெண்ணகையாய்முன்வந்தெதிரெழுந்தென்
னத்தனானந்தனமுதனென்றள்ளூறித்
தித்திக்கப்பேசுவாய்வந்துன்கடைதிறவாய்
பத்துடையீரீசன்பழவடியீர்பாங்குடையீர்
புத்தடியோம்புன்மைதீர்த்தாட்கொண்டாற்பொல்லாதோ
வெத்தோநின்னன்புடைமையெல்லோமறியோமோ
சித்தமழகியார்பாடாரோநஞ்சிவனை
யித்தனையும்வேண்டுமெமக்கேலோரெம்பாவாய்.

**Patience and perseverance accomplish wonders.**

ஒண்ணித்திலநகையாயின்னம்புலர்ந்தின்றோ
வண்ணக்கிளிமொழியாரெல்லாரும்வந்தாரோ
வெண்ணிக்கொடுள்ளவாசொல்லுகோமவ்வளவுங்
கண்ணைத்துயின்றவமேகாலத்தைப்போக்காதே
விண்ணுக்கொருமருந்தைவேதவிழுப்பொருளைக்
கண்ணுக்கினியானைப்பாடிக்கசிந்துள்ள
முண்ணெக்குநின்றுருகயாமாட்டோநீயேவந்
தெண்ணிக்குறையிற்றுயிலேலோரெம்பாவாய்.

மாலறியாநான்முகனுங்காணாமலையினைநாம்
போலறிவோமென்றுள்ளபொக்கங்களேபேசும்
பாலூறுதேன்வாய்ப்படிறீகடைதிறவாய்
ஞாலமேவிண்ணேபிறவேயறிவரியான்
கோலமுநம்மையாட்கொண்டருளிக்கோதாட்டுஞ்
சீலமும்பாடிச்சிவனேசிவனேயென்
றோலமிடினுமுணராயுணராய்கா
ணேலக்குழலிபரிசேலோரெம்பாவாய்.

மானேநீநென்னலைநாளைவந்துங்களை
நானேயெழுப்புவனென்றலுநாணாமே
போனதிசைபகராயின்னம்புலர்ந்தின்றோ
வானேநிலனேபிறவேயறிவரியான்
றானேவந்தெம்மைத்தலையளித்தாட்கொண்டருளும்
வான்வார்கழல்பாடிவந்தோர்க்குன்வாய்திறவா
யூனேயுருகாயுனக்கேயுறுமெமக்கு
மேனோர்க்குந்தங்கோனைப்பாடேலோரெம்பாவாய்.

அன்னேயிவையுஞ்சிலவோபலவமர
ருன்னற்கரியானொருவனிருஞ்சீரான்
சின்னங்கள்கேட்பச்சிவனென்றேவாய்திறப்பாய்
தென்னாவென்னாமுன்னந்தீசேர்மெழுகொப்பா
யென்னானையென்னரையனின்னமுதென்றெல்லோமுஞ்
சொன்னோங்கேள்வெவ்வேறாயின்னந்துயிலுதியோ
வன்னெஞ்சப்பேதையர்போல்வாளாகிடத்தியா
லென்னேதுயிலின்பரிசேலோரெம்பாவாய்.

கோழிசிலம்பச்சிலம்புங்குருகெங்கு
மேழிலியம்பவியம்பும்வெண்சங்கெங்குங்
கேழில்பரஞ்சோதிகேழில்பரங்கருணை
கேழில்விழுப்பொருள்கள்பாடினோங்கேட்டிலையோ

Civility costs nothing but is worth much.

வாழியீதென்னவுறக்கமோவாய்திறவாய்
    யாழியானன்புடைமையாமாறுமிவ்வாறோ
ஊழிமுதல்வனாய்நின்றவொருவனை
    யேழைபங்காளனையேபாடேலோரெம்பாவாய்.

முன்னைப்பழம்பொருட்குமுன்னைப்பழம்பொருளே
    பின்னைப்புதுமைக்கும்பேர்த்துமப்பெற்றியனே
யுன்னைப்பிரானாகப்பெற்றவுன்சீரடியோ
    முன்னடியார்தாள்பணிவோமாங்கவர்க்கேபாங்காவோ
மன்னவரேயெங்கணவராவாரவருகந்து
    சொன்னபரிசேதொழும்பாய்ப்பணிசெய்வோ
மின்னவகையேயெமக்கெங்கோனல்குதியே
    லென்னகுறையுமிலோமேலோரெம்பாவாய்.

பாதாளமேழினுங்கீழ்சொற்கழிவுபாதமலர்
    போதார்புனைமுடியுமெல்லாப்பொருண்முடிவே
பேதையொருபாற்றிருமேனியொன்றல்லன்
    வேதமுதல்விண்ணோருமண்ணுந்துதித்தாலு
மோதவுலவாவொருதோழன்றொண்டருளன்
    கோதில்குலத்தரன்றன்கோயிற்பிணாப்பிள்ளைகா
ளேதவனூரேதவன்பேராருற்றாராரயலா
    ரேதவனைப்பாடும்பரிசேலோரெம்பாவாய்.

மொய்யார்தடம்பொய்கைபுக்குமுகேரென்னக்
    கையாற்குடைந்துகுடைந்துன்கழல்பாடி
ஐயாவழியடியோம்வாழ்ந்தோங்காணாரழல்போற்
    செய்யாவெண்ணீராடிச்செல்வாசிறுமருங்குன்
மையார்தடங்கண்மடந்தைமணவாளா
    வையாநீயாட்கொண்டருளும்விளையாட்டி
னுய்வார்களுய்யும்வகையெல்லாமுய்ந்தொழிந்தோ
    மெய்யாமற்காப்பாயெமையேலோரெம்பாவாய்

ஆர்த்தபிறவித்துயர்கெடநாமார்த்தாடுந்
    தீர்த்தனற்றில்லைச்சிற்றம்பலத்தேதீயாடுங்
கூத்தனிவ்வானுங்குவலயமுமெல்லோமுங்
    காத்தும்படைத்துங்கரந்தும்விளையாடி
வார்த்தையும்பேசிவளைசிலம்பவார்கலைக
    ளார்ப்பரவஞ்செய்யவணிகுழன்மேல்வண்டார்ப்பப்
பூத்திகழும்பொய்கைகுடைந்துடையான்பொற்பாத
    மேத்தியிருஞ்சுனைநீராடேலோரெம்பாவாய்.

பைங்குவளைக்கார்மலராற்செங்கமலப்பைம்போதா
லங்கங்குருகினத்தாற்பின்னுமரவத்தாற்
றங்கண்மலங்கழுவுவார்வந்துசார்தலினா
லெங்கள்பிராட்டியுமெங்கோனும்போன்றிசைந்த
பொங்குமடுவிற்புகப்பாய்ந்துபாய்ந்துநஞ்
சங்கஞ்சிலம்பச்சிலம்புகலந்தார்ப்பக்
கொங்கைகள்பொங்கக்குடையும்புனல்பொங்கப்
பங்கயப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய்.

காதார்குழையாடப்பைம்பூண்கலனாடக்
கோதைகுழலாடவண்டின்குழாமாடச்
சீதப்புனலாடிச்சிற்றம்பலம்பாடி
வேதப்பொருள்பாடியப்பொருளாமாபாடிச்
சோதிதிறம்பாடிச்சூழ்கொன்றைத்தார்பாடி
யாதிதிறம்பாடியந்தமாமாபாடிப்
பதித்துநம்மைவளர்த்தெடுத்தபெய்வளைதன்
பாதத்திறம்பாடியாடேலோரெம்பாவாய்.

ரொருகாலெம்பெருமானென்றென்றேநம்பெருமான்
சீரொருகால்வாயோவாள்சித்தங்களிகூர
நீரொருகாலோவாநெடுந்தாரைக்கண்பனிப்பப்
பாரொருகால்வந்தனையாள்விண்ணோரைத்தான்பணியாள்
பேரரையற்கிங்ஙனேபித்தொருவராமாறு
மாரொருவரிவ்வண்ணமாட்கொள்ளும்வித்தகர்தாள்
வாருருவப்பூண்முலையீர்வாயாரநாம்பாடி
யேருருவப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய்.

முன்னிக்கடலைச்சுருக்கியெழுந்துடையா
ளென்னத்திகழ்ந்தெம்மையாளுடையாளிட்டிடையின்
மின்னிப்பொலிந்தெம்பிராட்டிதிருவடிமேற்
பொன்னஞ்சிலம்பிற்சிலம்பித்திருப்புருவ
மென்னச்சிலைகுலவிநந்தம்மையாளுடையா
டன்னிற்பிரிவிலாவெங்கோமானன்பர்க்கு
முன்னியவணமக்குமுன்சுரக்குமின்னருளே
யென்னப்பொழியாய்மழையேலோரெம்பாவாய்.

செங்கணவன்பாற்றிசைமுகன்பாற்றேவர்கள்பா
லெங்குமிலாததோரின்பநம்பாலதாக்
கொங்குண்கருங்குழலிநந்தம்மைக்கோதாட்டி
யிங்குநம்மில்லங்கடோறுமெழுந்தருளிச்

செங்கமலப்பொற்பாதந்தந்தருளுஞ்சேவகனை
யங்கணரசையடியோங்கட்காரமுதை
நங்கள்பெருமானைப்பாடிநலந்திகழப்
பங்கயப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய்.

அண்ணாமலையானடிக்கமலஞ்சென்றிறைஞ்சும்
விண்ணோர்முடியின்மணித்தொகைவீறற்றாற்போற்
கண்ணாரிரவிகதிர்வந்துகார்கரப்பத்
தண்ணாரொளிமழுங்கித்தாரகைகடாமகலப்
பெண்ணாகியாணயலியாய்ப்பிறங்கொளிசேர்
விண்ணாகிமண்ணாகியித்தனையும்வேறாகிக்
கண்ணாரமுதமுமாய்நின்றான் கழல்பாடிப்
பெண்ணேயிப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய்.

உங்கையிற்பிள்ளையுனக்கேயடைக்கலமென்
றங்கப்பழஞ்சொற்புதுக்குமெம்மச்சத்தா
லெங்கள்பெருமானுனக்கொன்றுரைப்போங்கே
ளெங்கொங்கைநின்னன்பரல்லார்தோள்சேரற்க
வெங்கையுனக்கல்லாதெப்பணியுஞ்செய்யற்க
கங்குல்பகலெங்கண்மற்றொன்றுங்காணற்க
விங்கிப்பரிசேயெமக்கெங்கோனல்குதியே
லெங்கெழிலென்ஞாயிறெமக்கேலோரெம்பாவாய்.

போற்றியருளுகநின்னாதியாம்பாதமலர்
போற்றியருளுகநின்னந்தமாஞ்செந்தளிர்கள்
போற்றியெல்லாவுயிர்க்குந்தோற்றமாம்பொற்பாதம்
போற்றியெல்லாவுயிர்க்கும்போகமாம்பூங்கழல்கள்
போற்றியெல்லாவுயிர்க்குமீறாமிணையடிகள்
போற்றிமாலுன்முகனுங்காணாதபுண்டரிகம்
போற்றியாமுய்யவாட்கொண்டருளும்பொன்மலர்கள்
போற்றியாமார்கழிநீராடேலோரெம்பாவாய்.

திருவம்மானை.

செங்கணெடுமாலுஞ்சென்றிடந்துங்காண்பரிய
பொங்குமலர்ப்பாதம்பூதலத்தேபோந்தருளி
யெங்கள்பிறப்பறுத்திட்டெந்தரமுமாட்கொண்டு
தெங்குதிரள்சோலைத்தென்னன்பெருந்துறையா
னங்கணனந்தணனாயறைகூவிவீடருளு
மங்கருணைவார்கழலேபாடுதுங்காணம்மானாய்.

Joy often comes after sorrow, like morn ing after night.

### திருப்பொற்சுண்ணம்.

முத்துநற்றாமம்பூமாலை தூக்கிமுளைக்குடந்தூபநற்றீபம்வைம்மின்
சத்தியுஞ்சோமியும்பார்மகளுநாமகளோடுபல்லாண்டிசைமின்
சித்தியுங்கௌரியும்பார்ப்பதியுங்கங்கையுமவந்துகவரிகொண்மி
னத்தனையாற்னம்மானைப்பாடியாடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

### திருக்கோத்தும்பி.

பூவேறுகோனும்புரந்தரனும்பொற்பமைந்த
நாவேறுசெல்வியுநாரணனுநான்மறையு
மாவேறுசோதியும்வானவருந்தாமறியாச
சேவேறுசேவடிக்கேசென்றூதாய்கோத்தும்பீ.

### திருத்தெள்ளேணம்.

திருமாலும்பன்றியாய்ச்சென்றுணராத்திருவடியை
யுருநாமறியவோரந்தணனாயாண்டுகொண்டா
னொருநாமமோருருவமொன்றுமில்லாற்காயிரந்
திருநாமமபாடிநாந்தெள்ளேணங்கொட்டாமோ.

### திருச்சாழல்.

பூசுவதும்வெண்ணீறுபூண்பதுவும்பொங்கரவம்
பேசுவதுந்திருவாயான்மறைபோலுங்காணேடீ
பூசுவதும்பேசுவதும்பூண்பதுவுங்கொண்டென்னை
யீசனவனெவ்வுயிர்க்குமியல்பானான்சாழலோ

### திருப்பூவல்லி.

இணையார்திருவடியென்றலைமேல்வைத்தலுமே
யானசுற்றங்களத்தனையுந்துறந்தொழிந்தே
புணையாளன்சீர்பாடிப்பூவல்லிகொய்யாமோ.

### திருவுந்தியார்.

வளைந்ததுவில்லுவிளைந்ததுபூச
லுளைந்தனமுப்புரமுந்தீபற
வொருங்குடன்வெந்தவாறுந்தீபற.

### ருகஅம.

பூத்தாரும்பொய்கைப்புனலிதுவேயெனக்கருதிப்
பேய்த்தேர்முகக்குறுமபேதைகுணமாகாமே
தீர்த்தாய்திகழ்தில்லையம்பலத்தேதிருநடஞ்செய்
கூத்தாவுன்சேவடிகூடும்வண்ணந்தோணேக்கம்.

Out of debt, out of danger.

### திருப்பொன்னூசல்.

சீரார்பவளங்கான்முத்தங்கயிறாக, வேராரும்பொற்பலகையே
றியினிதமர்ந்து, நாராயணனறியாநாண்மலர்த்தாளடியேற்,
கூராகத்தந்தருளு முத்தரகோசமங்கை, யாராவமுதினருட்டாளிணை
பாடிப், போரார்வேற்கண்மடவீர்பொன்னூசலாடாமோ.

### அன்னைப்பத்து.

வேதமொழியர்வெண்ணீற்றர்செம்மேனியர்
நாதப்பறையினரன்னேயென்னும்
நாதப்பறையினர்நான்முகன்மாலுக்கு
நாதரிந்நாதனாரன்னேயென்னும்.

### குயிற்பத்து.

கீதமினியகுயிலேகேட்டியேலெங்கள்பெருமான்
பாதமிரண்டும்வினவிற்பாதாளமேழினுக்கப்பாற்
சோதிமணிமுடிசொல்லிற்சொல்லிறந்துநின்றதொன்மை
யாதிகுணமொன்றுமில்லானந்தமிலான்வரக்கூவாய்.

### திருத்தசாங்கம்.

ஏராரிளங்கிளியேயெங்கள்பெருந்துறைக்கோன்
சீரார்திருநாமந்தேர்ந்துரையாய்—யாரூரன்
செம்பெருமான்வெண்மலரான்பாற்கடலான்செப்புவபோ
லெம்பெருமான்றேவர்பிரானென்று.

### திருப்பள்ளியெழுச்சி.

போற்றியென்வாழ்முதலாகியபொருளே புலர்ந்ததுபூங்கழற்கி
ணைதுணைமலர்கொண், டேற்றிநின்றிருமுகத்தெமக்கருண்மலரு
மெழினகைகொண்டுநின்றிருவடிதொழுகோஞ், சேற்றிதழ்க்கமலங்
கண்மலருந்தண்வயல்சூழ் திருப்பெருந்துறையுறைசிவபெருமானே,
யேற்றுயர்கொடியுடையாயெனையுடையாயெம்பெருமான்
ழுந்தருளாயே.

### கோயின்மூத்ததிருப்பதிகம்.

உடையானுன்றனடுவிருக்குமுடையாணடுவுணீயிருத்தி
யடியேனடுவுளிருவீருமிருப்பதானாலடியேனுன்
னடியார்நடுவுளிருக்குமருளைப்புரியாய்பொன்னம்பலத்தெம்
முடியாமுதலேயென்கருத்துமுடியும்வண்ணமுன்னின்றே.

### கோயிற்றிருப்பதிகம்.

மாறிநின்றென்னைமயக்கிடும்வஞ்சப்புலனைந்தின்வழியடைத்தமு
தே, யூறிநின்றென்னுளெழுபரஞ்சோதியுள்ளவாகாணவந்தருளாய
தேறலின்றெளிவேசிவபெருமானே திருப்பெருந்துறையுறைசிவ
னே. யீறிலாப்பதங்களியாவையுங்கடந்தவின்பமேயென்னுடையன்
பே.

### செத்திலாப்பத்து.

பொய்யனேனகநெகப்புகுந்தமுதூறும்புதுமலர்க்கழலிணையடி பிரிந்துங், கையனேனின்னுஞ்செத்திலேனந்தோவிழித்திருந்துள் ளக்கருத்தினையிழந்தே, னையனேயரசேயருட்பெருங்கடலேயத்த னேயயன்மாற்கறியொண்ணாச், செய்யமேனியனேசெய்வகையறி யேன், திருப்பெருந்துறைமேவியசிவனே.

### அடைக்கலப்பத்து.

செழுக்கமலத்திரளனநின்சேவடிசேர்ந்தமைந்த
பழுத்தமனத்தடியருடன்போயினர்யான்பாவியேன்
புழுக்கணுடைப்புன்குரம்பைப்பொல்லாக்கல்விஞானமிலா
வழுக்குமனத்தடியேனுடையாயுன்னடைக்கலமே.

### ஆசைப்பத்து.

கருடக்கொடியோன்காணமாட்டாக்கழற்சேவடியென்னும்
பொருளைத்தந்திங்கென்னையாண்டபொல்லாமணியேயோ
விருளைத்துரந்திட்டிங்கேவாவென்றங்கேகூவு
மருளைப்பெறுவானாசைப்பட்டேன்கண்டாயம்மானே.

### அதிசயப்பத்து.

வைப்புமாடென்றுமாணிக்கத்தொளியென்றுமனத்திடையுருகாதே
செப்புநேர்முலைமடவரலியர்தங்கடிறத்திடைநைவேனை
யொப்பிலாதனவுவமனிலிறந்தனவொண்மலர்த்திருப்பாதத்
தப்பனாண்டுதன்னடியரிற்கூட்டியவதிசயங்கண்டாமே.

### புணர்ச்சிப்பத்து.

சுடர்பொற்குன்றைத்தோளாமுத்தைவாளாதொழும்புகந்து
கடைபட்டேனையாண்டுகொண்டகருணாலயனைக்கருமால்பிரமன்
றடைபட்டின்னுஞ்சாரமாட்டாத்தன்னைத்தந்தவென்னாரமுதைப்
புடைபட்டிருப்பதென்றுகொல்லோவென்பொல்லாமணியைப்பு [ணர்ந்தே.

### வாழாப்பத்து.

பாரொடுவிண்ணாய்ப்பரந்தவெம்பரனேபற்றுநான்மற்றிலேன்கண் டாய், சீரொடுபொலிவாய்சிவபுரத்தரசேதிருப்பெருந்துறையுறை சிவனே, யாரொடுநோகேனார்க்கெடுத்துரைக்கேனாண்டநீயருளிலை யானால், வார்கடலுலகில்வாழ்கிலேன்கண்டாய்வருகவென்றருள்புரி யாயே.

### அருட்பத்து.

சோதியேசுடரேசூழொளிவிளக்கேசுரிகுழற்பணைமுலைமடந்தை
பாதியேபரனேபால்கொள்வெண்ணீற்றாய்பங்கயத்தயனுமாலறியா
நீதியேசெல்வத்திருப்பெருந்துறையினிறைமலர்க்குருந்தமேவியசீ
ராதியேயடியேனாதரித்தழைத்தாலதெந்துவேயென்றருளாயே.

### திருக்கழுக்குன்றப்பதிகம்.

பிணக்கிலாதபெருந்துறைப்பெருமானுன்னாமங்கள்பேசுவார்க்
கிணக்கிலாததோரின்பமேவருந்துன்பமே துடைத்தெம்பிரா
னுணக்கிலாததோர்வித்துமேல்விளையாமலென்வினையொத்தபின்
கணக்கிலாத்திருக்கோலநீவந்துகாட்டினாய்க்கழுக்குன்றிலே.

### கண்டபத்து.

இந்திரியவயமயங்கியிறப்பதற்கேகாரணமா
யந்தரமேதிரிந்துபோயருநரகில்வீழ்வேற்குச்
சிந்தைதனைத்தெளிவித்துச்சிவமாக்கியெனையாண்ட
வந்தமிலாவானந்தமணிகொடில்லைகண்டேனே.

### பிரார்த்தனைப்பத்து.

கலந்துநின்னடியாரோடன்றுவாளாகளித்திருந்தேன்
புலர்ந்துபோனகாலங்கள்புகுந்துநின்றதிடர்பின்னா
ளுலர்ந்துபோனேனுடையானேயுலவாவின்பச்சுடர்காண்பா
னலந்துபோனேனருள்செய்யாயார்வங்கூரவடியேற்கே.

### குழைத்தபத்து.

குழைத்தாற்பண்டைக்கொடுவினைநோய்காவாயுடையாய்கொடு
வினையே, னுழைத்தாலுறுதியுண்டோதானுமையாள்கணவாவெனை
யாள்வாய், பிழைத்தாற்பொறுக்கவேண்டாவோபிறைசேர்சடை
யாய்முறையோவென், றழைத்தாலருளாதொழிவதேயம்மானே
யுன்னடியேற்கே.

### உயிருண்ணிப்பத்து.

பைந்நாப்படவரவேரல்குலுமைபாகமதாயென்
மெய்ந்நாடொறும்பிரியாவினைக்கேடாவிடைப்பாகா
செந்நாவலர்பரசும்புகழ்த்திருப்பெருந்துறையுறைவா
யெந்நாட்களித்தெந்நாளிறுமாக்கேனினியானே.

### அச்சப்பத்து.

புற்றில்வாளரவுமஞ்சேன்பொய்யர்தம்மெய்யுமஞ்சேன்
கற்றவார்சடையெம்மண்ணல்கண்ணுதல்பாதநண்ணி
மற்றுமோர்தெய்வந்தன்னையுண்டெனநினைந்தெம்பெம்மான்
கற்றிலாதவரைக்கண்டாலம்மநாமஞ்சுமாறே.

### திருப்பாண்டிப்பதிகம்.

பருவரைமங்கைதன்பங்கரைப்பாண்டியற்காரமுதா
மொருவரையொன்றுமிலாதவரைக்கழற்போதிறைஞ்சித்
தெரிவரநின்றுருக்கிப்பரிமேற்கொண்டசேவகனா
ரொருவரையன்றியுருவறியாதென்றனுள்ளமதே.

---

மொழிவது மறுக்கி னழிவது கருமம்.

## பிடித்தபத்து.

உம்பர்கட்கரசேயொழிவறநிறைந்தயோகமேயூற்றையேன்றனக்கு
வம்பெனப்பழுத்தென்குடிமுழுதாண்டுவாழ்வறவாழ்வித்தமருந்தே
செம்பொருட்டுணிவேசீருடைக்கழலேசெல்வமேசிவபெருமானே
யெம்பொருட்டுன்னைச்சிக்கெனப்பிடித்தேனெங்கெழுந்தருளுவதினி
யே.

## திருவேசறவு.

இரும்புதருமனத்தேனையீர்த்தீர்த்தென்னென்புருக்கிச்
கரும்புதருசுவையெனக்குக்காட்டினையுன்கழலிணைக
ளொருங்குதிரையுலவுசடையுடையானேநரிகளெல்லாம்
பெருங்குதிரையாக்கியவாறன்றேயுன்பேரருளே.

## திருப்புலம்பல்.

பூங்கமலத்தயனொடுமாலறியாதநெறியானே
கோங்கலர்சேர்குவிமுலையாள்கூறாவெண்ணீறாடி
யோங்கெயில்சூழ்திருவாரூருடையானேயடியேனின்
பூங்கழல்களவையல்லாதெவையாதும்புகழேனே.

## குலாப்பத்து.

ஓடுங்கவந்தியுமேயுறவென்றிட்டுள்கசிந்து
தேடும்பொருளுஞ்சிவன்கழலேயெனத்தெளிந்து
கூடுமுயிருங்குமண்டையிடக்குனித்தடியே
னாடுங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

## அற்புதப்பத்து.

மையலாயிந்தமண்ணிடைவாழ்வெனுமாழியுளகப்பட்டுத்
தையலாரெனுஞ்சுழித்தலைப்பட்டுநான்றலைதடுமாறுமே
பொய்யெலாம்விடத்திருவருடந்துதன்பொன்னடியிணைக்காட்டி
மெய்யனாய்வெளிகாட்டிமுன்னின்றதோரற்புதம்விளம்பேனே

## சென்னிப்பத்து.

தேவதேவன்மெய்ச்சேவகன்றென்பெருந்துறைநாயகன்
மூவராலுமறியொணாமுதலாயவானந்தமூர்த்தியான்
யாவராயினுமன்பரன்றியறியொணாமலர்ச்சோதியான்
றூயமாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னிமன்னிச்சுடருமே.

## திருவார்த்தை.

மாதிவர்பாகன்மறைபயின்றவாசகன்மாமலர்மேயசோதி
கோதில்பரங்கருணையடியார்குலாவுநீதிகுணமாகநல்கும்
போதலர்சோலைப்பெருந்துறையெம்புண்ணியன்மண்ணிடைவந்திழிந்
தாதிப்பிரமம்வெளிப்படுத்தவருளறிவாரெம்பிரானாவாரே.

**Charity begins at home, don't let it end there.**

### எண்ணப்பதிகம்.

பாருருவாயபிறப்பறவேண்டும்பத்திமையும்பெறவேண்டுஞ்
சீருருவாயசிவபெருமானேசெங்கமலமலர்போ
லாருருவாயவென்னாரமுதேயுன்னடியவர்தொகைநடுவே [ளே.
யோருருவாயநின்றிருவருள்காட்டியென்னையுமுய்யக்கொண்டரு

### யாத்திரைப்பத்து.

பூவார் சென்னிமன்னனெம்புயங்கப்பெருமான்சிறியோமை
யோவாதுள்ளங்கலந்துணர்வாயுருக்கும்வெள்ளக்கருணையினு
லாவாவென்னப்பட்டன்பாயாட்பட்டீர்வந்தொருப்படுமின்
போவோங்காலம்வந்ததுகாண்பொய்விட்டுடையான்கழல்புகவே.

### திருப்படையெழுச்சி.

ஞானவாளேந்துமையர்நாதப்பறையறைமின்
மானமாவேறுமையர்மதிவெண்குடைகவிமின்
ஞானநீற்றுக்கவசமடையப்புகுமின்கள்
வானவூர்கொள்வோநாமாயப்படைவாராமே.

### திருவெண்பா.

வெய்யவினையிரண்டும்வெந்தகலமெய்யுருகிப்
பொய்யும்பொடியாகாதென்செய்கேன்—செய்ய
திருவார்பெருந்துறையான்றேனுந்துசெந்தீ
[illegible]

### பண்டாயநான்மறை.

பண்டாயநான்மறையும்பாலணுகாமாலயனுங்
கண்டாருமில்லைக்கடையேனைத்—தொண்டாகக்
கொண்டருளுங்கோகழியெங்கோமாற்குநெஞ்சமே
யுண்டாமோகைம்மாறுரை.

### திருப்படையாட்சி.

கண்களிரண்டுமவன்கழல்கண்டுகளிப்பனவாகாதே
காரிகையார்கடம்வாழ்விலென்வாழ்வுகடைப்படுமாகாதே
மண்களில்வந்துபிறந்திடுமாறுமறந்திடுமாகாதே
மாலறியாமலர்ப்பாதமிரண்டும்வணங்குதுமாகாதே
பண்களிகூர்தருபாடலொடாடல்பயின்றிடுமாகாதே
பாண்டிநன்னாடுடையான்படையாட்சிகள்பாடுதுமாகாதே
விண்களிகூர்வதோர்வேதகம்வந்துவெளிப்படுமாகாதே
மீன்வலைவீசியகானவன்வந்துவெளிப்படுமாயிடிலே.

---

Avoid in yourself what you think wrong in your neighbour.

ஆனந்தமாலை.

மின்னேரனையபூங்கழல்களடைந்தார்கடந்தார்வியனுலகம்
பொன்னேரனையமலர்கொண்டுபோற்றாநின்றாரமரரெல்லாங்
கன்னேரனையமனக்கடையாய்க்கழிப்புண்டவலக்கடல்வீழ்ந்த
வென்னேரனையேனினியுன்னைக்கூடும்வண்ணமியம்பாயே.

அச்சோப்பதிகம்.

முத்திநெறியறியாதமூர்க்கரொடுமுயல்வேனைப்
பத்திநெறியறிவித்துப்பழவினைகள்பாறும்வண்ணஞ்
சித்தமலமறுவித்துச்சிவமாக்கியெனையாண்ட
வத்தனெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.

நெறியல்லாநெறிதன்னைநெறியாகநினைவேனைச்
சிறுநெறிகள்சேராமேதிருவருளேசேரும்வண்ணங்
குறியொன்றுமில்லாதகூத்தன்றன்கூத்தையெனக்
கறியும்வண்ணமருளியவாறார்பெறுவாரச்சோவே.

செம்மைநலமறியாதசிதடரொடுந்திரிவேனை
மும்மைமலமறுவித்துமுதலாயமுதல்வன்றா
னம்மையுமோர்பொருளாக்கிநாய்சிவிகையேற்றுவித்த
வம்மையெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.

திருக்கோவையார்.

திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர் தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண்டோங்குதெய்வ
மருவளர் மாலையோர் வல்லியி னொல்கி யனநடைவாய்ந்
துருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே.

முனிவரு மன்னரு முன்னுவ பொன்னுன் முடியுமெனப்
பனிவருங் கண்பர மன்றிருச் சிற்றம் பலமனையாய்
தனிவரு நீர்மையி தென்னென்று தூநீர் தெளித்தளிப்ப
நனிவரு நாளிது வோவென்று வந்திக்கு நன்னுதலே.

திருச்சிற்றம்பலம்.

(ஆக நால்வர் பாடற்றிரட்டு முற்றிற்று.)

நால்வர் துதி.

சைவமுந்தழைத்தோங்கச்சமண்முதலாம்பற்றகலத்
தெய்வநெறித்தமிழோதுந்திருஞானசம்பந்தர்
மெய்மைவளர்வாகீசர்வித்தகராம்வன்றொண்டர்
செய்வளருந்திருவாதவூரர்திருத்தாள்போற்றி.

Every good act is charity.

## நால்வர் பதிக மகிமை.

### சம்பந்தர்.

புனலிலேடெதிர் செல்லெனச்செல் லுமே
புத்த னார்தலை தத்தெனத் தத்துமே
கனலி லேயிடப் பச்சென்றிருக்குமே
கதவு மாமறைக் காட்டிலடைக்குமே
பனையிலாண்பனை பெண்பனையாகுமே
பழைய வென்பு பொற் பாவையதாகுமே
சினவ ராவிடந் தீரெனத்தீருமே
சிறந்த சம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே.

### அப்பர்.

தலைகொ ணஞ்சமு தாகவிளையுமே
தழலி னீறு தடாகம தாகுமே
கொலைசெ யானை குனிந்துபணியுமே
கூரரா விடந் தீரெனத் தீருமே
கலைகொள் வேதவனப்பதி தன்னுளே
கதவு மீண்டு அடைக்கத்திறக்குமே
அலைகொள் வாரியிற் கல்லுமிதக்குமே
அப்பர் போற்று மருந்தமிழ்ப் பாடலே.

### சுந்தரர்.

வெங்கரா வுண்ட பிள்ளையை நல்குமே
வெள்ளை வாரண மீதிலிருத்துமே
மங்கை பாகரைத் தூது நடத்துமே
மருவி யாறு வழிவிட்டு நிற்குமே
செங்க லானது தங்கம தாகுமே
திகழு மாற்றிட்ட செம்பொனளிக்குமே
துங்க வாம்பரி சேரற்கு நல்குமே
துலங்கு நாவலூர்ச் சுந்தரர் பாடலே.

### வாதவூரர்.

பெருகும் வைகைதனை யழைப் பிக்குமே
பிரம் படிக்குப் பிரான்மேனி கன்றுமே
நரியெ லாம்பரி யாக நடத்துமே
நாடி மூகைதனைப் பேசுவிக்குமே
பரிவிற் பிட்டுக்கு மண்சுமப் பிக்குமே
பிரம னேடெழு தக்கோவை பாடுமே
வருகும் புத்தரை வாதினில் வெல்லுமே
வாத வூரர் வழங்கிய பாடலே.

---

He hath no leisure, who useth it not.

## ஒன்பதாந்திருமுறை.

### சேந்தனார் திருவிசைப்பா-

ஏகநாயகனையிமையவர்க்கரசை யென்னுயிர்க்கமுதினையெதிரில்,
போகநாயகனைப்புயல்வணற்கருளிப்பொன்னெடுஞ்சிவிகையாவூர்ந்த
மேகநாயகனைமிகுதிருவீழி மிழலைவிண்ணிழிசெழுங்கோயில்,
யோகநாயகனையன்றிமற்றொன்றுமுண்டெனவுணர்கிலேன்யானே.

### சேந்தனார் திருப்பல்லாண்டு.

மன்னுகதில்லைவளர்கநம்பத்தர்கள்வஞ்சகர்போயகலப்
பொன்னின்செய்மண்டபத்துள்ளேபுகுந்துபுவனியெல்லாம்விளங்க
அன்னநடைமடவாளுமைகோனடியோமுக்கருள்புரிந்து
பின்னைப்பிறவியறுக்கநெறிதந்தபித்தற்குப்பல்லாண்டுகூறுதுமே.

## பத்தாந்திருமுறை.

### திருமூலர் திருமந்திரம்.

ஐந்து கரத்தனை யானைமுகத்தனை, யிந்தி னிளம்பிறை போலு மெயிற்றனை, நந்திமகன்றனை ஞானக் கொழுந்தினைப், புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே.

பதிபசு பாச மெனப்பகர் மூன்றிற், பதியினைப் போற்பசு பாசமனாதி, பதியினைச் சென்றணு காப்பசு பாசம், பதியணுகிற் பசு பாச நிலாவே.

யாவர்க்குமா மிறைவர் கொரு பச்சிலை, யாவர்க்குமாம் பசுவிற் கொரு வாயுறை, யாவர்க்குமா முண்ணும் போதொரு கைப்பிடி, யாவர்க்குமாம் பிறர்க் கின்னுரை தானே.

என்பே விறகா யிறைச்சி யறுத்திட்டு, பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினு, மன்போடுருகியகங்குழை வார்க்கன்றி, யென் பொன்மணியினை யெய்த வொண்ணாதே.

உள்ளத் தொருவனை யுள்ளுறு சோதியை, யுள்ளம்விட்டோரடி நீங்கா வொருவனை, யுள்ளமுந் தானு முடனே யிருக்கினு முள்ளவனை யுருவறி யாதே.

ஈசனடியா ரிதயங் கலங்கிடத், தேசமு நாடுஞ்சிறப்பு மழிந்திடும், வாசவன் பீடமு மாமன்னர்பீடமு, நாசம தாகுமே நம் நந்தி யாணையே.

நகார மகாரஞ் சிகார நடுவாய், வகார மிரண்டும் வளியுடன் கூடி, யொகார முதற்கொண் டொருக்கா லுரைக்க, மகாரமுதல்வன மனத்தகத் தானே.

படமாடக் கோயிற் பகவற்கொன் றீயின், நடமாடக் கோயி னம்பர்க்கங் காகா, நடமாடக் கோயி னம்பர்க்கொன் றீயிற், படமாடக் கோயிற் பகவற்க தாமே.

அகர மாயிர மந்தணர்க் கீயிலென், சிகர மாயிரஞ் செய்து முடிக்கிலென், பகரு ஞானி பகலூண் பலத்துக்கு, நிகரில்லை யென்பது நிச்சயந்தானே.

தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள், முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள், பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள், சென்னியில் வைத்த சிவனரு ளாலே.

சிவசிவ வென்கிலர் தீவினை யாளர், சிவசிவ வென்றிடத் தீவினை மாளுஞ், சிவசிவ வென்றிடத் தேவருமாவர், சிவசிவ வென்னச் சிவகதி தானே.

பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும், பெறுதற் கரிய பிரானடி பேணார், பெறுதற் கரிய பிராணிக ளெல்லாம், பெறுதற் கரியதோர் பேறிழந் தாரே.

சித்தாந்தத் தேசிவன் முத்திசித் திக்கலாற், சித்தாந்தத்தே நிற்போர் முத்திசித் தித்தவர், சித்தாந்த வேதாந்தஞ் செம்பொருளாகலாற், சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே.

வானின் றிடிக்கிலென் மாகடல் பொங்கிலென், கானின்ற செந்தீக் கலந்துடன் வேகிலென், தானொன்றி மாருதஞ் சண்டமடிக்கிலெ, ஞானொன்றி நாதனை நாடுவ னானே.

பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம், பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணந், தன்னை மறைந்தது தன்கரணங்களாந், தன்னின் மறைந்தது தன்கர ணங்களே.

தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணியன், ஆயினு மீசனருளறி வாரில்லை, சேயினுநல்ல னணியனல் லன்பர்க்குத், தாயினுநல்லநற் றாழ்சடை யோனே.

கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை, மங்காமற் பூச மகிழ்விரே யாமாகிற், றங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி, சிங்காரமான திருவடி சேர்வரே.

புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு, வண்ணலதுகண் டருள்புரி யாநிற்கு, மெண்ணிலி பாவிக ளெம்மிறையீசனை, நண்ணறி யாம னழுவுகின் றாரே.

கருடனுருவங் கருதுமளவிற், பருவிடந்தீர்ந்து பயங்கெடுமாப்போல், குருவினுருவங் குறித்தவப் போதே, திரிமலந் தீர்ந்து சிவனவனாமே.

Use a book as a bee does a flower.

பண்டம் பொய்க்கூரை பழகிவிழுதலா, லுண்டவப் பெண்டிரு மக்களும்பின் செலார், கொண்ட விரதமு ஞானமு மல்லது, மண்டியவருடன் வழிநட வாதே.

கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே, விழக்கண்டுந் தேறார் விழியிலா மாந்தர், குழக்கன்றுசேத் தெருதாய்ச் சிலநாளில், விழக் கண்டுந் தேறார் வியனுலகோரே.

பொல்லாப் புலாலை நுகரும் புலையரை, யெல்லாருங் காண வியமன்றன் றூதுவர், செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தின், மல் லாக்கத் தள்ளி மறித்து வைப்பாரே.

தத்தஞ் சமயந் தகுதி நில்லாதாரை, யத்தன் சிவன் சொன்ன வாகமநூனெறி, யெத்தண்டமுஞ்செயு மம்மையிலிம்மைக்கே, மெய்த்தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே.

திலமத்தனை பொன்சிவ ஞானிக்கீந்தால், பலமுத்தி சித்திபர போகமுந்தரும், நிலமத்தனை பொன்னை, நின்மூடர்க்கீந்தால், பலமு மற்றே பரபோகமுங் குன்றுமே.

மாடத்துளானலன், மண்டபத்தானலன், கூடத்துளானலன் கோயிலுள்ளானலன், வேடத்துளானலன் வேட்கைவிட்டார் நெஞ் சின், மூடத்துளே நின்று முத்தி தந்தானே.

முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்கா, ளகத்திற் கண் கொண்டு காண்பதே யானந்த, மகட்குத்தாய் தன்மணாளனோடா டிய, சுகத்தைச் சொல்லென்றாற் சொலலுமாறெங்ஙனே.”

குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார், குருட்டினை நீக் காக் குருவினைக் கொள்வர், குருடுங் குருடுங் குருட்டாட்டமாடிக், குருடுங் குருடுங் குழிவிழுமாறே

வேடனெறி நில்லார் வேடம்பூண் டென்பயன், வேடநெறி நிற்போர் வேடமே மெய்வேடம், வேடநெறி நில்லார் தம்மை விறல் வேந்தன், வேடநெறி செய்தால் வீடது வாகுமே.

வேதத்தை விட்டவற மில்லை வேதத்தி, னோதத்தகு மறமெல லா முள்தர்க்க, வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற, வேதத்தை யோதியே வீடுபெற்றார்களே.

வாழ்கவே வாழ்கவென் நந்தி திருவடி, வாழ்கவே வாழ்க மல மறுத் தாள்பதம், வாழ்கவே வாழ்கமெஞ் ஞானத்தான்றாள், வாழ்க வே வாழ்க மயமிலான் பாதமே.

---

Look on the bright side of everything.

## பதினோராந்திருமுறை.

காரைக்காலம்மையார் அற்புதத்திருவந்தாதி.

அறிவானுந்தானேயறிவிப்பான்றானே
யறிவாயறிகின்றானே—யறிகின்ற
மெய்ப்பொருளுந்தானேவிரிசுடர்பாராகாச
மப்பொருளுந்தானேயவன்.

அன்றுந்திருவுருவங்காணாதேயாட்பட்டே
னின்றுந்திருவுருவங்காணேனே—னென்றுந்தா
னெவ்வுருவோனும்பிரானென்பார்கட்கென்னுரைக்கே
னெவ்வுருவோனின்னுருவமேது.

ஐயடிகள் காடவர்கோநாயனார் க்ஷேத்திர வெண்பா.

ஓடுகின்றநீர்மையொழிதலுமேயற்றாருங்
கோடுகின்றார்மூப்புங்குறுகிற்று—நாடுகின்ற
நல்லச்சிற்றம்பலமேநண்ணாமுனன்னெஞ்சே
தில்லைச்சிற்றம்பலமேசேர்.

குந்திநடந்துகுனிந்தொருகைகோலூன்றி
நொந்திருமியேங்கிநுரைத்தேறி—வந்துந்தி
யையாறுவாயாறுபாயாமுனெஞ்சமே
யையாறுவாயாலழை.

சேரமான் பெருமானாயனார் பொன்வண்ணத்தந்தாதி.

பொன்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமேனிபொலிந்திலங்கு
மின்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணம்வீழ்சடைவெள்ளிக்குன்
றன்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமால்விடைதன்னைக்கண்ட
வென்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமாகியவீசனுக்கே.

நக்கீரதேவநாயனார் அருளிச்செய்த திருமுருகாற்றுப்படை.

ஒருமுருகா வென்றென் னுள்ளங்குளிர வுவந்துடனே
வருமுருகா வென்று வாய்வெருவா நிற்பக்கையிங்ஙனே
தருமுருகா வென்று தான்புலம்பாநிற்பத் தையன்முன்னே
திருமுருகாற்றுப் படையுடனே வருஞ்சேவகனே.

குன்றமெறிந்தாய் குரைகடலிற்சூர்தடிந்தாய்
புன்றலையபூதப் பொருபடையா—யென்று
மிளையாயழகியா யேறூர்ந்தானேறே
யுளையாயென்னுள்ளத் துறை.

குன்றமெறிந்ததுவுங் குன்றப்போர் செய்ததுவுங்
கன்றங்கமரரிடர் தீர்த்ததுவு—மின்றென்னைக்
கைவிடாநின்றதுவுங் கற்பொதும்பிற்காத்ததுவு
மெய்விடா வீரன்கை வேல்.

Never walk one way and look another.

வீரவேற்றுரைவேல் விண்ணோர்சிறைமீட்ட
தீரவேல்செவ்வே டிருக்கைவேல்—வாரி
குளித்தவேல்கொற்றவேல் சூர்மார்புங்குன்றுந்
துளைத்தவேலுண்டே துணை.

இன்னமொருகா லெனதிடும்பைக் குன்றுக்குங்
கொன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா—முன்னம்
பனிவேய்நெடுங்குன்றம் பட்டுருவத்தொட்டத்
தனிவேலை வாங்கத் தகும்.

உன்னையொழிய வொருவரையு நம்புகிலேன்
பின்னையொருவரையான் பின்செல்லேன்—பன்னிருகைக்
கோலப்பாவானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தில் வாழ்வே.

அஞ்சுமுகந்தோன்றி லாறுமுகந்தோன்றும்
வெஞ்சமரந்தோன்றில் வேலொன்று—நெஞ்சி
லொருகாலினைக்கி லிருகாலுந்தோன்று
முருகாவென்றோதுவார் முன்.

முருகனேசெந்தி முதல்வனே மாயோன்
மருகனேயீசன் மகனே—ஒருகைமுகன்
றம்பியேநின்னுடைய தண்டைக்காலெப்போது
நம்பியே கைதொழுவே நான்.

## பட்டினத்தார்பாடல்.

கான்சாயும்வெள்ளிமலைக்கரசேநின்கழனம்பினே
னூன்சாயுஞ்சென்மமொழித்திடுவாய்கரவூரனுக்கா
மான்சாயச்செங்கைமழுவலஞ்சாயவனைந்தகொன்றைத்
தேன்சாயநல்லதிருமேனிசாய்த்தசிவக்கொழுந்தே.

மெய்த்தொண்டர்செல்லுநெறியறியேன்மிகநற்பணிசெய்
கைத்தொண்டர்தம்மிலுநற்றொண்டுவந்திலனுண்பதற்கே
பொய்த்தொண்டுபேசிப்புறம்புறமேயுன்னைப்போற்றுகின்ற
வித்தொண்டனேன்பணிகொள்ளுதியோகச்சியேகம்பனே.

நல்லாரிணக்கமுநின்பூசைநேசமுஞானமுமே
யல்லாதுவேறுநிலையுளதோவகமும்பொருளு
மில்லாளுஞ்சுற்றமுமைந்தரும்வாழ்வுமெழிலுடம்பு
மெல்லாம்வெளிமயக்கேயிறைவாகச்சியேகம்பனே.

He that neglects time, time will neglect.

பிறக்கும்பொழுதுகொடுவந்ததில்லைப்பிறந்துமண்மே
லிறக்கும்பொழுதுகொடுபோவதில்லையிடைநடுவிற்
குறிக்குமிச்செல்வஞ்சிவன்றந்ததென்றுகொடுக்கறியா
திறக்குங்குலாமருக்கென்சொல்லுவேன்கச்சியேகம்பனே.

ஊருஞ்சதமல்லவுற்றார்சதமல்லவுற்றுப்பெற்ற
பேருஞ்சதமல்லபெண்டீர்சதமல்லபிள்ளைகளுஞ்
சீருஞ்சதமல்லசெல்வஞ்சதமல்லதேசத்திலே
யாருஞ்சதமல்லநின்றாள்சதங்கச்சியேகம்பனே.

வாதுக்குச்சண்டைக்குப்போவர்வருவர்வழக்குரைப்பர்
தீதுக்குதவியுஞ்செய்திடுவார்தினந்தேடியொன்று
மாதுக்கழிந்துமயங்கிடுவார்விதிமாளுமட்டு
மேதுக்கிவர்பிறந்தாரிறைவாகச்சியேகம்பனே.

ஆற்றிற்கரைத்தபுளியாக்கிடாமலென்னன்பையெல்லாம்
போற்றித்திருவுளம்பற்றுமையாபுரமூன்றெரித்துக்
கூற்றைப்பணிகொளுந்தாளுடையாய்குன்றவில்லுடையா
யேற்றுக்கொடியுடையாயிறைவாகச்சியேகம்பனே.

கல்லார்சிவகதைநல்லோர்தமக்குக்கனவிலுமெய்
சொல்லார்பசித்தவர்க்கன்னங்கொடார்குருசொன்னபடி
நில்லாரறத்தைநினையார்நின்னாமநினைவிற்சற்று
மில்லாரிருந்தென்னிறந்தென்புகல்கச்சியேகம்பனே.

முடிசார்ந்தமன்னருமற்றுமுள்ளோருமுடிவிலொரு
பிடிசாம்பராய்வெந்துமண்ணாவதுங்கண்டுபின்னுமிந்தப்
படிசார்ந்தவாழ்வைநினைப்பதல்லாற்பொன்னினம்பலவ
ரடிசார்ந்துநாமுய்யவேண்டுமென்றேயறிவாரில்லையே.

காலையுபாதிமலஞ்சலமாமன்றிக்கட்டுச்சியிற்
சாலவுபாதிபசிதாகமாகுமுற்சஞ்சிதமா
மாலையுபாதிதுயில்காமமாமிவைமாற்றிவிட்டே
பாலமுகந்தருளம்பலவாவென்னையாண்டருளே.

ஊட்டுவிப்பானுமுறக்குவிப்பானுமிங்கொன்றொடொன்றை
மூட்டுவிப்பானுமுயங்குவிப்பானுமுயன்றவினை
காட்டுவிப்பானுமிருவினைப்பாசக்கயிற்றின்வழி
யாட்டுவிப்பானுமொருவனுண்டேதில்லையம்பலத்தே.

தெய்வச்சிதம்பரதேவாவுன்சித்தந்திரும்பிவிட்டாற்
பொய்வைத்தசொப்பனமாமன்னர்வாழ்வும்புவியுமெங்கே
மெய்வைத்தசெல்வமெங்கேமண்டலீகர்தம்மேடையெங்கே
கைவைத்தநாடகசாலையெங்கேயிதுகண்மயக்கே.

---

பிறவாதிருக்கவரம்பெறல்வேண்டும்பிறந்துவிட்டா
லிறவாதிருக்கமருந்துண்டுகாணிதுவெப்படியோ
வறமார்புகழ்தில்லையம்பலவாணரடிக்கமல
மறவாதிருமனமேயதுகாணன்மருந்துனக்கே.

சொல்லிலுஞ்சொல்லின்முடிவிலும்வேதச்சுருதியிலு
மல்லிலுமாசற்றவாகாயந்தன்னிலுமாய்ந்துவிட்டோ
ரில்லிலுமன்பரிடத்திலுமீசனிருக்குமிடங்
கல்லிலுஞ்செம்பிலுமோவிருப்பானெங்கள்கண்ணுதலே.

அத்தனைமுப்பத்துமுக்கோடிதேவர்க்கதிபதியை
நித்தனையம்மைசிவகாமசுந்தரிநேசனையெங்
கத்தனைப்பொன்னம்பலத்தாடுமையனைக்காணக்கண்க
ளெத்தனைகோடியுகமோதவஞ்செய்திருக்கின்றவே.

வாளான்மகவரிந்தூட்டவல்லேனல்லன்மாதுசொன்ன
சூளாவிளமைதுறக்கவல்லேனல்லன்றொண்டுசெய்து
நாளாறிற்கண்ணிடந்தப்பவல்லேனல்லனானினிச்சென்
றாளாவதெப்படியோதிருக்காளத்தியப்பருக்கே.

வீடுநமக்குத்திருவாலங்காடுவிமலர்தந்த
வோடுநமக்குண்டுவற்றாதபாத்திரமோங்குசெல்வ
நாடுநமக்குண்டுகேட்டதெல்லாந்தரநன்னெஞ்சமே
யீடுநமக்குச்சொலவோவொருவருமிங்கில்லையே.

கையொன்றுசெய்யவிழியொன்றுநாடக்கருத்தொன்றெண்ணப்
பொய்யொன்றுவஞ்சகநாவொன்றுபேசப்புலால்கமழு
மெய்யொன்றுசாரச்செவியொன்றுகேட்கவிரும்புமியான்
செய்கின்றபூசையெவ்வாறுகொள்வாய்வினைதீர்த்தவனே.

கண்ணுண்டுகாணக்கருத்துண்டுநோக்கக்கசிந்துருகிப்
பண்ணுண்டுபாடச்செவியுண்டுகேட்கப்பல்பச்சிலையா
லெண்ணுண்டுசாத்தவெதிர்நிற்கவீசனிருக்கையிலே
மண்ணுண்டுபோகுதையோகெடுவீரிந்தமானுடமே.

நாட்டமென்றேயிருசற்குருபாதத்தைநம்புபொம்ம
லாட்டமென்றேயிருபொல்லாவுடலையடர்ந்தசந்தைக்
கூட்டமென்றேயிருசுற்றத்தைவாழ்வைக்குடங்கவிழ்நீ
ரோட்டமென்றேயிருநெஞ்சேயுனக்குபதேசமிதே.

நானெத்தனைபுத்திசொன்னாலுங்கேட்டிலைநன்னெஞ்சமே
யேனிப்படிக்கெட்டுழலுகின்றாயினியேதுமிலா
வானத்தின்மீனுக்குவன்றூண்டியிட்டவகையதுபோற்
போனத்தைமீளநினைக்கின்றனையென்னபுத்தியிதே.

Knowledge makes humble.

காலன்வருமுன்னேகண்பஞ்சடைமுன்னே
பாலுண்டகடைவாய்படுமுன்னே—மேல்விழுந்தே
யுற்றாரழுமுன்னேயூரார்சுடுமுன்னே
குற்றாலத்தானையேகூறு.

## பன்னிரண்டாந்திருமுறை.

### பெரியபுராணச் செய்யுட் டிரட்டு.

என்று மின்பம் பெருகு மியல்பினா
லொன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கு நிலவி யுலகெலாம்.

ஆதியாய்நடுவுமாகியளவிலாவளவுமாகிச்
சோதியாயுணர்வுமாகித்தோன்றியபொருளுமாகிப்
பேதியாவேகமாகிப்பெண்ணுமாயாணுமாகிப்
போதியாநிற்குந்தில்லைப்பொதுநடம்போற்றிபோற்றி.

மண்ணினிற்பிறந்தார்பெறும்பயன்மதிசூடு
மண்ணலாரடியார்தமையமுதுசெய்வித்தல்
கண்ணினாலவர்நல்விழாப்பொலிவுகண்டார்த
லுண்மையாமெனிலுலகர்முன்வருகெனவுரைப்பார்.

வேதநெறிதழைத்தோங்கமிகுசைவத்துறைவிளங்கப்
பூதபரம்பரைபொலியப்புனிதவாய்மலர்ந்தழுத
சீதவளவயற்புகலித்திருஞானசம்பந்தர்
பாதமலர்தலைக்கொண்டுதிருத்தொண்டுபரவுவாம்.

## திருத்தொண்டர்புராணசாரம்.

மல்குபுகழ் வன்றொண்ட ரருளா லீந்த வளமருவு திருத்தொண்டத் தொகையின் வாய்மை, நல்கும்வகை புல்கும்வகை நம்பியாண்டார் நம்பிதிருவந்தாதி நவின்ற வாற்றாற், பல்குநெறித்தொண்டர்சீர் பரவவல்ல பான்மையா ரெமையாளும் பரிவால் வைத்த, செல்வமிகுந் திருத்தொண்டர் புராணமேவுந் திருந்துபய னடியேனுஞ் செப்பலுற்றேன்.

### சுந்தரமூர்த்திநாயனார்—ஆடி—சுவாதி.

தண்கயிலை யதுநீங்கி நாவ லூர்வாழ் சைவனார் சடையனார் தனய னாராய், மண்புகழ வருட்டுறைபா லோலை காட்டி மணம்விலக்க வன்றொண்டா யதிகை சேர்ந்து, நண்பினுட னருள்புரிய வாரூர்மேவி நலங்கிளரும் பரவைகோ ணயந்து வைகித், திண்குலவும் விறன்மிண்டர் திறல்கண் டேத்துந் திருத்தொண்டத் தொகையருளாற் செப்பி னாரே.

செப்பலருங் குண்டையூர் நெல்லமைத்துத் திருப்புகலூர்ச் செங்கல்செழும் பொன்னாச் செய்து, தப்பின்முது குன்றார்தரும் பொருளாற் றிட்டுத் தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்துநாத, ரெய்பிறனித் தூதுவந்தா றாடு கிறி யுறுமுதலை சிறுமதலை யுமிழ நல்கி, மெய்ப்பெரிய களிறேறி யருளாற்சேர வேந்தருடன் வடகயிலை மேவினாரே.

## தில்லைவாழந்தணர்.

நல்லவா னவர்போற்றுந் தில்லை மன்று ளாடகஞ்செய் பெருமானுக் கணியார் நற்பொற், றொல்லை வான் பணியெடுத்தற் குரியார் வீடுந் துறந்தநெறி யார்தொண்டத் தொகைமுன் பாடத், தில்லைவா ழந்தணரென் றெடுத்து நாதன் செப்புமரு ளுடையார் முத் தீயார்பத்திக், கெல்லைகாண் பரியாரொப் புலகிற் றமேயெய் ந்துளா ரெமையாள வாய்ந்து ளாரே.

## திருநீலகண்ட நாயனார்—தை—விசாகம்.

இல்லைகர் வேட்கோவர் தூர்த்த ராகித் தீண்டிலெமைத் திருநீல கண்டமென்று, சொல்லுமனை யாடனையே யன்றி மற்றுந் தொடியிடையா ரிடையின்பந் துறந்து மூத்தங், கெல்லையிலோ டிறைவைத்து மாற்றி நாங்க ளெடுத்திலமென் றியம்புமென விழிந்து பொய்கை, மெல்லியலா ளுடன்மூழ்கி யிளமை யெய்தி விளங்கு புலீச் சரத்தரனை மேவினாரே.

## இயற்பகை நாயனார்—மார்கழி—உத்திரம்.

எழிலாருங் காவிரிப்பூம் பட்டினத்து ளியல்வணிக ரியற்பகையா ரிருவர் தேட, வழலாய பிரான்றார்த்த மறையோனாகியாயி ழையைத் தரவேண்டி யணைய வையன், கழலாரப் பணிந்துமனைக் கற்பின் மேன்மைக் காதலியைக் கொடுத்தமர்செய் கருத்தால் வந்த், பிழையாருஞ் சுற்றமெலாந் துணித்து மீளப் பிஞ்ஞகனை ரழைத்தருளப் பெற்று ளாரே.

## இளையான்குடிமாற நாயனார்—ஆவணி—மகம்.

மன்னியவே ளாண்டொன்மை யிளசை மாறர் வறுமையா லுணவுமிக மறந்து வைகி, உன்னருநள் ளிருண்மழையி லுண்டி வேண்டி யும்பர்பிரா னணையவய லுழுது வித்துஞ், செந்நென்முளை யமுதுமனை யலக்கா லாக்கிச் சிறுபயிரின் கறியமுது திருந்தச் செய்து, பன்னலரு முணவருந்தற் கெழுந்த சோதிப் பரலோக முழுதாண்ட பான்மை யாரே.

---

மெய்ப்பொருணாயனார்—கார்த்திகை—உத்திரம்.

சேதிபர்நற் கோவலூர் மலாட மன்னர் திருவேட மெய்ப் பொருளாத் தெளிந்த சிந்தை, நீதியினா ருடன்பொருது தோற்ற மாற்றா னெடுஞ்சினமுங் கொடும்பகையு நிகழாவண்ணம், மாதவர் போ லொருமுறைமகொண் டணுகிவாளால் வன்மையுறிந் திடமரு ண்டு வந்த தத்தன், நாதனுற நமர்தத்தா வென்று நோக்கிக் கடிந சுல்விக் திறைவனடி யகக்கொண் டாரே.

விறன்மிண்டநாயனார்— சித்திரை—திருவாதிரை.

விளங்குதிருச் செங்குன்றூர் வேளாண் டொன்மை விறன் மிண்டார் திருவாரூர் மேவு நாளில், வளங்குலவு தொண்டரடி வணங்கா தேகும் வன்றொண்டன் புறகவனை வலிய வாண்ட, துள ங்குசடை முடியோனும் புறகென் றன்பாற் சொல்லுதலு மவர் தொண்டத் தொகைமுன் பாட, வுளங்குளிர வுளமெதன்று ரதனை லண்ண லுவகைதரவுயர்கணத்து ளோங்கி னாரே.

அமர்நீதிநாயனார்—ஆனி—பூரம்.

பழையாறை வணிகரமர் நீதி யார்பாற் பரவுசி றுமுனிவடிவாய்ப் பயிலு நலலூர்க், குழைகாதர் வந்தொருகோ வணத்தை வைத்துக் கொடுத்ததனை யெடுத்தொளித்துக் குளித்து வந்து, தொழிலாரு மதுவேண்டி வெகுண்டு நீரித் துலையிலிடுங் கோவணநேர் தூக்கு மென்ன, எழிலாரும் பொன்மனைவி யிளஞ்சே யேற்றி யேறினர் வானுலகுதொழ வேறி னாரே.

ஏறிபத்தநாயனார்—மாசி—அத்தம்.

திருமருவு கருவூரா னிலையார் சாத்துஞ் சிவகாமி யார்மலரைச் சிந்த யானை, யுரனெறியோ ரெறிபத்தர் பாக ரோடு மறவெறிய வென்னுயிரு மகற்றீ ரென்று, புரவலனார் கொடுத்தபடை யன் பால் வாங்கிப் புரிந்தரிவான் புகவெழுந்த புனித வாக்காற், கரியி னுடன்விழுந்தாரு மெழுநதார் தாமுங் கணநாத ர[illegible]கக் கொண்டாரே.

ஏனாதிநாத நாயனார்—புரட்டாசி—உத்திராடம்

ஈழக் குலச்சான்றா ரெயின னூர்வா ழேனாதி நாதனா ரிறைவ னீற்றைத், தாழத் தொழுமரபார் படைக ளாற்றுந் தன்மைபெரு வதிசூரன் சமரிற் றோற்று, வாழத் திருநீறு சாத்தக் கண்டு மருண் டார் தெருண்டார் கைவாள் விடார்நேர், வீழக் களிப்பார்போ னின்றே யாக்கை விடுவித்துச் சிவனருளே மேவினாரே.

We learn something, even by our failures.

### கண்ணப்ப நாயனார்—தை—மிருகசீரிடம்.

வேடாதி பதியுடுப்பூர் வேந்த னாகன் விளங்கியசேய் திண்ணனார் கன்னி வேட்டைக், காடதில்வாய் மஞ்சனமுங் குஞ்சிதரு மலருங் காய்ச்சினமென் றிடுதசையுங் காளத்தியார்க்குத், தேட்டருமன் பினிலாறு தினத்தளவு மளிப்பச் சீறு சிவகோசரியுந் தெளிய விழிப் புண்ணீ, ரோடவொரு கண்ணப்பி யொருகண்ணப்ப வொழிகவெனு மருள்கொட்டரு குறநின்றாரே.

### குங்குலிக்கலய நாயனார்—ஆவணி—மூலம்.

சீலமலி திருக்கடவூர்க் கலயனாராந் திகழ்மறையோர், பணிவறுமை சிதையாமுன்னே, தாலியைநெற் கொளவென்று வாங்கிக் கொண்டு சங்கையில் குங்குலியத்தாற் சார்ந்தசெல்வர், ஞாலநிகழ் திருப்பனந்தா ளாதர்நேரே நரபதியுந் தொழக்கர்சா ணயந்துபோ தப், பாலமுத முண்டாரு மரசுமெய்திப் பரிந்தமுது செயவருள் சேர் பான்மை யாரே.

### மானக்கஞ்சாறநாயனார்—மார்கழி—சுவாதி.

கஞ்சநகர் மானக்கஞ் சாறனார்சீர்க் காதன்மகள் வதுவை மணங் காணநாதன், வஞ்சமலி மாவிரதத் தலைவனாகி வந்துபுகுந் தவளளக மகிழ்ந்துநோக்கிப், பஞ்சவடிக் காமென்ன வரிந்து நீட்டும் பத்தரெதிர் மறைந்திறைவன் பணித்தவாக்கா, லெஞ்சலில் வண் குழல்பெற்ற பேதை மாதை யேயர்பிராற் குதவியருளெய் [illegible]ர.

### அரிவாட்டாயநாயனார்—தை—திருவாதிரை.

தாவில்கண மங்கலத்துள் வேளாண்டொன்மைத் தாயனார் நாயனார் தமக்கே செந்நெற், றூவரிசி யெனவிளைவ தவையேயாகத் துறந்துணவு வடுவரிசி துளங்குகீரை, யாவினினைந் துடன் கொணர வோர்கமரிற்சிந்த வழிந்தரிவாள் கொண்டூட்டி யரியாமுன்னே, மாவடுவி னொலியுமரன் கரமுந்தோன்றி வாள்விலக்கி யமரர் தொழ வைத்ததன்றே.

### ஆனாயநாயனார்—கார்த்திகை—அத்தம்.

மங்கலமா மழநாட்டு மங்கலமாநகருண் மருவுபுக ழானயர் வளராமேய்ப்பார், கொங்கலர்பூந் திருக்கொன்றை மருங்குசார்ந்து குழலிசையி னைந்தெழுத்துங் குழையவைத்துத், தங்குசராசரங்களெல்லா முருகாநிற்பத் தம்பிரா னணைந்துசெவி தாழ்த்தி வாழ்ந்து, பொங்கியவான் கருணைபுரிந் தென்று மூதப் போதுக வென் றருளுவுடன் போயினாரே.

மூர்த்திநாயனார்—ஆடி—கார்த்திகை.

வழங்குபுகழ் மதுரைநகர் மூர்த்தியாராம் வணிகர்திரு வாய் மன்னர் சாத்தத், தழங்குதிர முழங்கைதரத் தேய்த்த ஆறுந் தவிர்ந்தமணர் வஞ்சனையுந் தவிரமன்ன, னிழந்தவுயிரின னுக ஞாலநல்க வெழில்வேணி முடியாக விலங்குவேட, முழங்கு புக ழணியாக விரைநீறாக மும்மையுல காண்டருளின் முன்னி னரே.

முருகநாயனார்—வைகாசி—மூலம்.

மன்னுதிருப் புகலூர்வாழ் முருகனார் மறையவர்கோ வர்த் தமா னீச்சரத்தார், சென்னியிலுக் கழகமரு மலர்கள் கொய்து திருமாலை புகழ்மாலை திகழச்சாத்திக், கன்னிமதிற் கழுமலநா டுடையநாதன் காதன்மிகு மணங்காணுங் களிப்பினாலே, யின்னல் கெட வுடன்சேவித் தருளான் மீளா திலங்குபெரு மணத்தரனை யெய்தினாரே.

உருத்திரபசுபதிநாயனார்—புரட்டாசி—அச்சுவினி.

பங்கமில்வண் புகழ்நிலவு தலையூர்வாழும் பசுபதியா ரெனு மறையோர் பணிந்துசெந்தே, னங்கமல மடுவினிடை யல்லுமெ ல்லு மகலாதே யாகளமா யமர்ந்துநின்று, திங்கள்வளர் சடை முடியா னடிகள்போற்றித் திருவெழுத்து முருத்திரமுந் திகழ வோதி, மங்கையிட முடையபிரா னருளான்மேலை வானவர்க டொழுமுலகின் மன்னினாரே.

திருநாளைப்போவார் நாயனார்—புரட்டாசி—உரோகிணி.

நன்மைதிகழ் மேற்காநாட் டாதனூர்வாழ் நந்தனார் புறத் தொண்டர் நாளைப்போகப், பொன்மலிதென் புலியூர்க்கென் றுரைப்பார் புன்கூர்ப் பொய்கையமைத் தடலேறு பெரியநோக்கி, வண்மதில்சூழ் தில்லையிறை யருளால் வாய்ந்த வண்டழலி னிடை மூழ்கி மறையோர் போற்ற, மின்மலிசெஞ் சடை முனியா வெழுந் துநாதன் விளங்குநடந் தொழுமன்றுண் மேவினாரே.

திருக்குறிப்புத்தொண்டநாயனார்—சித்திரை—சுவாதி.

கொந்தலர்பூம் பொழிற்கச்சி நகரேகாலிக் குலத்தலைவர் தவர்குறிப்புக் குறித்துளார்பால், வந்திறைவர் நடக்கின்று தாரீ ராகின் வருந்துமுடை லெனவாங்கி மாசுநீத்த, கந்தைபுல ராதொ ழிய மழையுமாலைக் கடும்பொழுதும் வரக்கண்டு கலங்கிக் கன் மேற், சிந்தமுடி புடைப்பளவிற் றிருவேகம்பர் திருக்கைகொடு பிடித்துயர்வான் சேர்த்தினாரே.

An hour in the morning is worth two at night.

சண்டேசுரநாயனார்—தை—உத்திரம்.

வேதமலி சேய்ஞலூ ரெச்சதத்தன் விளங்கியசேய் மறை பயிலும் விசாரசன்மர், கோதனமேய்ப் பவன்கொடுமை பொறாது தாமே கொண்டுநிரை மண்ணியின்றென் கரையினீழற், றாதகி யின் மணலிலிங்கத் தான்பாலாட்டத் தாதைபொறா தவையிட றுந் தாள்கண்மாளக், காதிமலர்த் தாமமுயர் நாமமுண்ட கலமக னும் பதமருளாற் கைக்கொண்டாரே.

திருநாவுக்கரசுநாயனார்—சித்திரை—சதயம்.

போற்றுதிரு வாமூரில் வேளாண்டொன்மைப் பொருவில் கொறுக் கையரதிபர் புகழனார்பான், மாற்றருமன் பிணிற்றிலத வதியாமாது வந்துதித்த பின்புமருணீக்கியாருந், தோற்றியமண் சமயமுறு துயரநீங்கத் துணைவாரு டரவந்த சூலைநோயாற், பாற் றருநீ ளிடரெய்திப் பாடலிபுரத்திற் பாழியொழித் தரனதி கைப் பதியில்வந்தார்.

வந்துதமக் கைபாருளா னீறுசாத்தி வண்டமிழா னோய்தீர்ந்து வாக்கின் மன்னாய், வெந்தபொடி விடம்வேழம் வேலைநீந்தி வியன்சூலங் கொடியிடபம் விளங்கச் சாத்தி, யந்தமிலாப் பூதிமக னரவும்மாற்றி யருட்காசு பெற்றுமறை யடைப்பு நீக்கிப், புந்தி மகிழ்ந் தையாற்றிற் கயிலைகண்டு பூம்புகலூ ரரன்பாதம் பொருந்தி னாரே.

குலச்சிறை நாயனார்—ஆவணி—அநுஷம்.

கோதில்புகழ் தருணமேற் குடியார்கோவண் குலச்சிறையார் தென்னர்குல வமைச்சர்குன்றா, மாதவர்க ளடிபரவு மரபார்பாண்டி மாதேவி யாரருள்வான் பயிர்க்குவேலி, காதன்மிகு கவுணியர் கோன் வாதிற்றோற்ற கையரைவை யைக்கரைசேர் கழுவிலேற்று, நீதியினா ராலவாய் நிமலர்ச்சேர்ந்த நின்மலனா ரென்மலங்க ணீக்கி னாரே.

பெருமிழலைக்குறும்ப நாயனார்—ஆடி—சித்திரை.

கொண்டல்பனி வளர்சோலை மிழலைநாட்டுக் கோதில்புகழ்ப் பெருமிழலைக் குறும்பனார்சீ, ரண்டர்பிரா னடியவருக் கடியாராகு மாதரவா லணுக்கவன் றொண்டர்க்காளாய், மண்டொழுமெண் டரு சித்தி வாய்த்துளார்தாம் வன்றொண்டர் வடகயிலை மருவுநாண்மு, னெண்டிகழு மறைமூல நெறியூடேகி யிலங்கொளிசேர் வடகயிலை யெய்தினாரே.

---

He that giveth to the poor lendeth to the lord.

காரைக்காலம்மையார்—பங்குனி—சுவாதி.

தங்குபுகழ்க் காரைக்கால் வணிகன்மிக்க தனதத்தன் றரும் புனித வதியார்மாவின், செங்கனிக டிருவருளா லழைப்பக்கண்டு திகழ்கணவ னதிசயித்துத் தேசநீங்க, வங்கவுட லிழுந்துமுடி நடையாலேறி யம்மையே யெனநாத னப்பாவென்று, பொங்குவ டகயிலைபணிந் தாலங்காட்டிற் புனிதனடி மனவரதம் போற்றி னாரே.

அப்பூதியடிகளுயனார்—தை—சதயம்.

அந்தமினற் றிங்களூர் வருமப்பூதி யருமறையோர் திருநா வுக்கரசினுமம், பந்தரிடை யெழுதக்கண் டாசுமெய்தப் பணிந்து பரி கலநேடிப் படப்பைசேர்ந்த, மைந்தனுயி ருயர்கதலி யிலை மேற்றுஞ்சும் வாளரவு கவரவுடன் மறைத்தல் கேட்டுச், சிந்தை மகிழ்ந் துயர்பதிக மருந்தாற்றீர்த்துத் திருவமுது செயவருளைச் சேர்ந்துளாரே.

திருநீலநக்கநாயனார்—வைகாசி—மூலம்.

நீதிதரு மறையோர்வாழ் சாத்தமங்கை நீலநக்க ரயவந்தி நிமலர்மேனி, யூதிவிழுஞ் சிலம்பிகடிந் தவளைநீத்தார்க் குமியாத விடநாத னுறுநோய் காட்டக் காதன்மிகு, மனைவியையு மகிழ்ந்து மேவிக் காழியர்கோ னமுதுசெயக் களித்துவாழ்ந்து, வேதிகை யிற் பாணனார்க் கிடமுநல்கி விளங்குபெரு மணத்தரனை மேவி னாரே.

நமிநந்தியடிகளுயனார்—வைகாசி—பூசம்.

மன்னுபுகழ் மறையோர்வா ழேமப்பேறார் நமிநந்தி யடிக டிரு விளக்குநல்க, வெண்ணெயம ணர்கள்விலக்க நீராலாரூ ரிலங் குமர ஒன்றியாரூக் கேற்றுநாளிற், கண்ணமணர் கெடக்கண்பெற் றடிகள்வாழக் காவலனு னிபந்தங்கள் கட்டுவித்தே, யண்ணலருள் கண்டாரூ ரமர்ந்துதொண்டர்க் காணியெனு மரசினரு ளடைந்து ளாரே.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்—வைகாசி—மூலம்.

காழிநகர்ச் சிவபாத விதயர்தந்த கவுணியர்கோ னமுதுமை யாள் கருதியூட்டு, மேழிசையி னமுதுண்டு தாளம்வாங்கி யிலங்கி யநித் திலச்சிவிகை யிசையவேறி, வாழுமுய லகனகற்றிப் பந்த ரேய்ந்து வளர்கிழிபெற் றரவின்விட மருகற்றீர்த்து, வீழிநகர்க்கா செய்தி யறைக்கதவம் பிணித்து மீனவன்மே னியின்வெப்பு விடு வித்தாரே.

Wit is the lightning of the mind.

ஆரெரியிட் டெடுத்தவே டவைமுன்னேற்றி யாற்றிலிடு மேடெதிர்போ யணையவேற்றி, யோரமண ரொழியாமே கழுவி லேற்றி யோதுதிருப்பதிகத்தா லோடமேற்றிக், காருதவுமிடி புத் தன்றலையி லேற்றிக்காயாத பனையின்முது கனிகளேற்றி, யீரமிலா வங்கமுயி ரெய்தவேற்றி யிலங்குபெரு மணத்தரனை யெய்தி னாரே,

### ஏயர்கோன்கலிக்காம நாயனார்—ஆனி—ரேவதி.

ஏதமில்வே ளாளர்பெரு மங்கலத்து ளேயர்கோன் கலிக்காம ரிறையைநேரே, தூதுகொளு மவனானா லென்னா மென்னுந் துணிவினர்பா லிறைவனருஞ் சூலையேவி, வேதனைவன் றொண் டன்வரி னீங்குமென்ன வெகுண்டுடல்வாள் கொடுதுறந்து மேய நாவற், போதகமு முடலிகழ வெழுந்துதாழ்ந்து போற்றியது விலக்கியருள் பொருந்தினாரே.

### திருமூல நாயனார்—அற்பிசி—அசுவினி.

கயிலாயத் தொருசித்தர் பொதியிற் சேர்வார் காவிரிசூழ் சாத்தனூர் கருதுமூலன், பயிலாநோ யுடன்வீயத் துயரநீடும் பசுக் களைக்கண் டவனுடலிற் பாய்ந்துபோத, வயலாகப் பண்டையுட லருளான்மேவி யாவடுதண் டுறையாண்டுக் கொருபா வாகக், குயி லாரு மரசடியி லிருந்துகூறிக் கோதிலா வடகயிலை குறுகினாரே.

### தண்டியடிகணாயனார்—பங்குனி—சதயம்.

திருவாரூர் வருந்தண்டி யடிகள்காட்சி சேராதார் குளங் கொட்டற் கமணர்சீறிக், குருடாநீமுன் செவிடுங் கூடிற்றென்று குறித்தறியைப் பறித்தெறியக் கொதித்துத்தங்க, ணாருளாலே விழித்தெவரு மந்தராக வமணர்கலக் கம்பலகண் டவர்கள் பாழிப், பருவான கற்பறித்தா விக்கரையுங் கட்டிப் பானருளா லமருலகம் பற்றினாரே.

### மூர்க்க நாயனார்—கார்த்திகை—மூலம்.

தொண்டைவள நாட்டுவளர் வேற்காட்டூர்வாழ் தொல்லுழ வர் நற்சூதர் சூதுவென்று, கொண்டபொருள் கொண்டன்பர்க் கமுதளிக்குங் கொள்கையினார் திருக்குடந்தை குறுகியுள்ளார், விண்டிசைவு குழறுமொழி வீணர்மாள வெகுண்டிடலான் மூர்க்க ரென விளம்புநாம, மெண்டிசையு மிகவுடையா ரண்டர்போற்று மேழுலகு முடனாளு மியல்பினாரே.

சோமாசிமாறநாயனார்—வைகாசி—ஆயிலியம்.

அம்பர்நக ரந்தணர்சோ மாசிமாற ரன்பர்களாம் யாவர்க்கு மன்பினமு தளிப்பா, ரும்பர்நிகழ் வகையாகம் பலவுஞ்செய்யு முண்மையினு ரைந்தெழுத்து மோவாநாவார், நம்பர்திகழ் திருவா ரூர் நயந்துபோற்று நாவலர்கோ னடிபரவு நன்மையாலே, யிம்பர் தொழ வும்பர்பணிந் தேத்தமேலே யேழுலகு முடனுளு மியல்பி னுரே.

சாக்கியநாயனார்—மார்கழி—பூராடம்.

சங்கமங்கை வரும்வேளாண் டலைவர்காஞ்சிச் சாக்கியரோடி யைந்தவர்தந் தவறுஞ்சைவத், துங்கமலி பொருளுமுணர்ந் தந்த வேடந் துறவாதே சிவலிங்கந் தொழுவோர்கண்டோ, ரங்கன்ம லர் திருமேனி யழுந்தச்சாத்தி யமருநாண் மறந்தொருநா ளருந் தாதோடிச், செங்கலெறிந் திடுமளவின் மகிழ்ந்தநாதன் றிருவரு ளா லமருலகஞ் சேர்ந்துளாரே.

சிறப்புலிநாயனார்—கார்த்திகை—பூராடம்.

திருவாக்கூ ரருமறையோ ருலகமேத்துச் சிறப்புலியார் மறப் புலியா ருரிமேற்செங்க, ணரவார்த்தார் வருமேற்றூர்க் கன்பரா னூர்க் கமுதளிப்பா ரொளிவெண்ணீ றணிந்தமார்பர், பெருவாக் கான் மறைபரவி யாகம்போற்றும் பெற்றியினு ரைந்தெழுத்தும் பிறழாதோதிக், கருவாக்கா விறைவன்று ளிணைகள்சேர்ந்த கருத் தினு ரெனையாவுந் திருத்தினுரே.

சிறுத்தொண்டநாயனார்—சித்திரை—பரணி.

பல்குமருத் துவரதிபர் செங்காட்டாங்குடிவாழ் படைத்த லைவ ரமுதளிக்கும் பரஞ்சோதியார்மெய்ச், செல்வமிகு சிறுத் தொண்டர் காழிநாடன் றிருவருள்சேர்ந் தவர்வளருஞ் சீராளன் றன்னை, நல்குதிரு வெண்காட்டு நங்கை சமைத்திடப்பின் னன்ம திச்சந் தனத்தாதி தலைக்கறியிட்டுதவப், புல்கவரும் வயிரவர்தா மகிழ்ந்துமகவருளுப் போற்றியவர் சிவனருளே பொருந்தினுரே.

சேரமான்பெருமாணுயனார்—ஆடி—சுவாதி.

காவலர்மகோதையார் கொடுங்கா ளூர்க்கோக் கழறியவை யறிந்த கோச்சிலம் போசைக்கருத்தார், நாவலர்கோ னண்பரடிச் சேரனென்றே நவின்றுவரும் வண்ணுனை நயந்தகோநற், பாவலர் கோப்பாணபத்திரனுல் வாய்ந்த பரமர்திரு முகம்வாங்கிப் பணிகோ வெற்பின், மேவியகோ வானைக்குக் குதிரைவைத்த வீரர்கோ வெனையாளுஞ் சேரர்கோவே.

---

Little strokes fell great oaks.

கணநாதநாயனர்—பங்குனி—திருவாதிரை.

கந்தமலி வயற்காழி மறையோ ரேத்துங் கணநாதர் திருத் தோணிக் கடவுளார்க்கு, நந்தவனம் பலவமைத்து மலருங் கொய்து நற்றமஞ் சொற்றும நயந்துசாத்தி வந்தவரைத் தொண்டாக்கிப் பணிகள்பூட்டி வாது செய்த வாரணத்தை மகிழ்ந்து வாழ்த்திப், புந்திமகிழ்ந் தானருளாற் கயிலைமேவிப் பொருவில்கணத்தவர் காவல் பொருந்தினரே.

கூற்றுவநாயனர்—ஆடி—திருவாதிரை.

குன்றாத புகழாளர் களந்தைவேந்தர் கூற்றுவனர் மாற்றலர் மண் கொண்டுசூடப், பொன்றாழ் முடிவேண்டப் புலியூர் வாழும் பூசுரர்கள் கொடாதகலப் புனிதனீந்த, மன்றாடுந் திருவடியே முடியாச்சூடி மாநிலங்காத் திறைவனுறை மாடக்கோயிற், சென்றாசையுடன்வணங்கிப் பணிகள்செய்து திருவருளா லமருலகஞ் சேர்ந்துளாரே.

பொய்யடிமையில்லாத புலவர்.

பொய்யறியாக் கபிலரொடு பரணராதிப புலவோர்பொற்பார் கலைகள் பொருந்தவோதிச், செய்யுளிடை வளராசு மதுரநல்ல சித்திரம்வித் தாரமெனத் தெரிக்குஞ்செம்மை, மெய்யுடைய தொடைகளெல்லா மன்றுளாடன் மேவியகோ னிருதாளில் விரவச்சாத்திக், கையுடையஞ் சலியினரா யருளான்மேலைக் கருதரிய வமருலகங் கைக்கொண்டாரே.

புகழ்ச்சோழநாயனர்—ஆடி—கிருத்திகை.

பொழின்மருவுங் கருவூர்வாழ் புகழார்சோழர் போதகம்போலென்னுயிரும் போக்குமென்றே, யழலவிர்வாள் கொடுத்தபிரானதிகைமான்மே லடர்ந்தபெரும் படையேவ வவர்கொண்டேய்ந்த, தழல்விழிகொ டலைகாண்பார் கண்டதோர்புன் சடைத்தலையை முடித்தலையாற் றாழ்ந்துவாங்கிக், கழல்பரவி யதுசிரத்தி னேந்தி வாய்ந்த கனன்மூழ்கி யிறைவனடி கைக்கொண்டாரே.

நரசிங்கமுனையரையநாயனர்—புரட்டாசி—சதயம்.

நாடுபுகழ் முனைப்பாடி நாடுமேய நரசிங்க முனையர்புவி நயந்துமன்று, ளாடுமெவ ராதிரைநா ளடியார்க்கம்பொ னமுதளிப்பாரொளி வெண்ணீ றணிந்து தூர்த்த, வேடமுடை யவர்க்கிரட்டிச் செம்பொனீந்து விடுத்தழகா ராலயங்கள் விளங்கச்செய்து, தோடலர் தாருடையபிரா னருளையாளத் தோன்றினு ரெனையருளி னூன்றி

Say no ill of the year till it be past.

### பத்தராயனார்—ஆவணி—ஆயிலியம்.

அலையாருங் கடனாகை நகருள்வாழு மதிபத்தர் பாதவர்களதி பர்வேலை, வலைவாரி வருமீனிற் றலைமீனீசன் வார்கழற்கே யென்று விடு மரபார்பன்னாட், டலையான தொருமீனே சாரநாளுந் தந்தொழி லால் விடுத்துமிடி சாரச்செம்பொ, னிலையாரு மணிநயந்த மீனொன் றெய்த நீத்தருளா லிறைவனடி நேர்ந்துளாரே.

### கலிக்கம்பநாயனார்—தை—ரேவதி.

கடவுளருட் கண்ணார்கள் பயிலுந்தொல்லைக் கடந்தைநகர் வணிகர்கலிக் கம்பரன்பர்க், கடிமையுற வமுதளிப்பா ரடியாரீங்கி யருளுருவா யன்பருட னணையவேத்தி, யிடையிலவ ரடியிணையும் விளக்காநிற்ப விகழ்மனைவி கரகமலி யிரண்டுகையும், படியில்விழ வெறிந்தவள்செய் பணியுந்தாமே பரிந்துபுரிந் தரனருளே பற்றி னாரே.

### கலியநாயனார்—ஆடி—கேட்டை.

தடமதில்சூ ழொற்றியூர் நகருள்வாழுஞ் சக்கரப்பா டியர்குல மெய்த் தவமாயுள்ளார், படர்புகழார் கலியனார் நலியுங் கூற்றைப் பாய்ந்தவர்க்கு விளக்கெரிக்கும் பரிவான்மற்றோ, ருடலிலராய்ச் செக்குழல்வார்க் கதுவுநேரா துயர்மனைவி யைக்கொள்வா ருளரு மின்றி, மிடறுதிர மகனிறைய வரியநாதன் வியற்கைகொடு பிடிப் பவருண் மேவினாரே.

### சத்திநாயனார்—அற்பிசி—பூசம்.

விரிதருகா விரிநாட்டு வரிஞ்சியூர்வாழ் வேளாளர் சத்தியார் விமலர்பாதத், தூரியவர்க ளடிபரவு மொருமையார்நா வோவாமே யைந்தெழுத்து முரைக்குநீரா, ரிருளின்மிட றுடையபிரா னடியார் தம்மை யிகழ்வார்நாத் தண்டாயத் திடுக்கிவாங்கி, யரியுமது திருத் தொழிலா வுடையார்மன் றுளாடியசேவடிநீ ழலடைந்துளாரே.

### ஐயடிகள்காடவர்கோனாயனார்—அற்பிசி—மூலம்.

வையகிகழ் பல்லவர்தங் குலத்துவந்த மாமணிமா நிலமுழுது மகிழ்ந்துகாக்கு, மையடிகள் காடவர்கோ னருளானூல்க ளறிந்தரசு புரிந்திடுத லமையுமென்றே, பொய்யனைய வுடல்வாழ்வு கழியு மாறு பொருந்தியிடும் புகழ்வெண்பாப் புலியூர்மேவுஞ், செய்ய திரு வடிமுதலாப் பதிகடோறுஞ் செப்பினாரென் வினைகடப்பி னாரே.

### கணம்புல்லநாயனார்—கார்த்திகை—கிருத்திகை.

இலகுவட வெள்ளாற்றுத் தென்பால்வாழு மிருக்குவே ளூரதிப ரெழிலார்சென்னிக், கலைநிலவர் ரடிபரவுங் கணம்புல்லர் தில்லைக்கருகுபுலீச் சரத்தாற்குக் காதற்றீப, நிலைதரத்தா மிட மிடியா லொருநாட்புல்லா னீடுவிளக்கிடவதுவு நேராகத், தலை மயிரி னெரிகொளுவு மளவினுதன்றுவாத வாழ்வருளுந் தன்மை யாரே.

### காரிநாயனார்—மாசி—பூராடம்.

திருக்கடவூர் வருமுரவோர் காரியாராந் திகழ்தொண்டர் வண்டமிழ்நூ றிருந்தவோதி, விருப்பொடுதம் பெயராற்பா விளம் பிமும்மை வேந்தரையு முறைமுறையே மேவியங்க, ணுரைத்த வுரை நயமாக்கி யவர்பாலேய்ந்த வொண்பொருளா லாலயங்க ளோங்கச்செய்து, தரைக்குளருந் தவர்க்கேவ றகமுன்போற்றுந் தன்மையா லருள்சேர்ந்த நன்மையாரே.

### நின்றசீர்நெடுமாறநாயனார்—ஐப்பசி—பரணி.

கன்னன்மலி நெல்வேலிக் கவினூர்மாறர் கவுரியர்கோ னமண ருறு கலக்கமெல்லாம், பொன்னெயில்சூழ் சிரபுரக்கோ னணை யமாற்றிப் புனிதமிகு நீறணிந்து போற்றிசெய்து, மன்னுபுகழ் மங்கையருக் கரசியாரா மலர்மாது மணிமார்ப மகிழ்ந்துமாற்றார், வெந்நிடுதல் கண்டரசு புரிந்துகாழி வேந்தரருள் சேர்ந்தபெரு விறலினோரே.

### வாயிலார்நாயனார்—மார்கழி—ரேவதி.

ஞாயிலார் மதிற்றொண்டை நாட்டுமேன்மை நண்ணுமயி லாபுரியின் வேளாண்டொன்மை, வாயிலார் மலைவில்லா னடியே போற்றி மறவாமை தலைநின்ற மனமேசெம்பொற், கோயிலா வுயர்ஞானம் விளக்காநீராக் குலவியவா னந்தமன்பே யமுதாக் கொண்டு, தாயிலா னிருசரண நிகழவேத்துந் தன்மையா ரருள் சேர்ந்த நன்மையாரே.

### முனையடுவார்நாயனார்—பங்குனி—பூசம்.

பொன்னிவளந் தருநாட்டுப் புகழுநீடூர்ப் பொருவிறிரு மலி வேளாண் டொன்மைமிக்கார், முன்னியவர் முனையடுவா ரிகலார் போரின் முரணழிவார் தமக்காக மொழிந்தகூலி, மண்ணுநிதி கொண்டுசெயங் கொடுத்துவந்த வளர்பொருளா லிறைவனடி வழு வாவன்பர்க், கன்னமவர் நசையின்மிக மிசையநல்கு மன்பர்துன்ப மவையாவு மகன்றுளாரே.

### கழற்சிங்கநாயனார்—வைகாசி—பரணி.

காடவர்தங் குலமுவந்த கழலார்சிங்கர் காதன்மிகு தேவியுடன் காவலாரூ, ராடவல' பெருமானைப் பணிவாரங்கோ ரகன்றமலர் தனைமோந்த வரிவைமூக்கைச், சேடுடைய செருத்துணையா ரரியக்கேட்டுத் திறலரசர்' மலரெடுத்த செங்கையென்றே, சூடகமுன் கைதடிந்து ஞாலங்காத்த தூய்மையா ரருள்சேர்ந்த வாய்மையாரே.

### இடங்கழி நாயனார்—அற்பிசி—கிருத்திகை.

சோநாட்டுக் கொடும்பாளூ ரிருக்கும்வேளிர் குலத்தலைவரிடங்கழியார் கொங்கிற்செம்பொ, னுனேற்றூர் மன்றின்முகடம்பொன் மேய்ந்த வாதித்தன் மரபோர்நெற் கவர்ந்தோரன்பர், போநாப்ப ணிருளின்கட் காவலாளர் புரவலர்முன் கொணரவவர் புகலக்கேட்டு, மானேற்று ரடியாரே கொள்கவென்று வழங்கியரசாண்டருளின் மன்னினாரே.

### செருத்துணை நாயனார்—ஆவணி—பூசம்.

இரைத்தணையார் புனற்பொன்னி மருக்னன்னாட் டெழிலாருந் தஞ்சைநக ருழவரேத்துஞ், செருக்துணையார் திருவாரூர் சேர்ந்துவாழ்வார் செல்வமிகும் பல்லவர்கோன் றேவிவீழ்ந்த, மருத்துணையார் மலரெடுத்து மோப்பக்கண்டு வளமலிபூங் கத்தியா லவண்மூக்கீர்ந்த, கருத்துணையார் விறற்றிருத்தொண் டினையேசெய்து கருதலரு மமருலகங் கைக்கொண்டாரே.

### புகழ்த்துணை நாயனார்—ஆவணி—ஆயிலியம்.

புண்ணியர்கள் புகழழகார் திருப்புத்தூர்வாழ் புகழ்த்துணையா ரகத்தடிமைப் புனிதர்சின்னாண், மண்ணிகழ மழைபொழியா வெற்காலத்தால் வருந்துடல நடுங்கிடவு மணிநீரேந்தி, யண்ணன்முடி பொழிகலச முடிமேல்வீழ வயர்ந்தொருநாட் புலம்பவர னருளாலீந்த, நண்ணலரு மொருகாசுப் படியால் வாழ்ந்து நலமலிசீரமருலக நண்ணினாரே.

### கோட்புலி நாயனார்—ஆடி—கேட்டை.

குலவுபுகழ் நாட்டியத்தான் குடிவேளாளர் கோட்புலியார் குவித்துயர்த்த செந்நெற்கூடு, நிலவணிவார்க் கமைத்தானை நிறுத்தியொன்னார் நேர்மலைவார் திருவாணை நினையாதேநெற், சிலமிடியா லழித்தபடி யறிந்துவாளாற் சேர்ந்தபெருங் கிளைஞருடல் சிதறவீசி, யிலகுமொரு குழவியையு மெறிந்துநாத னெண்ணரிய கருணைநிழ லெய்தினாரே.

Honesty is a strong staff to lean upon.

### பத்தராய்ப்பணிவார்கள்.

தொண்டரடித் தொழல்பூசைத் தொழின்மகிழ்த லழகார் துளங்கியவர்ச்சனைபுரித றுருதி நியமங்கள், கொண்டபணி திருவடிக்கே கொடுத்தலீசன் குணமருவு மருங்கதைநயைக் குலவிக் கேட்டு, மண்டிவிழி தாளும்பன்மயிர் சிலும்பலுன்னன் மருவுதிருப் பணிகாட்டி வருபவாங்கி, யுண்டிகொளா தொழிதலென விவையோரெட்டு முடையரவர் பத்தரென வுரைத்துளாரே.

### பரமனையே பாடுவார்.

அருந்தமிழால் வடகலையா லருளாலொன்று லறிவுநெறி மருவுமரும் கவிகள்யாவுந், திருந்தியவா னவர்பணிய மன்றுளாடுந் தேவர்பிரான் கழலிணையே சேர வோதி, விருந்திடுநா வுடையபயன் மேவி னோர்தா மேலானோ மெனமகிழ்ந்து விழிநீர் சோரப், பரிந்தருளாற் பரமனையே பாடவல்ல பான்மையா ரெமையாளு மேன்மை யாரே.

### சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்.

பாரணவும் புலனைந்தக் கரணமொன்றும் படராமே நடுநாடி பயிலு நாதங், காரணமுங் கயன்முதலா மைவர் வாழ்வுங் கழியுநெறி வழிபடவுங் கருதி மேலைப், பூரணமெய்ப் பரஞ்சோதிப் பொலிவு நோக்கிப் புணர்ந்தணைந்த சிவாநுபவ போக மேவுஞ், சீரணவு மவரன்றோ வெம்மையாளுஞ் சித்தத்தைச் சிவன்பாலே வைத்து ளாரே.

### திருவாரூர்ப் பிறந்தார்.

பொங்கியமா தவமுடையார் வருண நான்கிற் பொருந்தினர்க ளெல்லாத புகழி லுள்ளார், சங்கையிலா வருந்தவமுன் புரிந்தாரிங்குச் சார்விலா ரிறைவனருள் சார்த லாலே, கங்கைவாழ் சடைமுடியா னருளை நீங்காக் கணநாத ரெனவாழுங் கருத்தர் கன்னிச், செங்கண்வரால் வளர்வாவி திகழு மாரூர்ச் சிறந்துளாரெமையாளப் பிறந்து ளாரே.

### முப்பொழுதுந் திருமேனி தீண்டுவார்.

செப்பலருந் தவமுடைய செம்மையாளர் சிறுகாலே மலர்வாவி திகழ மூழ்கி, யொப்பிறிரு நீறணிந்து நியதி யாற்றி யோவாமே யைந்தெழுத்து முரைத்து மேன்மைத், தப்பில்சிவா கமவிதியா லின்பா லன்பாந் தன்மையா னன்மையாந் தகையாரென்று, முப்பொழுதுந் திருமேனி தீண்ட வல்ல முறைமையார் பிறவி தெறுந் திறமை யாரே.

### முழுநீறுபூசிய முனிவர்.

கற்பமனு கற்பமுப கற்ப மென்றிக் கடனணைந்த திருநீறுங் கனற்க ணீறும், பொற்புடைய வரனுசா னங்கி யாறு பொல்லாத பூமியெதிர் புனைத லாகா, வற்புதமாந் திரிபுண்ட மதியின் பாதி யகிலாங்கந் தீபமிகு மழகார் வட்ட, முற்பொலியி வுடலணியு முறையாரன்றே முழுநீறு பூசவல்ல முனிவர்தாமே.

### அப்பாலுமடிச்சார்ந்தார்.

தாராரு மூவேந்தர் பயிலுந் தொல்லைத் தமிழ்நாட்டப் புறத் திறைவன் சரணஞ் சார்ந்த, சீராருந் தொண்டர்களு மண்டரேத்துந் திருத்தொண்டத் தொகையருளாற் செப்புங் காலத், தேராருந் தொடையிலுறா திப்பா லப்பா லெந்தைபிரா னடியடைந்த வியல்பி னோரு, மாராத காதலுடை யவர்களன்றே வப்பாலுமடிச்சார்ந்த வடியார்தாமே.

### பூசலார் நாயனார் - அற்பிசி—அனுஷம்.

பொருவருந்தண் டகநாட்டு நின்றவூர்வாழ் பூசுரர்கோப் பூசலார் புந்தியாலே, யிருநிதியந் தேடியா லயமுமாக்கி யெழுந்தருளப் பண்ணுவதா வெண்ணுங்காலை, யரனதனைக் காடவர்கோற் கருள மன்ன னந்நகர டணைந்தவ்வா றறிந்து தாழ, விரைவுமனக் கோயிலுற விருத்தி யங்கண் வேண்டுவகொண் டிறைஞ்சியருண் டோர்.

### மங்கையர்க்கரசியார்—சித்திரை—ரோகணி.

மங்கையர்க்குத் தனியரசி வளவர்குலக் கொழுந்து மன்னவர்சூழ் தென்னவர்க்கு மாதேவி யார்மண், சங்கைகெட வமண் சமயஞ் சாட வல்ல சைவசிகா மணிஞானத் தம்பிறற் கோத்த, பொங்குதிரு வருளுடைய போதவல்லி பொருவிநெடு மாறனார் புயமேல் வாழுஞ், செங்கலச முலையாட னருளாலின்பஞ் சேர்ந்தவரைப் புகழ்ந்தடியேன் வாழ்ந்த வாறே.

### நேச நாயனார்—பங்குனி—ரோகணி.

சாலியர்கோக் காம்பீலித் தலைவர் மேன்மை தாவாத புகழ்நேசர் தஞ்சொலென்றுங், கோலியவைந் தெழுத்தோதிச் சிந்தையுன்னிக் கொண்டபொரு ளன்பர்கொளக் கொடுத்து வாழ்வார், சீலமிகுந் திருத்தொண்டர்க் குடையுங் கீளுந் திருந்தியவெண் கோவணமுஞ் சேரவீந்து, பாலனைய வொளிநீற்றான் பாதமேத்திப் பரலோக முழுதாண்ட பான்மையாரே.

---

கோச்செங்கட்சோழ நாயனார்—மாசி—சதயம்.

வெண்ணாவ லிறைக்கொளிநூற் பந்தர் செய்த வியன்சிலம்பி யதுவழித்த வெள்ளா னைக்கை, யுண்ணுடிக் கடித்தவுட லொழி யச் சோழ னுயர்குலத்துச் சுபதேவன் கமலத்தோங்கும், பெண் ணாகி யவள்வயற்றில் வைகிச் செங்கட் பெருமானாய்த் தென்னவ ராய்ப் பெருங்கோயில் பலவுங், கண்ணார்வித் தியர்தில்லை மறைய வர்க்கு முறையுள் கனகமய மாக்கியருள் கைக்கொண் டாரே.

திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்—வைகாசி—மூலம்.

பிறங்கெருக்கத் தம்புலியூர் வாழும் பேரியாழ் பேணுதிரு நீலகண்டப் பெரும பாண ணார்சீர், நிறந்தருசெம் பொற்பலகை யாலவாயி னிமலன்பாற் பெற்றூரூர் நேர்ந்து சிவன்வாயி, றிறந் தருளும் வடதிசையே சேர்ந்து போற்றித் திருஞானசம்பந்தர் திருத்தாள் வாழ்த்தி, யறந்திகழுந் திருப்பதிகம் யாழி லேற்றி யாசிறிருப் பெருமணஞ்சேர்ந் தருள்பெற் றாரே.

சடைய நாயனார்—மார்கழி—திருவாதிரை.

சங்கையிலா வரன்மறையோர் நாவ லூர்வாழ் தவரதிபர் தம்பிரான் றோழராய, வெங்கள்பிரான் றவநெறிக்கோ ரிலக்கு வாய்த்த விசைஞானி யார்தனைய ரெண்ணார் சிங்க, மங்கையர்க டொழும்பரவை மணவாள நம்பி வந்துதிக்க மாதவங்கள் வருந் திச் செய்தார், வெங்கணரா விளங்குமிளம் பிறைசேர் சென்னி விடையிறை யருள்சேர்ந்த சடைய னாரே.

இசைஞானியார்—சித்திரை—சித்திரை.

நாவற்றிருப் பதிக்கோர்செல்வச் சைவ நாயகமாஞ் சடைய னார் நயந்த வின்பப், பூவைக் குலமடந்தை பொற்பார்கொம்பு புனிதமிகு நீறணிந்து போற்றிசெய்தே, யாவிற்றி கழ்தலைவன் வலியவாண்ட வாரூரரவதரிக்கவருந் தவங்கள் புரிந்தார், யாவர்க்கு மெட்டாத விசைந்தவின்ப விசைஞானி யெனஞான மெளிதா மன்றே.

அத்தரடி யவர்கூட்டத் தில்லை வாழு மந்தணர்பொய் யடிமை யிலாப் புலவ ராசில், பத்தர்முத லெழுவரோ டொன்பதின்ம ரேழொன்ப தின்மர் தனிப் பேரெண்ணொன் பதின்மராய, வித் தொகையிற் றெண்டாசீ ருரைத்தான் வைத்த வீரிரண்டா யிரத் திருநூற் றைம்பத்து மூன்று, முத்தமநல் விருத்தத்திற் பயனுஞ் செய்யுளுலகெழுபத் தைந்தெனநின் றுறைக்குமன்றே.

செல்வமிகு திருத்தொண்டக் தொகையி லுள்ளார் சிறந்த தனிப் பெயராகி வறுபதின் மேன்மூவர், மல்லன்மிகு கூட்டப்பே ரருள்சேர்ந்தார்கண் மாதவத்தோர் மும்மூன்று வகைபெற்றார்க, ளில்லறத்துந் துறவறத்து மிருந்து வாழ்ந்தே யியல்பாகச் சிவபத நான் கிசைந்தார்தம்மை, யல்லலறத் தெனையாண்ட சைவசிகா மணியா ரருட்புலியூ ருமாபதியா ரருள்செய்தாரே.

திருத்தொண்டர்புராணசார முற்றிற்று.

## தாயுமானசுவாமிகள்பாடல்.

✓ அங்கிங்கெனாதபடி யெங்கும்ப்ரகாசமா யானந்த பூர்த்தியாகி, யருளொடுநிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே யகிலாண்ட கோடியெல்லாந், தங்கும்படிக்கிச்சை வைத்துயிர்க்குயிராய்த் தழைத்ததெது மனவாக்கினிற், றட்டாமனின்றதெது சமயகோ டிகளெலாந் தந்தெய்வமென்றெய்வமென், றெங்குந்தொடர்ந்தெதிர் வழக்கிடவுநின்றதெது வெங்கணும் பெருவழக்காய், யாதினும் வல்லவொரு சித்தாகியின்பமா யென்றைக்கு முள்ளதெதுமேற், கங்குல்பகலறநின்ற வெல்லையுள தெதுவது கருத்திற் கிசைந்த ததுவே, கண்டனவெலாமோன வுருவெளியதாகவுங் கருதியஞ்சலி செய்குவாம்.

✓ வாசாகயிங்கரிய மன்றியொருசாதன மனோவாயு நிற்கும் வண்ணம், வாலாயமாகவும் பழகியறியேன்றுறவு மார்க்கத்தினிச் சைபோல, நேசானுசாரியாய் விவகரிப்பேனந்த நினைவையுமறந்த போது, நித்திரைகொள்வேனிதே நிட்டையென வெண்ணிலோ நெஞ்சந் துடித்தயருவேன், பேசாதவானந்த நிட்டைக்குமறிவி லாப் பேதைக்கும்வெகுதூரமே, பேய்க்குணமறிந்திந்த நாய்க்கு மொருவழிபெரிய பேரின்பநிட்டையருள்வாய், பாசாடவிக்குளே செல்லாதவர்க்கருள் பழுத்தொழுகுதேவதருவே, பார்க்குமிட மெங்குமொரு நீக்கமறநிறைகின்ற பரிபூரணானந்தமே.

✓ ஆழாழிகரையின்றி நிற்கவிலையோகொடிய வாலமமுதாகவிலை யோ, வக்கடலின்மீது வடவனனிற்கவில்லையோ வந்தரத்தகில கோடி, தாழாமனிலைநிற்க விலையோமேருவுந் தனுவாகவளைய விலையோ, சத்தமேகங்களும் வச்ரதாரணையிற் சஞ்சரித்திட வில்லையோ, வாழாதுவாழவே யிராமனடியாற்சிலையு மடமங்கை யாகவிலையோ, மணிமந்த்ரவாதியால் வேண்டுசித்திகளுலக மார்க்கத் தில்லைக்கவிலையோ, பாழானவென்மனங் குவியவொருதந்திரம் பண்ணுவதுனக்கருமையோ, பார்க்குமிடமெங்குமொரு நீக்கமற பரிபூரணானந்தமே.

Violent passions lead to great depressions.

ஆசைக்கொரளவில்லை யகிலமெல்லாங்கட்டி, யாளினுங்கடன்றிலே, யாணைசெலவேநினைவ ரளகேசனிகராக வம்பொன்மிகவைத்தபேரு, நேசித்துரசவாத வித்தைக்கலைந்திடுவர் நெடுநாளிருந்தபேரு, நிலையாகவேயினுங் காயகற்பந்தேடி நெஞ்சுபுண்ணாவரெல்லாம், யோசிக்கும்வேளையிற் பசிதீரவுண்பது முறங்குவதுமாகமுடியு, முள்ளதேபோதுமினிநானெனக்குளறியே யொன்றைவிட்டொன்றுபற்றிப், பாசக்கடற்குளே வீழாமன்மனதற்ற பரிசுத்த நிலையையருள்வாய், பார்க்குமிடமெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தமே.

கூடுதலுடன்பிரித லற்றுநிர்த்தொந்தமாய்க் குவிதலுடன் விரிதலற்றுக், குணமற்றுவரவினொடு போக்கற்றுநிலையான குறியற்றுமலமுமற்று, நாடுதலுமற்றுமேல் கீழ்நடுப்பக்கமென நண்ணுதலுமற்றுவிந்து, நாதமற்றைவகைப் பூதபேதமுமற்று ஞாதுருவின், ஞானமற்று, வாடுதலுமற்றுமே லொன்றற்றிரண்டற்று வாக்கற்றுமனமுமற்று, மன்னுப்ரிபூரணச் சுகவாரிதன்னிலே வாய்மடுத்துண்டவசமாய்த், தேடுதலுமற்றவிடநிலை யென்றமெளனியே சித்தாந்தமுத்திமுதலே, சிரகிரிவிளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே சின்மயானந்தகுருவே.

பண்ணேனுனக்கான பூசையொருவடிவிலே பாவித்திறைஞ்சவாங்கே, பார்க்கின்றமலருடு நீயேயிருத்தியப் பனிமலரெடுக்கமனமு, நண்ணேனலாமலிரு கைதான்குவிக்கவெனி னாணுமென்னுள நிற்றிநீ, நான்கும்பிடும்போ தரைக்கும்பிடாதலா லென்பூசைசெய்யன்முறையோ, விண்ணேவிணுதியாம் பூதமேநாதமே வேதமேவேதாந்தமே, மேதக்ககேள்வியே கேள்வியாம்பூமிக்குள் வித்தேயவித்தின்முளையே, கண்ணேகருத்தேயெ னெண்ணேயெழுத்தே கதிக்கானமோனவடிவே, கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு கருணாகரக்கடவுளே.

எண்ணரியபிறவிதனின் மானிடப்பிறவிதா னியாதினும்மரிதரிதுகா, ணிப்பிறவிதப்பினெ லெப்பிறவிவாய்க்குமோ வேதுவருமோவறிகிலேன், கண்ணகனிலத்துநா னுள்ளபொழுதேயருட்ககனவட்டத்தினின்று, காலூன்றிநின்றுபொழி யானந்தமுகிலொடு கலந்துமதி யவச முறவே, பண்ணுவதுநன்மையிந் நிலைபதியுமட்டுமே பதியாயிருந்ததேகப், பவுரிகுலையாமலே கெளரிகுண்டலியாயி பண்ணவித னருளினாலே, விண்ணிலவுமதியமுத மொழியாதுபொழியுமே வேண்டுவேனுமதடிமைநான், வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற வித்தகச்சித்தர்கணமே.

இன்னமுதுகனிபாகு கற்கண்டுசீனிதே னெனருசித்திடவலியவர், தின்பங்கொடுத்தநினை யென்னேர நின்னன்ப ரிடையறாதுருகிநாடி, யுன்னியகருத்தவிழ வுரைகுளறியுடலெங்கு மோய்ந்தயர்ந்தவசமாகி, யுணர்வரியபேரின்ப வனுபூதியுணர்விலே யுணர்வார்களுள்ளபடிகாண், கன்னிகையொருத்திசிற் றின்பம்வேட்பெண்ணினுங் கைக்கொள்வள்பக்குவத்திற், கணவனருள்பெறின்முனே சொன்னவாறென்னெனக் கருதிநகையாவளதுபோற், சொன்னபடி கேட்குமிப் பேதைக்குநின்கருணை தோற்றிற்சுகாரம்பமாஞ், சுத்த நிர்க்குணமான பரதெய்வமேபரஞ் சோதியேசுகவாரியே.

காகமானதுகோடி கூடினின்றாலுமொரு கல்லின்முன்னெதிர் நிற்குமோ, கர்மமானதுகோடி முன்னேசெய்தாலுநின்கருணைப்பிரவாகவருளைத், தாகமாய்நாடினரை வாதிக்கவல்லதோ தமியனேற் கருட்டாகமோ, சற்றுமிலையென்பதுவும் வெளியாச்சுவினையெலாஞ் சங்கேதமாய்க்கூடியே, தேகமானதைமிகவும் வாட்டுதே துன்பங்கள் சேராமலியோகமார்க்க, சித்தியோவரவில்லை சகசநிட்டைக்குமென்சிந்தைக்கும்வெகுதூரநா, னேகமாய்நின்னோடிருக்கு நாளெந்தநா ளிந்நாளின்முற்றுறாதோ, விகபரமிரண்டினிலு முயிரிக்குயிராகி யெங்குநிறைகின்றபொருளே.

தந்தைதாய்தமர்தார மகவென்னுமிவையெலாஞ் சந்தையிற்கூட்டமிதிலோ, சந்தேகமில்லைமணி மாடமாளிகைமேடை சதுரங்கசேனையுடனே, வந்ததோர்வாழ்வுமோ ரிந்த்ரசாலக்கோலம் வஞ்சனைபொறாமைலோபம், வைத்தமனமாங்கிருமி சேர்ந்தமலபாண்டமோ வாஞ்சனையிலாத கனவே, யெந்தநாளுஞ்சரி, யெனத்தேர்ந்துதேர்ந்துமே யிரவுபகலில்லாவிடத், தேகமாய் நின்றநின்னருள்வெள்ளமீதிலே யானென்ப தறவுமூழ்கிச், சிந்தைதான் றெளியாது சுழலும்வகையென்கொலோ தேடரிய சத்தாகியென், சித்தமிசைகுடிகொண்ட வறிவான தெய்வமே தேசோமயானந்தமே.

கந்துகமதக்கரியை வசமாநடத்தலாங் கரடிவெம்புலிவாயையுங், கட்டலாமொருசிங்க முதுகின்மேற்கொள்ளலாங் கட்செவியெடுத்தாட்டலாம், வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோகத்தையும் வேதித்து விற்றுண்ணலாம், வேறொருவர்காணாம லுலகத்துலாவலாம் விண்ணவரை யேவல்கொளலாஞ், சந்ததமுமிளமையோடிருக்கலா மற்றொரு சரீரத்தினும் புகுதலாஞ், சலமேனடக்கலாங் கனன்மேலிருக்கலாந் தன்னிகரிற் சித்திபெறலாஞ், சிந்தையையடக்கியே சும்மாவிருக்கின்ற திறமரிதுசத்தாகியென், சித்தமிசை குடிகொண்ட வறிவானதெய்வமே தேசோமயானந்தமே.

Despise school and remain a fool.

நிர்க்குணநிராமய நிரஞ்சன நிராலம்ப நிர்விஷயகைவல்யமா, நிஷ்களவசங்கசஞ் சலரகிதநிர்வசன நிர்த்தொந்த நித்தமுக்த, தற்பரவிஸ்வாதீதவ்யோமபரிபூரண சதாநந்தஞானபகவ, சம்புசிவசங்கரசாவேசவென்றுநான் சர்வகாலமுநினைவனே, வற்புதவகோசரநிவர்த்திபெறுமன்பருக் கானந்தபூர்த்தியான, வத்துவிதநிச்சய சொரூபசாக்ஷாத்கார வநுபூதியநுசூதமுங், கற்பனையறக்காண முக்கணுடனவடநிழற் கண்ணூடிருந்தகுருவே, கருதரிய சிற்சபையி லானந்தநிர்த்தமிடு கருணாகரக்கடவுளே.

அவனன்றியோரணுவு மசையாதெனும்பெரிய வாப்தர்மொழியொன்றுகண்டா, லறிவாவதேதுசில வறியாமையேதிவை யறிந்தார்களறியார்களார், மௌனமொடிருந்ததா ரென்போலுடம்பெலாம், வாயாய்ப்பிதற்றுமவரார், மனதெனவுமொருமாயையெங்கேயிருந்துவரும் வன்மையொடிரக்குமெங்கே, புவனம்படைப்பதென் கர்த்தவியமெவ்விடய பூதபேதங்களெவிடம், பொய்மெய்யிதமகிதமேலவருநன்மைதீமையொடு பொறைபொருமையுமெவ்விடம், மெவர்சிறியரெவர்பெரிய ரெவர்நறவரெவர்பகைஞர் யாதுமுனையன்றியுண்டோ, விகபரமிரண்டினிலு முயிரினுக்குயிராகி யெங்குநிறைகின்றபொருளே.

எத்தனைவிதங்கடான் கற்கினுங்கேட்கினுமென் னிதயமுமொடுங்கவில்லை, யானெனுமகந்தைதானெள்ளளவுமாறவில்லை யாதினும்மபிமானமென், சித்தமிசைகுடிகொண்ட தீமையோடிரக்கமென் சென்மத்துநானறிகிலேன், சீலமொடுதவவிரத மொருகனவிலாயினுந் தரிசனங்கண்டுமறியேன், பொய்த்தமொழியல்லான் மருந்துக்குமெய்ம்மொழி புகன்றிடேனை பிறர்கேட்கவே, போதிப்பதல்லாது சும்மாவிருந்தருள் பொருந்திடாப்பேதைநானே, யத்தனை குணக்கேடர் கண்டதாக்கேட்டதா வவனிமிசையுண்டோசொலா, யண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி யானந்தமானபரமே.

கல்லாதபேர்களே நல்லவர்க ணல்லவர்கள் கற்றுமறிவில்லாதவென், கன்மத்தையென்சொல்வேன் மதியையென் சொல்லுவேன் கைவல்யஞானநீதி, நல்லோருரைக்கிலோ கன்மமுக்கியமென்று நாட்டுவேன்கன்மமொருவ, னாட்டினாலோ பழைய ஞானமுக்கியமென்று நவிலுவேன்வடமொழியிலே, வல்லானொருத்தன்வரவுந்த்ராவிடத்திலே வந்ததாவிவகரிப்பேன், வல்லதமிழறிஞர்வரி னங்ஙனேவடமொழியின் வசனங்கள்சிறிது புகல்வேன், வெல்லாமலெவரையு மருட்டிவிடவகைவந்த வித்தையென்முத்திதருமோ, வேதாந்தசித்தாந்தசமரச நன்னிலைபெற்ற வித்தகச்சித்தர்கணமே.

---

பின்னனைய மெய்யுடலை நிலையென்று மையிலகு விழிகொண்டு மையல்பூட்டு, பின்னார்களின்பமே மெய்யென்றும்வளர்மாட மேல் வீடுசொர்க்கமென்றும், பொன்னையழியாதுவளர் பொருளென்று போற்றியிப் பொய்வேட மிருதிகாட்டிப், பொறையறிவுதுறவீத லாதிநற்குணமெலாம்போக்கிலேபோகவிட்டுத், தன்னிகரிலோபாதி பாழ்ம்பேய்பிடித்திடத் தரணிமிசைலோகாயதன் சமயநடைசாராமல் வேதாந்தசித்தாந்த சமரசசிவானுபூதி, மன்னவொரு சொற்கொண் டெனைத்தடுத்தாண்டன்பின் வாழ்வித்த ஞானகுருவே, மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன் மரபில்வருமௌனகுருவே.

ஆணிலேபெண்ணிலே யென்போலவொருபேதை யகிலத்தின் மிசையுள்ளதோ, வாடியகறங்குபோ லோடியுழல்சிந்தையை யடக்கியொருகணமேனும்யான், காணிலேன்றிருவருளை யல்லாது மௌனியாய்க் கண்மூடியோடுமூச்சைக் கட்டிக்கலாமதியை முட்டவே மூலவெங் கனலினையெழுப்பநினைவு, பூணிலேனிற்றைநாட்கற்றதுங் கேட்டதும் போக்கிலேபோகவிட்டேன் பொய்ப்புலக ஞுயினே ஞுயினுங்கடையான புன்மையேனின்னமின்னம், வீணிலே யலையாமன் மலையிலக்காகநீர் வெளிப்படத் தோற்றல்வேண்டும், வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற வித்தகச்சித்தர்கணமே.

கொல்லாமையெத்தனை குணக்கேட்டைநீக்குமக் குணமொன்றுமொன்றிலேன்பாற், கோரமெத்தனைபக்ஷ பாதமெத்தனைவன்குணங்களெத்தனைகொடியபாழ்ங், கல்லாமையெத்தனை யகநதையெத்தனைமனக் கள்ளமெத்தனையுள்ளசற், காரியஞ்சொல்லிடினுமறியாமையெத்தனை மதிமயக்கமெத்தனையிவை, செல்லாமையெத்தனை விர்தாகோஷ்டியென்னிலோ செல்லுமெத்தனைமுயற்சி, சிந்தையெத்தனைசலன மிந்த்ரஜாலம்போன்ற தேகத்தில்வாஞ்சைமுதலா, யல்லாமையெத்தனை யமைத்தனையுனக்கடிமை யானேனிவைக்குமாளோ, வண்டபகிரண்டமு மடங்கவொரு நிறைவாகி யானந்தமானபரமே.

கல்லேனுமையவொரு காலத்திலுருகுமென் கன்னெஞ்சமுருகவிலையே, கருணைக்கிணங்காத வன்மையையுநான்முகன் கற்பிக்கவொருகடவுளோ, வல்லான்வகுத்ததே வாய்க்காலெனும்பெருவழக்குக்கிழுக்குமுண்டோ, வானமாய்நின்றின்ப மழையாயிரங்கியெனை வாழ்விப்பதுன்பரங்காண், பொல்லாதசேயெனிற் றுய்நள்ளனீதமோ, புகலிடம்பிறிதுமுண்டோ, பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட்கயலுமாய்ப், புன்மையேனுவனந்தோ, சொல்லான்முழக்கிலோ சுகமில்லைமௌனியாய்ச் சுமமாவிருக்கவருளாய், சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ் சோதியேசுகவாரியே.

The oaths of the passionate have no meaning.

அரும்பொருளேமணியே யெனன்பேயன்பான வறிவேயென றிவிலூறு, மானந்தவெள்ளமே யென்றென்றுபாடினே னாடினே னாடிநாடி, விரும்பியேகூவினே னுலறினேனலறினேன் மெய்சிலிரத் திருகைகூப்பி, விண்மாரியெனவெனிருகண்மாரிபெய்யவே வேசற் றயர்ந்தேனியா, னிரும்புநேர்வஞ்சக் கள்வனுனுமுனை பிடை விட்டுநின்றதுண்டோ, வென்றுநீயன்றநா னுன்னடிமையல்லவோ யாதேனுமறியாவெறுந், துரும்பனேனென்னினுங் கைவிடுதனீதி யோ தொண்டரொடுகூட்டுகண்டாய், சுத்தநிர்க்குணமான பரதெய் வமேபரஞ் சோதியேசுகவாரியே.

வேதாவையிவ்வணம் விதித்ததேதென்னினுன் விளைப்பகுதி யென்பனந்த, வினைபேசவறியாது நிற்கவிவைமனதால் விளைந்த தான்மனதைநாடிற், போதமேநிற்கும்ப் போதத்தைநாடிலோ போதமுநின்னருள்விளக்கம், பொய்யென்றுதெய்வமறை யாவுமேநீ யென்று போக்குவரவறநிகழ்த்து, மாதாரவாதேய முழுதுநீயாதலா லகிலமீதென்னையாட்டி, யாடல்கண்டவனுநீ யாடுகின்றவனுநீ யருளுநீமௌனஞான, காதாவுநீபெற்ற காய்தந்தைதாமுநீதமருநீ யாவுநீகாண், சர்வபரிபூரண வகண்டதத்துவமான சச்சிதானந்த சிவமே.

ஆராரெனக்கென்ன போதித்துமென்னவென் னறிவினைமபக்க வசமோ, வண்டகோடிகளெலாங் கருப்பவறைபோலவு மடுக்கடுக் காவமைத்துப், பேராமணின்றபர வெளியிலேமனவெளி பிறங்கு வதலா தோன்றினும், பின்னமுறமருவாது நன்னயத்தாலினிப் பேரின்பமுத்திநிலையுந், தாராதுதள்ளவும் போகாதுனலது தள்ளி னும்போகேனியான், மடையேது மில்லையாண் டவனடிமை யென் னுமிரு தன்மையிலுமென்வழக்குத், தீராதுவிடுவதில்லை நடுவான கடவுளே தேடரியசத்தாகியென் சித்தமிசைகுடிகொண்ட வறி வானதெய்வமே தேசோமயானந்தமே.

ஆசையெனும் பெருங்காற்றூ டிலவம்பஞ் செனவுமன தலை யுங்கால, மோசம்வரு மிதனாலே கற்றதுங்கேட்டதுந்தூர்ந்து முத் திக்கான, நேசமுநல் வாசமும்போய்ப் புலனாயிற் கொடுமைபற்றி நிற்பரந்தோ, தேகபழுக் கருள்பழுந்த பராபரமே நிராசையின் றேற் றெய்வ முண்டோ.

காலமொடுதேசவர்த்தமானமாகி கலந்துநின்றநிலைவாழி கருணைவாழி, மாலறவுஞ்சைவமுதன்மதங்களாகி மதாதீதமான வருண்மரபுவாழி, சாலமிகுமௌனியேனிவ்வழக்குப்பேசத் தயவு வைத்துவளர்த்த வருட்டன்மைவாழி, யாலடியிற் பரமகுருவாழி வாழி யகண்டிதாகாரவருளடியார்வாழி.

Never spend your money before you have it.

சீராருந்தெய்வத் திருவருளாம்பூமிமுதற்
பாராதியாண்ட பதியேபராபரமே.

பார்த்தவிடமெல்லாம் பரவெளியாய்த்தோன்றவொரு
வார்த்தைசொல்லவந்த மனுவேபராபரமே.

ஓடுமிருநிதியு மொன்றாகக்கண்டவர்க
ளூடும்பொருளான நட்பேபராபரமே.

முத்தாந்தவீதி முளரிதொழுமன்பருக்கே
சித்தாந்தவீதிவருந் தேவேபராபரமே.

என்புருகிநெஞ்ச மிளகிக்கரைந்துகரைந்
தன்புருவாய்நிற்க வலந்தேன்பராபரமே.

பாராயோவென்னைமுகம் பார்த்தொருகாலென்கவலை
தீராயோவாய்திறந்து செப்பாய்பராபரமே.

ஓயாதோவென்கவலை யுள்ளேயானந்தவெள்ளம்
பாயாதோவையா பகராய்பராபரமே.

கன்றினுக்குச்சேதா கனிந்திரங்கல்போலவெனக்
கென்றிரங்குவாய்கருணை யெந்தாய்பராபரமே.

எண்ணாதவெண்ணமெலா மெண்ணியெண்ணியேழைநெஞ்சம்
புண்ணாகச்செய்ததினிப் போதும்பராபரமே.

உற்றுற்றுநாடி யுளமுருண்டபாவியைநீ
சற்றிரங்கியாளத் தகாதோபராபரமே.

கண்ணாவாரேனுமுனைக் கைகுவியாராயினந்த
மண்ணாளார்நட்பை மதியேன்பராபரமே.

கற்றவறிவாலுனைநான் கண்டவன்போற்கூத்தாடிற்
குற்றமென்றென்னெஞ்சே கொதிக்கும்பராபரமே.

ஆரிருந்தென்னூர்போயென் னாரமுதாநின்னருளின்
சீரிருந்தாலுய்வேன் சிவமேபராபரமே.

வஞ்சநமன்வாதனைக்கும் வன்பிறவிவேதனைக்கு
மஞ்சியுனையடைந்தே னையாபராபரமே.

மார்க்கண்டர்க்காக மறலிபட்டபாட்டையுன்னிப்
பார்க்கினன்பர்க்கென்ன பயங்காண்பராபரமே.

ஆடுவதும்பாடுவது மானந்தமாகநின்னைத்
தேடுவதுநின்னடியார் செய்கைபராபரமே.

பாலரோடுபேயர்பித்தர் பான்மையெனநிற்பதுவே
சீலமிகுஞானியர்தஞ் செய்கைபராபரமே.

Hope is a better companion than fear.

அன்பர்பணிசெய்யவெனை யாளாக்கிவிட்டுவிட்டா
லின்பநிலைதானேவந் தெய்தும்பராபரமே.

மூர்த்திதலந்தீர்த்த முறையாற்றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச்சற்குருவும் வாய்க்கும்பராபரமே.

தானந்தவந்தமருஞ் சந்ததமுஞ்செய்வர்சிவ
ஞானந்தனையணைய நல்லோர்பராபரமே.

சினமிறக்கக்கற்றாலுஞ் சித்தியெல்லாம்பெற்றாலும்
மனமிறக்கக்கல்லார்க்கு வாயேன்பராபரமே.

வேதாந்தஞ்சித்தாந்தம வேறென்னார்கண்களிக்கு
நாதாந்தமோன நலமேபராபரமே.

தேடுந்திரவியமுஞ் சேர்ந்தமணிப்பெட்டகமுங்
கூடவருந்துணையோ கூறாய்பராபரமே.

நாவழுத்துஞ்சொன்மலரோ நாணுதிக்கும்பொன்மலரோ
தேவையுனக்கின்னதென்று செப்பாய்பராபரமே.

கொலைகளவுகட்காமங் கோபம்விட்டாலன்றோ
மலையிலக்காநின்னருடான் வாய்க்கும்பராபரமே.

கல்லாதேனானாலுங் கற்றுணர்ந்தமெய்யடியார்
சொல்லாலேநின்னைத் தொடர்ந்தேன்பராபரமே.

கஙகைகலைவுசடைக் காட
புங்கவெண்கோட்டானைபதம் புந்திவைப்பதெந்நாளோ.

அஞ்சுமுகங்காட்டாம லாறுமுகங்காட்டவந்த
செஞ்சரணச்சேவடியைச் சிந்தைவைப்பதெந்நாளோ.

தந்தையிருதாடுணித்துத் தம்பிரான்றாள்சேர்ந்த
வெந்தையிருதாளிணைக்கே யின்புறுவதெந்நாளோ.

பொய்கண்டார்காணாப் புனிதமெனுமத்துவித
மெய்கண்டநாதனருண் மேவுநாளெந்நாளோ.

வெம்பந்தந்தீர்த்துலகாள் வேந்தன்றிருஞான
சம்பந்தனையருளாற் சாருநாளெந்நாளோ,

ஏரின்சிவ்போத மிங்கிவர்க்கேயென்னவுழ
வாரங்கொள்செங்கையர்தாள் வாரம்வைப்பதெந்நாளோ.

பித்தரிறையென்றறிந்து பேதைபாற்றூதணுப்பு
வித்ததமிழ்ச்சமர்த்தர் மெய்புகழ்வதெந்நாளோ.

போதவூர்நாடறியப் புத்தர்தமைவாதில்வென்ற
வாதவூரையனன்பை வாஞ்சிப்பதெந்நாளோ.

Solitude is the Nurse of wisdom.

ஓட்டுடன்பற்றின்றி புலகைத் துறந்தசெல்வப்
பட்டினத்தார்பத்ரகிரி பண்புணர்வதெந்நாளோ.

சக்கரவர்த்தி தவராசயோகியெனு
மிக்கதிருமூலனருண் மேவுநாளெந்நாளோ.

கந்தரனுபூதிபெற்றுக் கந்தரனுபூதிசொன்ன
வெந்தையருணகிரி யிருக்குநாளெந்நாளோ.

கற்கண்டாலோடுகின்ற காக்கைபோற்பொய்ம்மாயச்
சொற்கண்டாலோடுமன்பர் தோய்வறிவதெந்நாளோ.

எவ்வுயிருந்தன்னுயிர்போ லெண்ணுந்தபோதனர்கள்
செவ்வறிவைநாடிமிகச் சிந்தைவைப்பதெந்நாளோ.

அஞ்செழுத்தினுண்மை யதுவானவப்பொருளை
நெஞ்சழுத்தியொன்றாகி நிற்குநாளெந்நாளோ,

---

திருவருட்பிரகாச வள்ளலாம் பெருந்தகை

## இராமலிங்க சுவாமிகள் பாடல்.

அற்புதக் கணபதி யமல போற்றியே
தற்பர சண்முக சாமி போற்றியே
சிற்பர சிவமகா தேவ போற்றியே
பொற்பமர் கௌரியிற் போற்றி போற்றியே.

அருளுறுங் கயமுகத் தண்ணல் பாதமும்
பொருளுறு சண்முகப் புனிதன் றாள்களும்
தெருளுறு சிவபிரான் செம்பொற் கஞ்சமும்
மருளற நாடொறும் வணங்கி வாழ்த்துவாம்.

துதிபெறு கணபதி யிணையடி மலரும்
பதிதரு சரவண பவன்மல ரடியுங்
கதிதரு பரசிவ னியலணி கழலும்
மதியுற மன்னிடை மருவுது மிகவே.

ஆண்டவனீயாகி யுனக்கடியனுநானாகி லருளுடையா யின்றிரவி லருளிறையாய்வந்து, நீண்டவனேமுதலியருந் தீண்டரிதாம் பொருளின்னிலைகாட்டியடிமுடியி னெறிமுழுதுங்காட்டி, வீண்டவனேகாலையினீ விழித்தவுடனெழுந்து விதிமுடித்துப் புரிதியிது விளங்குமெனப்புகல்வாய், தாண்டவனே யருட்பொதுவிற் றனிமுதலேகருணைத்தடங்கலே நெடுந்தகையேசங்கரனே சிவனே.

---

திருநெறிமெய்த் தமிழ்மறையாந் திருக்கடைக்காப்பதனாற் றிருவுளங்காட்டியநாளிற் றெரிந்திலனிச்சிறியேன், பெருநெறியென்னுளத்திருந்து காட்டியநாளறிந்தேன் பிழைபடாத் தெய்வமறையிதுவெனப்பின்புணர்ந்தே, னொருநெறியிலெனது கரத்துவந்தளித்தநாளி லுணராத வுளவையெலா மொருங்குணர்ந்து தெளிந்தேன், றெருணெறிதந்தருளுமறைச் சிலம்பணிந்தபதத்தாள் சிவகாமவல்லிமகிழ் திருநடத்தெள்ளமுதே.

விண்படைத்த புகழ்த்தில்லையம்பலத்தானெவர்க்கும் மேலானானன்பருளமேவுநடராஜன், பண்படைந்த வென்னையறியாவிளம்பருவந்தனிலே பரிந்துவந்துமாலையிட்டான் பார்த்தறியான்மீட்டும், பெண்படைத்தபெண்களெலா மவமதித்தேவலது பேசுகின்றார்கூசுகின்றேன் பிச்சியெனலானேன், கண்படைத்துங் குழியில்விழக் கணக்குமுண்டோவவன்றன் கணக்கறிந்தும் விடுவேனோகண்டா யென்றோழி.

துப்பாடுதிருமேனிச்சோதிமணிச் சுடரே துரியவெளிக்குள்ளிருந்தசுத்த சிவவெளியே, யப்பாடுசடைமுடியெம் மாநந்தமலையே யருட்கடலேகுருவேயென் னாண்டவனேயரசே, யிப்பாடுபடவெனக்குமுடியாது துரையே யிரங்கியருள்செயல்வேண்டுமிது தருணங்கண்டாய், தப்பாடுவேனெனினு மென்னைவிடத் துணியேற் றனிமன்றுணடம் புரியுந்தாண்மலரெந்தாயே.

அருள்விளக்கே யருட்சுடரே யருட்சோதிச் சிவமேயருளமுதே யருணிறைவேயருள்வடிவப்பொருளே, யிருள்கடிந்தென்னுளமுழுதுமிடங்கொண்டபதியே யென்னறிவேயென்னுயிரே யெனக்கினியவுறவே, மருள்கடிந்தமாமணியே மாற்றறியாப்பொன்னே மன்றில்நடம்புரிகின்ற மணவாளா வெனக்கே, தெருளளித்ததிருவாளாஞானவுருவாளா தெய்வநடத்தரசேநான் செய்மொழியேற்றருளே.

கோடையிலேயிளைப்பாற்றிக்கொள்ளும் வகைகிடைத்தகுளிர் தருவே தருநிழலே நிழல்கனிந்தகனியே, ஓடையிலேயூறுகின்ற தீஞ்சுவைத்தண்ணீரே யுகந்ததண்ணீரிடைமலர்ந்த சுகந்தமணமலரே, மேடையிலே வீசுகின்றமெல்லியபூங்காற்றே மென்காற்றில்விளைசுகமேசுகத்தி லுறும்பயனே, யாடையிலேயெனைமணந்த மணவாளா பொதுவிலாடுகின்றவரசே யென்னலங்கலணிந்தருளே.

உண்ணவுண்ணத் தெவிட்டாதே தித்தித்தென்னுடம்போ டுயிருணர்வுங்கலந் துகலந்துள்ளகத்தும்புறத்துந், தண்ணியவண்ணம் பரவப்பொங்கிநிறைந்தாங்கே• ததும்பியென்றன் மயமெல்லாந்தன் மயமேயாக்கி, யெண்ணியவென்னெண்ணமெலா மெய்த

வொளி வழங்கியிலங்குகின்ற பேரருளாமின்னமுதத்திரளே, புண்ணியமே யென்பெரியபொருளேயென்னரசே புன்மொழியென்றிகழாதே புனைந்துமகிழ்ந்தருளே.

தனித்தனிமுக்கனி பிழிந்துவடித்தொன்றாகக்கூட்டிச் சர்க்கரையுங் கற்கண்டின்பொடியுமிகக் கலந்தே, தனித்தநறுந் தேன்பெய்துபசும்பாலுந் தேங்கின்றனிப்பாலுஞ் சேர்த்தொருதீம்பருப்பிடியும்விரவி, யினித்தநறு நெய்யளைந்தே யிளஞ்சூட்டிளிறக்கி யெடுத்தசுவைக்கட்டியினுமினிந் திடுந்தெள்ளமுதே. யநித்தமறத் திருப்பொதுவில் விளங்கு நடத்தரசே யடிமலர்க்கென்சொல்லணியாமலங்கலணிந்தருளே.

பார்த்தாலும் நினைத்தாலும் படித்தாலும்படிக்கப் பக்கநின்று கேட்டாலும் பரிந்துளுணர்ந்தாலும், ஈர்த்தாலும் பிடித்தாலுங்கட்டியணைத்தாலுமித்தனைக்குந் தித்திக்குமினித்த சுவைக்கரும்பே, வேர்த்தாவியயங்காது கனிந்தநறுங்கனியே மெய்மையறிவானந்தம் விளக்குமருளமுதே, தீர்த்தாவென்றன்ப ரெலாந்தொழப்பொதுவில் நடிக்குந்தெய்வநடத்தரசேயென் சிறுமொழியேற்றருளே.

கல்லார்க்குங்கற்றவர்க்குங் களிப்பருளுங்களிப்பே காணார்க்குங்கண்டவர்க்குங் கண்ணளிக்குங்கண்ணே, வல்லார்க்குமாட்டார்க்கும் வரமளிக்கும்வரமே மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்குமதியே, நல்லோர்க்கும்பொல்லார்க்கும் நடுநின்றநடுவே நரர்களுக்குஞ்சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் நலமே, யெல்லார்க்கும் பொதுவில் நடமிடுகின்றசிவமே யென்னரசேயான்புகலுமிசையுமணிந்தருளே.

கையாததீங்கனியே கயக்காதவமுதே கரையாதகற்கண்டே புரையாதகரும்பே, பொய்யாதபெருவாழ்வே புகையாதகனலே போகாத்புனலே யுள்வேகாதகாலே, கொய்யாதநறுமலரே கோவாதமணியே குளியாதபெருமுத்தே யொளியாத வெளியே, செய்யாதபேருதவி செய்தபெருந்தகையே தெய்வநடத்தரசேயென்சிறுமொழியேற்றருளே.

குணமறியேன் செய்தபெருங் குற்றமெலாங்குணமாக கொண்டருளியென்னுடைய குறிப்பெல்லாமுடித்து, மணமுறுபேரருளின்பவமுதமெனக்களித்து மணிமுடியுஞ் சூட்டியெனைவாழ்கவெனவாழ்த்தித், தணவிலாதென்னுளத்தே தான்கலந்துநானுந் தானுமொருவடிவாகித் தழைத்தோங்கப்புரிந்தே, அணவுறுபேரருட்ஜோதியரசு கொடுத்தருளி யாடுகின்றவரசேயென் னலங்கலணி[illegible]ளே.

A spark may raise an awful blaze.

ஆறுமுகப்பெருங்கருணைக் கடலேதெய்வ யானைமகிழ்மணிக் குன்றேயரசேமுக்கட், பேறுமுகப் பெருஞ்சுடர்க்குட் சுடரே செவ்வேல்பிடித்தருளும் பெருந்தகையே பிரமஞானட, வீறுமுகப் பெருங்குணத்தோ ரிதயத்தோங்கும் விளக்கமேயானந்தவெள்ளமே முன், றேறிமுகப்பெரியவருட் குருவாயென்னைச் சிறுகாலையாட் கொண்ட தேவதேவே.

ஒருமையுடனினதுதிருமலரடி நினைக்கின்ற வுத்தமர்தமுறவு வேண்டும், உள்ளொன்றுவைத்துப் புறம்பொன்றுபேசுவா ருறவு கலவாமைவேண்டும், பெறுமைபெறுநினதுபுகழ் பேசவேண்டும் பொய்மைபேசாதிருக்கவேண்டும், பெருநெறிபிடித்தொழுகவேண்டு மதமானபேய் பிடியாதிருக்கவேண்டும், மருவுபெண்ணாசையை மறக்கவேவேண்டுமுனை மறவாதிருக்கவேண்டும், மதிவேண்டு நின் கருணை நிதிவேண்டுநோயற்ற வாழ்வினான் வாழவேண்டுந், தருமமிகு சென்னையிற் கந்தகோட்டத்துள்வளர் தலமோங்கு கந்தவேளே, தண்முகத்துய்யமணி யுண்முகச்சைவமணி சண்முகத்தெய்வ மணியே.

எந்தைநினைவாழ்த்தாத பேயர்வாய்கூழுக்கு மேக்கற்றிருக் கும்வெறுவாய், எங்களபெருமானுனை வணங்காதமுடார்தலை யிகழ் விறகெடுக்குந்தலை, கநதமிகுநின்மேனிகாணுதநுயவர்கண் கலநீர் சொரிந்தவமுகண், கடவுணின்புகழ்தனைக்கேளாதவிணர்செவிகைத் திழவுகேட்குஞ்செவி, பநதமறநினைமெணுப் பாவிகடநெஞ்சம் பகீ ரெனநடுங்கு நெஞ்சம், பரமநின்றிருமுன்னர்குவியாத வஞ்சர்கை பலியேற்கநீள்கொடுங்கை, சநதமிகுசென்னையிற்கந்தகோட்டத்துள் வளர் தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணி யுண்முகச் சைவமணி சண்முகத்தெயவமணியே.

ஐயநின்சீர்பேசு செல்வர்வாய்நல்லதௌ ளமுதுண்டுவந்த திருவாய், அப்பநின்றிருவடி வணங்கிஞோர் தலைமுடி யணிந்தோ ங்கிவாழுந்தலை, மெய்யநின்றிருமேனிகண்ட புண்ணியர்கண்கண் மிக்கவொளிமேவுகண்கள், வேலநின்புகழ்கேட்ட வித்தகர்திருச் செவி விழாச்சுபங்கேட்குஞ்செவி, துய்யநின்பதமெண்ணுமே லோர்கணெஞ்சமெய்ச் சுகரூபமானநெஞ்சம், தோன்றலுன்றிரு முன்குவித்தபெரியோர்கைகள் சுவர்ன்னமிடுகின்றகைகள், சைய முயர்சென்னையிற் கந்தகோட்டத்துள்வளர் தலமோங்குகந்தவே ளே, தண்முகத்துய்யமணி யுண்முகச்சைவமணி சண்முகத்தெய்வ மணியே.

Want of variety leads to satiety.

அருளாரமுதே சரணஞ்சரணம், அழகாவமலா சரணஞ்சரணம், பொருளாவெனையாள் புனிதா சரணம் பொன்னேமணியே சரணஞ்சரணம், மருளவாரக்கரியாய் சரணஞ்சரணம் மயில்வாகனனே சரணஞ்சரணங், கருணாலயனே சரணஞ்சரணங் கந்தா சரணஞ் சரணஞ் சரணம்.

பூவேமணமே சரணஞ்சரணம் பொருளேயருளே சரணஞ்சரணங், கோவேகுகனே சரணஞ்சரணங் குருவேதிருவே சரணஞ்சரணந், தேவேதெளிவே சரணஞ்சரணஞ் சிவசண்முகனே சரணஞ்சரணந், தாவேர்தருவே சரணஞ்சரணங் கந்தாசரணஞ் சரணஞ்சரணம்.

படமுடியா தினித்துயரம் படமுடியாதரசே பட்டதெல்லாம் போதுமிந்தப் பயந்தீர்த்திப்பொழுதென், னுடலுயிராதியவெல்லாம் நீயெடுத்துக்கொண்டுன் னுடலுயிராதியவெல்லா முவந்தெனக்கேயளிப்பாய், வடலூறுசிற்றம்பலத்தே வாழ்வாயென் கண்ணுண்மணியே யென்குருமணியே மாணிக்கமணியே, நடனசிகாமணியே யென்னவமணியே ஞானநன்மணியே பொன்மணியே நடராஜமணியே.

வாழையடிவாழையெனவந்ததிருக்கூட்ட மரபினில்யானொருவன்றோ வகையறியேனிந்த, வேழைபடும்பாடுனக்குத் திருவுளச்சம்மதமோ விதுதகுமோ விதுமுறையோ விதுதருமந்தானோ, மாழைமணிப்பொதுநடஞ்செய் வள்ளால்யானுனக்கு மகனலனோநீயெனக்கு வாய்த்ததந்தையலையோ, கோழையுலகுயிர்த்துயரமினிப் பொறுக்கமாட்டேன் கொடுத்தருணின் னருளொளியைக் கொடுத்தருளிப்பொழுதே.

கொலைபுரிவார்தவிர மற்றையெல்லாரு நினதுகுலத்தாரே நீயெனதுகுலத்து முதன்மகனே, மலைவறுவேசுத்தசிவ சமரசசன்மார்க்கம் வளர வளர்ந்திருக்க வெனவாழ்த்திய வென்குருவே, நிலைவிழைவார்தமைக்காக்கு நித்தியனேயெல்லா நிலையும்விளங்குறவருளில் நிறுத்தியசிற்குணனே, புலையறியாப்பெருந்தவர்கள் போற்றமணிப்பொதுவில் புனிதநடத்தரசேயென் புகலுமணிந்தருளே.

உயிர்க்கொலையும்புலைப்பொசிப்பு முடையவர்களெல்லா, முறைவினத்தாரல்லரவர் புறவினத்தாரவர்க்குப், பயிர்ப்புறுமோர் பசிதவிர்த்தல் மாத்திரமேபுரிக பரிந்துமற்றைப் பண்புரையேல் நண்புதவேலிங்கே, நயப்புறுசன்மார்க்கமவ ரடையளவுமிதுதான் நம்மாணையென்றெனக்கு நவின்றவருளிறையே, மயர்ப்பறுமெய்த்தவர்போற்றப் பொதுவில்நடம்புரியு மாநடத்தென்னரசேயென் மாலையணிந்தருளே.

## சிவநாமாவளி

அம்பலத்தரசேயருமருந்தே யானந்தத்தேனேயருள்விருந்தே
பொதுநடத்தரசேபுண்ணியனே புலவரெலாம்புகழ்கண்ணியனே
சிவசிவசிவசிவசின்மயதேஜா சிவசுந்தரகுஞ்சிதநடராஜா
மலைதருமகளேமடமயிலே மதிமுகவமுதேயிளங்குயிலே
ஆனந்தக்கொடியேயிளம்பிடியே யற்புதத்தேனேமலைமானே
படனவிவேகபரம்பரவேதா நடனசபேசசிதம்பரநாதா
அரிபிரமாதியர்தேடியநாதா அரகரசிவசிவஆடியபாதா
அருட்பிரகாசம்பருப்பிரகாசம் அகப்பிரகாசம்சிவப்பிரகாசம்
இக்கரைகடந்திடிலக்கரையே இருப்பதுசிதம்பரசர்க்கரையே
ஐயர்திருச்சபையாடகமே ஆடுதலானந்தநாடகமே
அம்பலவாசிவமாதேவா வம்பலவாவிங்குவாவாவா
நடராஜனெல்லார்க்குநல்லவனே நல்லவெலாஞ்செயவல்லவனே
சங்கரசிவசிவமாதேவா எங்களையாட்கொளவாவாவா
அரகரசிவசிவமாதேவா அருளமுதந்தரவாவாவா
நடனசிகாமணிநவமணியே நடனசிகாமணிசிவமணியே
நடராசவள்ளலைநாடுதலே நந்தொழிலாம்விளையாடுதலே
நடராசமாணிக்கமொன்றதுவே நண்ணுதலாணிப்பொன்மன்றதுவே
நடராசபலமதுநம்பலமே நடமாடுவதுதிருவம்பலமே.

| | | | |
|---|---|---|---|
| சிவசிவசங்கரசம்போ | ... | ... | ஓம் |
| தேவர்கட்கெல்லாந் தேவா | ... | . | ஓம் |
| மார்க்கசகாயமாய் நின்றாய் | ... | ... | ஓம் |
| மலரவன் சிரசைக்கொய்தாய் | ... | ... | ஓம் |
| சாக்கியன் கல்லடியுண்டாய் | ... | ... | ஓம் |
| சம்பந்தர்க்கமுதீந்தாய் | ... | ... | ஓம் |
| நீலனுக்கிளமை தந்தாய் | ... | ... | ஓம் |
| நீறுபடப்புர மெரித்தாய் | ... | ... | ஓம் |
| இயற்பகை மனைவியைக்கேட்டாய் | | ... | ஓம் |
| ஈசனெனும்பெயர் படைத்தாய் | | ... | ஓம் |
| சுந்தரன்சொல்லுக் கிசைந்தாய் | | ... | ஓம் |
| சோழனைப்போரில் வென்றாய் | ... | ... | ஓம் |
| நாவுக்கரசுசொல் நயந்தாய் | ... | ... | ஓம் |
| நான்மறையுருவாய் நின்றாய் | ... | ... | ஓம் |
| வாதவூரனிடர் தீர்த்தாய் | ... | ... | ஓம் |
| வாசகனெனும்பெயர் கொடுத்தாய் | | ... | ஓம் |

திருச்சிற்றம்பலம்.

---

A truth ascertained is a life pension gained.

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீநாமராமாயணம்.

## பாலகாண்டம்.

ஸுத்தப்ப்ரம்மபராத்பரராம
காலாத்மகபரமேஸ்வரராம
சேஷதல்பஸுகநித்ரிதராம
ப்ரஹ்மாத்யமரப்ப்ரார்த்திதராம
சண்டகிரணகுலமண்டநராம
ஸ்ரீமத்தஸரதநந்தநராம
கௌஸல்யாஸுகவர்தநராம
விஸ்வாமித்ரப்ரியதநராம
கோரதாடகாகாதகராம
மாரீசாதிநிபாதகராம
கௌஷிகமகஸம்ரக்ஷகராம
ஸ்ரீமதஹல்யோத்தாரகராம
கௌதமமுநிஸம்பூஜிதராம
ஸுரமுநிவரகணஸமஸ்துதராம
நாவிகதாவிதம்ருதபதராம
மிதிலாபுரஜநமோகதராம
விதேஹமாநஸரஞ்ஜகராம
த்ர்யம்பககார்முகபஞ்சகராம
ஸீதார்பிதவரமாலிகராம
க்ருதவைவாஹிககௌதுகராம
பார்கவதர்பவிநாஸகராம
ஸ்ரீமதயோத்யாநந்தகராம

## அயோத்யாகாண்டம்.

அகணிதகுணகணபூஷிதராம
அவநீகாமிநீகாமிதராம
ராகாசந்த்ரஸமாநநராம
பித்ருவாக்யஸ்ரிதகாநநராம
ப்ரியகுஹவிநிவேதிதபதராம
தத்க்ஷாளிதநிஜம்ருதுபதராம
பரத்வாஜத்ருகாநந்தனராம
சித்ரகூடாத்ரிநிகேதநராம
தசரதஸந்ததசிந்திதராம
கைகேயீஸுதப்ரார்திதராம
விரசிதநிஜபித்ருகாமகராம
பரதார்பிதநிஜபாதுகராம
தண்டகாவநஜநபாவநராம

## அரண்யாகாண்டம்.

துஷ்டவிராதவிநாஸநராம
ஸரபங்கஸுதீக்ஷ்ணார்சிதராம
அகஸ்த்யாநுக்ரஹவர்திதராம
க்ருத்ராதிபஸம்ஸேவிதராம
பஞ்சவடீதடஸுஸ்திதராம
ஸூர்பணகார்த்திவிதாயகராம
காதூஷணமுகஸாதகராம
ஸீதாப்ரியஹரிணாநுகராம
மாரீசார்த்திக்ருதாஸுகராம
விநஷ்டஸீதாந்வேஷகராம
க்ருத்ராதிபகதிதாயகராம
ஸபரீதத்தபலாஸநராம
கபந்தபாஹுச்சேதநராம

## கிஷ்கிந்தாகாண்டம்.

ஹநுமத்ஸேவிதநிஜபதராம
நதஸுக்ரீவாபீஷ்டதராம
கர்விதவாலிஸம்ஹாரகராம
வாநரதூதப்ரேஷகராம
ஹிதகரலக்ஷ்மணஸம்யுதராம.

## சுந்தரகாண்டம்.

கபிவரஸந்ததஸம்ஸ்ம்ருதராம
தத்கதிவிக்நத்வம்ஸகராம
ஸீதாப்ராணாதாரகராம
துஷ்டதஸாநநதூஷிதராம
ஸிஷ்டஹநுமத்பூஷிதராம
ஸீதோதிதகாகாவனராம
க்ருதசூடாமணிதர்ஸநராம
கபிவரவசநாஸ்வாஸிதராம

A wise man is a universal harmoniser.

### யுத்தகாண்டம்.

ராவணநிதநப்ரஸ்திதராம
வாநரஸைந்யஸமாவ்ருதராம
ஶோஷிதஸரிதீஸார்திதராம
விபீஷணாபயதாயகராம
பர்வதஸேதுநிபந்தகராம
கடகர்ணஶிரஸ்சேதகராம
ராக்ஷஸகோடிவிமர்தகராம
அஹிமஹிராவணமாரணராம
ஸம்ஹ்ருததஸமுகராவணராம
விதிபவமுகஸுரஸம்ஸ்துதராம
கஸ்திதஸரதவீக்ஷிதராம
ஸீதாதர்ஸநமோதிதராம
அபிஷிக்தவிபீஷணநுதராம
புஷ்பகயாநாரோஹணராம
பரத்வாஜாதிநிவேஷணராம
பரதப்ராணநவிதரணராம
ஸாகேதபுரீபூஷணராம
ஸகலஸ்வீயஸமாவ்ருதராம
ரத்நலஸத்பீடஸ்திதராம
பட்டாபிஷேகாலங்க்ருதராம
பார்திவகுலஸம்மாநிதராம
விபீஷணார்பிதரங்கராம
கீஸகுலாநுக்ரஹகராம
ஸகலஜீவஸம்ரக்ஷகராம
ஸமஸ்தலோகாதாரகராம
ராமராமஜயராஜாராம
ராமராமஜயஸீதாராம.

(By Special permission of Brahmasree Pandit Lakshmana Acharyar Avergal.)

---

### ஸ்ரீராமநாமத்திருப்பதிகம்.

காராயவண்ணமணிவண்ணகண்ணகனசங்குசக்ரதரநீள்
சீராயதூயமலர்வாயநேயசீராமராமனெனவே
தாராயவாழ்வுதருநெஞ்சுசூழ்சதாமோதராயநமவோம்
நாராயணாநபவாமனாயநமகேசவாயநமவே.

திருமகளெம்பெருமாட்டி மகிழும்வண்ணச்
செழுங்கனியேகொழும்பாகேதேனேதெய்வத்
தருமகனைக்காத்தருளக்கரத்தேவென்றித்
தனுவெடுத்தவொருமுதலேகருமப்பேறே
இருமையுமென்னுளத்தமர்ந்தராமநாமத்
தென்னரசேயென்னமுதேயென்றுமேநின்
மருமலர்ப்பொன்னடிவழுத்துஞ்சிறியேனந்தோ
மனந்தளர்ந்தேனறிந்துமருள்வழங்கிலாயே.

கலைக்கடலேகருணைநெடுங்கடலேகானங்
கடந்ததடங்கடலேயென்கருத்தேஞான
மலைக்கணெழுஞ்சுடரேவான்சுடரேயன்பர்
மனத்தொளிருஞ்சுயஞ்சுடரேயன்பர்
தலைக்கணுறுமகுடசிகாமணியேவாய்மைத்
தசரதன்றன்குலமணியேதமியேனுள்ள
நிலைக்கணுறுஞ்சீராமவள்ளலேயென்
னிலையறிந்தும்அருளவின்னுநினைந்திலாயே.

---

மண்ணாள நின்றவர் தம்வாழ்வு வேண்டேன்
மற்றவர்போற் பற்றடைந்து மாளவேண்டேன்
விண்ணாள நின்றவொரு மேன்மை வேண்டேன்
வித்தகநின் றிருவருளே வேண்டி நின்றேன்
புண்ணாள நின்றமன முடையேன் செய்த
பொய்யனைத்துந் திருவுளத்தே பொறுத்தா யன்றிக்
கண்ணாளா சுடர்க்கமலக் கண்ணா வென்னைக்
கைவிடிலென் செய்வேனே கடையனேனே.

தெவ்வினையா ரரக்கர்குலஞ் செறவெற்றிச
சிங்கமே யெங்கள் குலதெய்வமேயோ
வெவ்வினைதீர்த் தருள்கின் றராமநாம
வியன்சுடரே யிவ்வுலக விடயக்காட்டில
இவ்வினையே னகப்பட்டேன் புலனுங்கள்வர்க்
கிலக்கானேன் றுணையொன் றுமில்லேனந்தோ
செய்வினையொன் றறியேனிங் கென்னையெந்தாய்
திருவுளத்திற் சேர்த்திலையே றசெய்வதென்னே.

வான்வண்ணக் கருமுகிலே மழையே நீல
மணிவண்ணக் கொழுஞ்சுடரே மருந்தே வானத்
தேன்வண்ணச் செழுஞ்சுவையே ராமநாமத்
தெய்வமே நின்புகழைத் தெளிந்தேயோதா
ஊன்வண்ணப் புலைவாயா ரிடத்தே சென்றுங்
குழைக்கின்றேன் செய்வகையொன் றுணரேனந்தோ
கான்வண்ணக் குடும்பத்திற் கிலக்கா வென்னைக்
காட்டினையே யென்னே நின் கருணையீதோ.

பொன்னுடையார் வாயிலிற்போய் வீணே காலம்
போக்குகின்றே னிவ்வுலகப் புணர்ப்பை வேண்டி
என்னுடையாய் நின்னடியை மறந்தே னந்தோ
வென்செய்கே னென்செய்கே னேழையேனுன்
பின்னுடையேன் பிழையுடையே னலலா லுன்றன்
பேரருளு முடையேனோ பிறந்தேன் வாளா
உன்னுடைய திருவுளத்தென் னினைதியோ வென்
னுயிர்முதல்வா ஸ்ரீராமா வுணர்கிலேனே

அறம்பழுக்குந் தருவேயென் குருவேயென்ற
னாருயிர்க்கொரு துணையே யரசே பூவை
நிறம்பழுக்க வழகொழுகும் வடிவக் குன்றே
நெடுங்கடலுக் கணையளித்த நிலையே வெய்ய •

Devote your heart to God and hands to work.

மறம்பழுக்குமிலங்கையிராவணனைப்பண்டோர
வாளியினுற்பணிகொண்டமணியேவாய்மைத்
திறம்பழுக்குஞ்சிராமவள்ளலேநின்
றிருவருளேயன்றிமற்றோர்செயலிலேனே.

கல்லாயவன்மனத்தார்தம்பாற்சென்றே
கண்கலக்கங்கொள்கின்றேன்கவலைவாழ்வை
எல்லாமுள்ளிருந்தறிந்தாயன்றேசற்று
மிரங்கிலையெம்பெருமானேயென்னேயென்னே
பொல்லாதவெவ்வினையேனெனினுமென்னைப்
புண்ணியனேபுரப்பதருட்புகழ்ச்சியன்றோ
அல்லார்ந்ததுயர்க்கடனின்றெடுத்திடாயே
லாற்றேனுன்பழிநின்பாலாக்குவேனே.

மையானநெஞ்சகத்தோர்வாயில்சார்ந்தே
மனந்தளர்ந்தேன்வருந்துகின்றவருத்தமெல்லாம்
ஐயாவென்னுளத்தமர்ந்தாய்நீதான்சற்று
மறியாயோவறியாயேலறிவாரியாரே
பொய்யானதன்மையினேனெனினுமென்னைப்
புறம்விடுத்தலழகேயோபொருளாவெண்ணி
மெய்யாவென்றனையந்நாளாண்டாயிந்நாள்
வெறுத்தனையேலெங்கேயான்மேவுவேனே.

கூறுவதோர்குணமில்லாக்கொடிதாஞ்செல்வக்
குருட்டறிவோரிடைப்படுமென்குறைகளெல்லாம்
ஆறுவதோர்வழிகாணேனந்தோவந்தோ
வவலமெனுங்கருங்கடலிலழுந்துகின்றேன்
ஏறுவதோர்வகையறியேனெந்தாயெந்தா
யேற்றுகின்றோர்நின்னையன்றியில்லேனென்னைச்
சீறுவதோவிரங்குவதோயாதோவுன்றன்
றிருவுளத்தைத்தெரியேனேசிறியனேனே.

## நாலாயிரதிவ்யபிரபந்தம்.

திருவேங்கடம்.

உலகமுண்டபெருவாயா வுலப்பில்கீர்த்தியம்மானே
நிலவுஞ்சுடர்சூழொளிமூர்த்திநெடியாயடியேனாருயிரே
திலதமுலகுக்காய்நின்றதிருவேங்கடத்தெம்பெருமானே
குலதொலடியேனுன்பாதம்கூடுமாறுகூறாயே.

Pray, listen, obey and do.

திருவரங்கம்.

ஏழையேதலன்கீழ்மகனென்னா
இரங்கிமற்றவர்க்கின்னருள்சுரந்து
மாழைமான்மடநோக்கியுன்தோழி
யும்பியெம்பியென்றொழிந்திலையுகந்து
தோழன்நீயெனக்கிங்கொழியென்ற
சொற்கள்வந்தடியேன்மனத்திருந்திட
ஆழிவண்ண நின்னடியிணையடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே.

திருக்கச்சி.

உயர்வறவுயர்நலமுடையவன்யவனவன்
மயர்வறமதிநலமருளினன்யவனவன்
அயர்வறுமமரர்களதிபதியவனவன்
துயரறுசுடரடிதொழுதெழன்மனனே.

சுரவிசும்பெரிவளிநீர்நிலமிவைமிசை
வரனவில் திறல்வலியளிபொறையாய்நின்ற
பரனடிமேல்குருகூர்ச்சடகோபன்சொல்
நிரனிறையாயிரத்திவைபத்தும்வீடே.

அன்பேதகளியா யார்வமேநெய்யாக
இன்புருகுசிந்தையிடுதிரியா—நன்புருகி
ஞானச்சுடர்விளக்கேற்றினேன்நாரணற்கு
ஞானத்தமிழ்புரிந்த நான்.

திருநாராயணபுரம்.

ஒரு . பகமாயோடவுலகுடனுண்டவர்
கருநாய்கவர்ந்தகாலர்சிதைகியபானையர்
பெருநாடுகாணவிம்மையிலேபிச்சைதாங்கொள்வா
திருநாரணனைதா இகாலஞ்செறச்சிந்தித்துய்மினோ.

பொய்கையாழ்வார்.

வையம்தகளியா வார்கடனேநெய்யாக
வெய்யகதிரோன் விளக்காக—செய்ய
சுடராழியானடிக்கே சூட்டினேன்சொன்மாலை
இடராழிநீங்குகவேயென்று.

பூதத்தாழ்வார்.

ஞானத்தானன்குணர்ந்து நாரணன்றன்நாமங்கள்
தானத்தான்மற்றவன்பேர்சாற்றினால்—வானத்
தணியமரராக்குவிக்கு மஃதன்றே நங்கள்
பணியமரர்கோமான்பரிசு

Be deligent in your use of time.

பேயாழ்வார்.

நாமம்பலசொல்லி நாராயணாவென்று
நாமங்கையால்தொழும் நன்னெஞ்சே—வாமருவி
மண்ணுலகமுண்டுமிழ்ந்த வண்டறையும்தண்டுழாய்
கண்ணனையேகாண்க நங்கண்.

திருமழிசையாழ்வார்,

தேருங்கால் தேவனொருவனேயென்றுரைப்பார்
ஆருமறியாரவன்பெருமை—ஓரும்
பொருள்முடிவுமித்தனையே யெத்தவஞ்செய்தார்க்கும்
அருள்முடிவதாழியான்பால்.

மதுரகவியாழ்வார்.

நாவினால்நவிற் றின்பமெய்தினேன்
மேவினே னவன்பொன்னடிமெய்மையே
தேவுமற்றறியேன் குருகூர்நம்பி
பாவினின்னிசை பாடித்திரிவனே.

நம்மாழ்வார்.

குன்றமேந்திக் குளிர்மழைகாத்தவன்
அன்றுஞால மளந்தபிரான் பரன்
சென்றுசேர்திரு வேங்கடமாமலை
ஒன்றுமேதொழ நம்வினையோயுமே.

குலசேகராழ்வார்.

மன்னியதண்சாரல் வடவேங்கடத்தான்றன்
பொன்னியலும்சேவடிகள் காண்பான்புரிந்திறைஞ்சி
கொன்னவிலுங்கூர்வேல்குலசேகரன்சொன்ன
பன்னியநூல்தமிழ்வல்லார் பாங்காயபத்தர்களே.

பெரியாழ்வார்.

வேயர்தங்கள்குலத்துதித்த விட்டுசித்தன்மனத்தே
கோயில்கொண்டகோவலனைக்கொழுங்குளிர்முகில்வண்ணனை
ஆயரேறையமரர்கோவையந்தணர்தமமுதத்தினை
சாயைபோலபாடவல்லார்தாமுமணுக்கர்களே.

ஆண்டாள்.

பருந்தாள்களிற்றுக்கருள்செய்த பரமன்றன்னை பாரின்மேல்
விருந்தாவனத்தேகண்டமை விட்டுசித்தன்கோதைசொல்
மருந்தாமென்றுதம்மனத்தேவைத்துக்கொண்டுவாழ்வார்கள்
பெருந்தாளுடையபிரானடிகீழ்ப் பிரியாதென்றுமிருப்பாரே.

தொண்டரடிப்பொடியாழ்வார்.

வேதநூல்பிராயமநூறு மனிதர்தாமபுகுவரேலும்
பாதியுமுறங்கிப்போகும் நின்றதில்பதினையாண்டு

பேதைபாலகனதாகும் பிணிபசிமூப்புத்துன்பம்
ஆதலால்பிறவிவேண்டே னரங்கமாநகருளானே.

### திருப்பாணாழ்வார்.

கொண்டல்வண்ணனைக் கோவலனாய்வெண்ணெ
யுண்டவாயன் னென்னுள்ளங்கவர்ந்தானை
அண்டர்கோனணியரங்கன் னென்னமுதனைக்
கண்டகண்கள் மற்றொன்றினைக்காணாவே.

### திருமங்கையாழ்வார்.

வாடினேன்வாடிவருந்தினேன்மனத்தால் பெருந்துயரிடும்பையில்பிறந்து, கூடினேன்கூடியிளையவர்தம்மோடவர்தரும் கலவியே கருதி, ஓடினேனோடியுய்வதோர்பொருளா லுணர்வெனும்பெரும்பதந்தெரிந்து, நாடினேன்நாடிநான் கண்டுகொண்டேன்நாராயணாவென்னுநாமம்.

### தோத்திரம்.

ஓம் ஹரி ஹரி, நாஹரி, முராஹரி, அம்புஜாக்ஷீ, அச்சுதா, உச்சிதா, பஞ்சாயுதா, பாண்டவர் தூதா, லக்ஷ்மீ சமேதா, லீலா விநோதா, கமலபாதா ஆதிமத்தியாந்தாஹிதா, அனுதாக்ஷகா, அகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகா, பரமானந்தா, முகுந்தா, வைகுந்தா, கோவிந்தா, பச்சை வண்ணா, கார்வண்ணா, கமலக்கண்ணா, ஜனார்த்தனா கருடவாஹனா, ராக்ஷஸமர்த்தனா, காளிங்க நிர்த்தனா சேஷஸயனா, நாராயணா, பிரம பாராயணா, வாமனா, நந்தநந்தனா, மதுசூதனா, பரிபூரணா, சர்வகாரணா. வெங்கடரமணா, சங்கடஹரணா, ஸ்ரீதரா, துளசீதரா, தாமோதரா, பீதாம்பரா, மச்சகச்ச வராஹவதாரா, பலபத்ரா, பரமதயாபரா, பரமேசுவரா, சங்குசக்ரா, சர்வேஸ்வரா, கருணாகரா, ராதாமனோகரா, ஸ்ரீரங்கா, பாண்டுரங்கா, லோகநாயகா, பத்மநாபா, திவ்யசொரூபா, புண்யபுருஷா, புருஷோத்தமா, ஸ்ரீராமா, பரந்தாமா, நாரசிம்மா, திரிவிக்கிரமா, பாசுராமா, சஹஸ்ரநாமா, பக்தவத்சலா, தேவானுகூலா, ஆதிமூலா, வேணுகோபாலா, மாதவா, யாதவா, ராகவா, கேசவா, வாசுதேவா, தேவதேவா, ஆதிதேவா, மஹாநுபாவா, வசுதேவிதநயா, தசரததநயா, மாயாவிலாசா, வைகுண்டவாசா, சுயம்பிரகாசா, வேங்கடேசா, ருஷீகேசா, சித்விலாசா, கஜபதி, ரகுபதி, சீதாபதி, வெங்கடாசலபதி, மாயா, ஆயா, வெண்ணெயுண்டநேயா, அண்டர்களேத்துந்தூயா, உலகமுண்டவாயா, நானாஉபாயா, பக்தர்கள்சகாயா, சதுர்ப்புஜா, கருடத்துவஜா, கோதண்டஅஸ்தா, புண்டரீகவரதா, ஓ! விஷ்ணு, ஓ! பராத்பரா, பரமதயாளா, ஓம் நாராயணா நமோ நாராயணா ஸ்ரீமந்நமோ நாராயணா.

---

Honest toil is no disgrace.

# திருவள்ளுவர் திருக்குறள்.

## கடவுள் வாழ்த்து.

அகரமுதலவெழுத்தெல்லாமாதி
பகவன்முதற்றேயுலகு.

கற்றதனாலாயபயனென்கொல்வாலறிவன்
நற்றாடொழாஅரெனின்.

அந்தணரென்போரறவோர்மற்றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மைபூண்டொழுகலான். (நீத்தார்பெருமை)

அறத்தான்வருவதேயின்பமற்றெல்லாம்
புறத்தபுகழுமில. (அறன்வலியுறுத்தல்)

துறந்தார்க்குந்துவ்வாதவர்க்குமிறந்தார்க்கும்
இல்வாழ்வானென்பான்றுணை. (இல்வாழ்க்கை)

அன்புமறனுமுடைத்தாயினில்வாழ்க்கை
பண்பும்பயனுமது.

மங்கலமென்பமனைமாட்சிமற்றதன்
நன்கலநன்மக்கட்பேறு. (வாழ்க்கைத்துணைநலம்)

தந்தைமகற்காற்றுநன்றியவையத்து
முந்தியிருப்பச்செயல். (புதல்வரைப்பெறுதல்)

இனியவுளவாகவின்னாதகூறல்
கனியிருப்பக்காய்கவர்ந்தற்று. (இனியவைகூறல்)

காலத்தினாற்செய்தநன்றிசிறிதெனினும்
ஞாலத்தின்மாணப்பெரிது. (செய்ந்நன்றியறிதல்)

அடக்கமமரருளுய்க்குமடங்காமை
ஆரிருளுய்த்துவிடும். (அடக்கமுடைமை)

பரிந்தோம்பிக்காக்கவொழுக்கந்தெரிந்தோம்பித்
தேரினுமஃதேதுணை. (ஒழுக்கமுடைமை)

பிறன்மனைநோக்காதபேராண்மைசான்றோர்க்
கறனொன்றோவான்றவொழுக்கு. (பிறனில்விழையாமை)

பொறுத்தலிறப்பினையென்றுமதனை
மறத்தலதனினுநன்றி. (பொறையுடைமை)

அவ்வித்தழுக்காறுடையானைச்செய்யவள்
தவ்வையைக்காட்டிவிடும். (அழுக்காறாமை)

ஏதிலார்குற்றம்போற்றங்குற்றங்காண்கிற்பின்
தீதுண்டோமன்னுமுயிர்க்கு. (புறங்கூறாமை)

மறந்தும்பிறன்கேடுசூழற்கசூழின்
அறஞ்சூழுஞ்சூழ்ந்தவன்கேடு. (தீவினையச்சம்)

வறியார்க்கொன்றீவதேயீகைமற்றெல்லாங்
குறியெதிர்ப்பைநீரதுடைத்து. (ஈகை)

தோன்றிற்புகழொடுதோன்றுகவஃதிலார்
தோன்றலிற்றோன்றாமைநன்று. (புகழ்)

அருள்சேர்ந்தநெஞ்சினார்க்கில்லையிருள்சேர்ந்த
இன்னாவுலகம்புகல். (அருளுடைமை)

பொருளாட்சிபோற்றாதார்க்கில்லையருளாட்சி
ஆங்கில்லையூன்றின்பவர்க்கு. (புலான்மறுத்தல்)

அவிசொரிந்தாயிரம்வேட்டலிலொன்றன்
உயிர்செகுத்துண்ணாமைநன்று. (புலான்மறுத்தல்)

வேண்டியவேண்டியாங்கெய்தலாற்செய்தவம்
ஈண்டுமுயலப்படும். (தவம்)

உள்ளத்தாலுள்ளலுந்தீதேபிறன்பொருளைக்
கள்ளத்தாற்கள்வேமெனல். (கள்ளாமை)

எல்லாவிளக்கும்விளக்கல்லசான்றோர்க்குப்
பொய்யாவிளக்கேவிளக்கு. (வாய்மை)

இன்னாசெய்தாரையொறுத்தலவர்நாண
நன்னயஞ்செய்துவிடல். (இன்னாசெய்யாமை)

நல்லாறெனப்படுவதியாதெனின்யாதொன்றுங்
கொல்லாமைசூழுநெறி. (கொல்லாமை)

உறங்குவதுபோலுஞ்சாக்காடுறங்கி
விழிப்பதுபோலும்பிறப்பு. (நிலையாமை)

எப்பொருளெத்தன்மைத்தாயினுமப்பொருள்
மெய்ப்பொருள்காண்பதறிவு. (மெய்யுணர்தல்)

அவாவில்லார்க்கில்லாகுந்துன்பமஃதுண்டேல்
தவாஅதுமேன்மேல்வரும். (அவாவறுத்தல்)

ஊழிற்பெருவலியாவுளமற்றொன்று
சூழினுந்தான்முந்துறும். (ஊழ்)

கற்ககசடறக்கற்பவைகற்றபின்
நிற்கவதற்குத்தக. (கல்வி)

தாமின்புறுவதுலகின்புறக்கண்டு
காமுறுவர்கற்றறிந்தார். (கல்வி)

எனைத்தானுநல்லவைகேட்கவனைத்தானும்
ஆன்றபெருமைதரும். (கேள்வி)

---

Time and tide tarry for no man.

அறிவுடையாரெல்லாமுடையாரறிவிலார்
என்னுடையரேனுமிலர். (அறிவுடைம)

யாவருகுறறமவர் னுமபனைததுணையாக
கொள்வர்பழிநாணுவார். (குற்றங்கடிதல்)

செய்தக்கவல்லசெயக்கெடுஞ்செய்தக்க
செய்யாமையானுங்கெடும். (தெரிந்துசெயல்வகை)

அரியவென்றுகாதவில்லைபொச்சாவாக்
கருவியாற்போற்றிச்செயின். (பொச்சாவாமை)

வானோக்கிவாழுமுலகெல்லாமன்னவன்
கோனோக்கிவாழுங்குடி. (செங்கோன்மை)

உடையரெனப்படுவதூக்கமஃதில்லார்
உடையதுடையரோமற்று. (ஊக்கமுடைமை)

கல்லாதவரிற்கடையென்பகற்றறிந்தும்
நல்லாரவையஞ்சுவார். (அவையஞ்சாமை)

இல்லாரையெல்லாருமெள்ளுவர்செல்வரை
எல்லாருஞ்செய்வர்சிறப்பு. (பொருள்செயல்வகை)

முகநகநட்பதுநட்பன்றுநெஞ்சத்
தகநகநட்பதுநட்பு. (நட்பு)

ஆய்ந்தாய்ந்துகொள்ளாதான்கேண்மைகடைமுறை
தான்சாய்ந்துயரந்தரும். (நட்பாராய்தல்)

னைனுதுமனமனவேறு
சொல்வேறுபட்டார்தொடர்பு. (தீநட்பு)

பெரியாரைப்பேணாதொழுகிற்பெரியாரால்
பேராவிடும்பைதரும். (பெரியாரைப்பிழையாமை)

துஞ்சினார்செத்தாரின்வேறல்லரெஞ்ஞான்றும்
நஞ்சுண்பார்கள்ளுண்பவர். (கள்ளுண்ணாமை)

பழகியசெல்வமும்பண்புங்கெடுக்கும்
கழகத்துக்காலைபுகின். (சூது)

மருந்தெனவேண்டாவாம்யாக்கைக்கருந்திய
தற்றதுபோற்றியுணின். (மருந்து)

அடுக்கியகோடிபெறினுங்குடிப்பிறந்தார்
குன்றுவசெய்தலிலர். (குடிமை)

செல்லாமையுண்டேலெனக்குரைமற்றுநின்
வல்வரவுவாழ்வார்க்குரை. (பிரிவாற்றாமை)

Desease is the punishment of neglect.

## ஸ்ரீசுப்பிரமணியர் மேல் பாடிய அஷ்டோத்தர சதகம்.

சீர்கொண்டதெய்வவதனங்களாறுந்திகழ்கடப்பந்
தார்கொண்டபன்னிருதோள்களுந்தாமரைத்தாள்களுமோர்
கூர்கொண்டவேலுமயிலுநற்கோழிக்கொடியுமருட்
கார்கொண்டவண்மைத்தணிகாசலமுமென்கண்ணுற்றதே.

கண்மூன்றுற்றசெங்கரும்பின்முத்தேபதங்கண்டிடுவான்
மண்மூன்றுலகும்வழுத்துப்பவளமணிக்குன்றமே
திண்மூன்றுநான்குபுயங்கொண்டொளிர்வச்சிரமணியே
வண்மூன்றலர்மலைவாழ்மயிலேறியமாணிக்கமே

மாணித்தஞானமருந்தேயென்கண்ணினுண்மாமணியே
யாணிப்பொன்னேயெனதாருயிரேதணிகாசலனே
தாணிற்கிலேனினைத்தாழாதவஞ்சர்தமதிடம்போய்ப்
பேணித்திரிந்தனனந்தோவென்செய்வனிப்பேதையனே.

அன்னையெனைத்தந்தவப்பாவென்றேங்கியலறுகின்றே
னென்னையிவ்வேழைக்கிரங்காதுநீட்டித்திருத்தலெந்தாய்
பொன்னேசுகுணப்பொருப்பேதணிகைப்பொருப்பமர்ந்த
மன்னேகலபமயின்மேலழகியமாமணியே.

மணியேதினைப்புனவல்லியைவேண்டிவளர்மறைவாண்
கணியேயெனநின்றகண்ணேயென்னுள்ளக்களிநறவே
பணியேனெனினுமெனைவலிந்தாண்டுன்பதந்தரவே
நணியேதணிகைக்குவாவெனவோர்மொழிநல்குவையே.

நல்காதவீனர்தம்பாற்சென்றிரந்துநவைப்படுதன்
மல்காத்தவண்ணமருள்செய்கண்டாய்மயில்வாகனனே
பல்காதனீக்கியநல்லோர்க்கருளும்பரஞ்சுடரே
யல்காதவண்மைத்தணிகாசலதிலமர்ந்தவனே.

அமராவதியிறைக்காருயிரீந்தவருட்குன்றமே
சமராபுரிக்கரசேதணிகாசலத்தற்பரனே
குமராபரமகுருவேகுகாவெனக்கூவிநிற்பே
னமராஜன்வந்திடுங்காலையிலேயெனையேன்றுகொள்ளே.

கொள்ளுண்டவஞ்சர்தங்கூட்டுண்டுவாழ்க்கையிற்குட்டுண்டுமேற்
றுள்ளுண்டநோயினிற்சூடுண்டுமங்கையர்தோய்வெனுமோர்
கள்ளுண்டநாயேற்குன்கருணையுண்டோநறக்கடலமுதத்
தெள்ளுண்டதேவர்புகழ்தணிகாசலச்சிற்பரனே.

சிற்பகன்மேவுமித்தேகத்தையோம்பித்திருவனேயார்
தற்பகமேவிமைழந்தாழ்ந்தேன் றணிகைதனிலமர்ந்த
கற்பகமேநின்கழல்கருதேனிக்கடைப்படுமென்
பொற்பகமேவியநின்னருளென்னென் றுபோற்றுவதே.

போற்றேனெனினும்பொறுத்திடல்வேண்டும்புவிநடையாஞ்
சேற்றேறவிழுந்துதியங்குகின்றேனைச்சிறிதுமினி
யாற்றேனெனதரசேயமுதேயெனருட்செல்வமே
மேற்றேன்பெருகுபொழிற்றணிகாசலவேல்லவனே.

வேல்கொண்டகையும்விறல்கொண்டதோளும்விளங்குமயின்
மேல்கொண்டவீறுமலர்முகமாறும்விரைகமலக்
கால்கொண்டவீரக்கழலுங்கண்டாலன்றிக்காமனெய்யுங்
கோல்கொண்டவன்மையறுமோதணிகைக்குருபரனே.

குருவேயயனரியாதியர்போற்றக்குறைதவிர்ப்பான்
வருவேல்பிடித்துமகிழ்வள்ளலேகுணமாமலையே
தருவேதணிகைத்தயாநிதியேதுன்பச்சாகரமாங்
கருவேரறுத்திக்கடையனேக்காக்கக்கடனுனக்கே.

உனக்கேவிழைவுகொண்டோலமிட்டோங்கியுலறுகின்றே
னெனக்கேயருளித்தமியேன்பிழையுளத்தெண்ணியிடேல்
புனக்கேழ்மணிவல்லியைப்புணர்ந்தாண்டருள்புண்ணியனே
மனக்கேதமாற்றுந்தணிகாசலத்தமர்வானவனே.

வானோர்குடிகளைவாழ்வித்ததெய்வமணிச்சுடரே
நானோரெளியனென்றுன்பறுத்தாளெனநண்ணிநின்றே
னேனோநின்னெஞ்சமிரங்காதவண்ணமிருங்கணிப்பூந்
தேனோடருவிபயிலுந்தணிகைச்சிவகுருவே.

கையாததுன்பக்கடன்முழ்கிநெஞ்சங்கலங்கியென்ற
னையாநின்பொன்னடிக்கோலமிட்டேனென்னையாண்டுகொள்ளாய்
மையார்தடங்கண்மலைமகள்கண்டுமகிழ்செல்வமே
செய்யார்தணிகைமலையரசேயயிற்செங்கையனே.

சொல்லார்மலர்புனையன்பகத்தோர்க்கருள்சொல்லுமெல்லாம்
வல்லாய்யன்றேத்தவறிந்தேனினியென்றன்வல்வினைக
ளெல்லாம்விடைகொண்டிரியுமென்மேவியமன்சினமுஞ்
செல்லாதுகாணையனேதணிகாசலச்சீரரசே.

அணிகொள்வேலுடையண்ணலேநின்றிருவருடிகளையன்போடு
பணிகிலேனகமுருகிநின்முடிலேன்பாடிலேன்மனமாயைத்
தணிகிலேன்றிருத்தணிகையைநினைகிலேன்சாமிநின்வழிபோதத்
துணிகிலேனிருந்தென்செய்தேன்பாவியேன்றுன்பமுமெஞ்சேனே.

சேல்பிடித்தவன்றந்தையாதியர்தொழுந்தெய்வமேசிவப்பேறே
மால்பிடித்தவரறியொணாத்தணிகைமாமலையமர்ந்திடுவாழ்வே
வேல்பிடித்தருள்வள்ளலேயான்சதுர்வேதமுங்காணாநின்
கால்பிடிக்கவுங்கருணைநீசெய்யவுங்கண்டுகண்களிப்பேனோ.

கண்டனேகவானவர்தொழுநின்றிருக்கழலிணைதனக்காசை
கொண்டனேகமாய்த்தெண்டனிட்டானந்தக்கூத்தினையுகந்தாடித்
தொண்டனேனுநின்னடியரிற்சேறிவனோதுயருழந்தலைவேனோ
வண்டனேதிருத்தணிகைவாழண்ணலேயணிகொள்வேற்கரத்தோ

ஊணேயுடையேபொருளேயென்றுருகிமனதுதடுமாறி [னே.
வீணேதுயரத்தழுந்துகின்றேன்வேறோர்துணைநின்னடியன்றிக்
காணேனமுதேபெருங்கருணைக்கடலேகனியேகரும்பேநற்
சேணேர்தணிகைமலைமருந்தேதேனேஞானச்செழுஞ்சுடரே.

பாரும்விசும்புமறியவெனைப்பயந்ததாயுந்தந்தையுநீ
யோரும்போதிங்கெனிலெளியேனோயாத்துயருற்றிடனன்றோ
யாருங்காணவுனைவாதுக்கிழுப்பேனன்றியென்செய்கேன்
சேருந்தணிகைமலைமருந்தேதேனேஞானச்செழுஞ்சுடரே.

நடையேய்துயரான்மெலிந்துநினைநாடாதுழலுநாயிற்
கடையேனெனினுங்காத்தலென்றன்கண்ணேநினதுகடனன்றோ
தடையேன்வருவாய்வந்துனருடருவாயிதுவேசமயங்காண்
செடிதீர்த்தருளுந்திருத்தணிகைத்தேவேஞானச்செழுஞ்சுடரே.

நாளையேகியேவணங்குதுமெனத்தினநாளையேகழிக்கின்றோ
மூளைநெஞ்சமேயென்னையோவென்னையோவுயர்திருத்தணிகேசன்
றாளையுன்னியேவாழ்ந்திலமுயிருடறணர்ந்திறனையிந்த
வேளையென்றறிவுற்றிலமென்செய்வோம்விளம்பரும்விடையோமே.

விடையவாழ்க்கையைவிரும்பினனின்றிருவிரைமலர்ப்பதம்போற்றேன், கடையநாயினேனெவ்வண்ணநின்றிருக்கருணைபெற்றுய்வேனே, விடையிலேறியசிவபரஞ்சுடருளேவிளங்கியவொளிக்குன்றே, தடையிலாதபேரானந்தவெள்ளமேதணிகையெம்பெருமானே.

வேயையென்றதோட்பாவையர்படுகுழிவிழுந்தலைந்திடுமிந்த
நாயையெப்படியாட்கொளலாயினுநாதநின்செயலன்றே
தாயையப்பனைத்தமரினைவிட்டுனைச்சார்ந்தவர்க்கருள்கின்றோய்
மாயைநீக்கிநல்லருள்புரிதணிகையவந்தருளிந்நாளே.

சங்கபாணியைச்சதுமுகத்தனைச்
செங்கணாயிரத்தேவர்நாதனை
மங்கலம்பெறவைத்தவள்ளலை
தங்கருட்டிருத்தணிகையையனே.

**Read everything of something, and something of everything.**

ஐயனேநினையன்றியெங்கணும்
பொய்யனேற்கொருபுகலிலாமையால்
வெய்யனேனெனவெறுத்துவிட்டிடேல்
மெய்யனேதிருத்தணிகைவேலனே.

கால்குறித்தவென்கருத்துமுற்றியே
சால்வளத்திருத்தணிகைசார்பனென்
மால்பகைப்பிணிமாறியோடவே
மேல்குறிப்பனுல்வெற்றிச்சங்கமே.

சொல்லும்பொருளுமாய்நிறைந்தசுகமேயன்பர்துதிதுணையே
புல்லும்புகழ்சேர்நற்றணிகைப்பொருப்பின்மருந்தேபூரணமே
யல்லும்பகலுநின்னுமமந்தோநினைந்துன்னுளாகேன்
கல்லும்பொருவாவன்மனத்தாற்கலங்காநின்றேன்கடையேனே.

கடையேன்வஞ்சநெஞ்சகத்தாற்கலுழ்கின்றேனின்றிருக்கருணை
யடையேனவமேதிரிகின்றேனந்தோசிறிதுமறிவில்லேன்
விடையேறீசன்புயம்படுமுன்விரைத்தாட்கமலம்பெறுவேனோ
கொடையேயருளைத்தருமுகிலேகோவேதணிகைக்குலமணியே.

எளியேனினதுதிருவருளுக்கெதிர்நோக்குற்றேயிரங்குகின்ற
களியேனெனைநீகைவிட்டாற்கருணைக்கியல்போகற்பகமே
யளியேதணிகையருட்சுடரேயடியருறவேயருண்ஞானத்
துளியேயமையுமெனக்கெந்தாய்வாவென்றொருசொற்சொல்லாயே.

மன்னேயென்றனுயிர்க்குயிரேமணியேதணிகைமலைமருந்தே
யன்னேயென்னையாட்கொண்டவரசேதணிகையையாவே
பொன்னேஞானப்பொங்கொளியேபுனிதவருளேபூரணமே
யென்னேயெளியேன்றுயருழத்தலெண்ணியிரங்காதிருப்பதுவே.

இரங்காநின்றிங்கலைதருமிவ்வெளியேன்கனவினிடத்தேனு
மரங்காவரவினடித்தோனுமயனுங்காண்டற்கரிதாய்
வுரங்காமுறுமாமயின்மேனின்னுருவந்தரிசித்துவப்படையும்
வரங்காதலித்தேன்றணிகைமலைவாழ்வேயின்றுவருவாயோ.

எளியேனினதுசேவடியாமின்பநறவையெண்ணியெண்ணி
யளியேனெஞ்சஞ்சற்றேனுமன்பொன்றில்லேனதுசிறிது
மொளியேனெந்தாயென்னுள்ளத்தொளித்தேயெவையுமுணர்கின்
வளியேமுதலாய்நின்றருளுமணியேதணிகைவாழ்மன்னே. [றுய்

பெருமைநிதியேமால்விடைகொள்பெம்மான்வருந்திப்பெரும்பேற
[illegible]
யொருமைமனத்தினுச்சரித்திங்குயர்ந்ததிருவெண்ணீறிட்டா
லிருமைவளனுமெய்துமிடரென்பதொன்றுமெய்தாதே.

A library is infinite riches in a little room.

எய்தற்கரியவருட்சுடரேயெல்லாம்வல்லவிறையோனே
செய்தற்கரியவளத்தணிகைத்தேவேயுன்றனெழுத்தை
யுய்தற்பொருட்டிங்குச்சரித்தேயுயர்ந்ததிருவெண்ணீறிட்டால்
வைதற்கில்லாப்புழ்ச்சிவரும்வன்கணென்றும்வாராதே.

தோன்றுஞானச்சின்மயமேதூயசுகமேசுயஞ்சுடரே
யான்றார்புகழுந்தணிகைமலையரசேயுன்றனெழுத்தை
யூன்றுமனத்தினுச்சரித்திங்குயர்ந்ததிருவெண்ணீறிட்டா
லீன்றுணிகருமருளடையுமிடுக்கணென்றுமடையாதே.

கற்கிலேனுனதருட்பெயராங்குகசந்தவென்பவைநாளு
நிற்கிலேனுனதாகமநெறிதனினீசனேனுய்வேனோ
சொற்கிலேசமிலடியவரன்பினுட்டோய்தருபசுந்தேனே
யற்கிலேர்தருந்தணிகையாரமுதமேயானந்தவருட்குன்றே.

பாவவாழ்க்கையிற்பாவியேன்செய்திடும்பண்பிலாப்பிழைநோக்கித்
தேவரீர்மனதிரக்கமுற்றேயருள்செய்திடாதிருப்பீரேற்
காவலாகியகடும்பிணித்துயரமிக்கடையனேன்றனக்கின்னும் [ரே.
யாவதாகுமோவென்செய்கோவென்செய்கோவியலும்வேற்கரத்தீ

என்றுமாதர்மேலிச்சைவைத்துன்றனையெண்ணுவேன்றுயருற்றுங்
கன்றுநெஞ்சகக்கள்வனேனன்பினைக்கருத்திடையெனிற்சால
நன்றுநன்றெனக்கெவ்வணம்பொன்னருணல்குவையறிகில்லேன்
றுன்றுமாதவர்போற்றிடுந்தணிகைவாழ்சோதியேசுகவாழ்வே.

நண்ணேனோமகிழ்வினொடுந்திருத்தணிகைமலையதனைநண்ணியென்
கண்ணேநீயமர்ந்தவெழில்கண்குளிரக்காணேனோகண்டுவாரி [றன்
யுண்ணேனோவானந்தக்கண்ணீர்கொண்டாடியுனக்குகப்பாத்தொ
பண்ணேனோநின்புகழைப்பாடேனோவாயாரப்பாவியேனே. [ண்டு

பாவியேன்படுந்துயருக்கிரங்கியருட்டணிகையிலென்பால்வா
வென்று, கூவிநீயாட்கொள்வோர்கனவேனுங்காணேனோகுணப்
பொற்குன்றே, யாவியேயறிவேயெனன்பேயென்னரசேநின்னடி
யைச்சற்றுஞ், சேவியேனெனினுமெனைக்கைவிடேலன்பர்பழிசெப்
புவாரே.

தேடேனோவென்னுடனேகுற்றனெனவோடித்தேடிச்சென்றே
நாடேனோதணிகைதனிலுயகனேநின்னழகைநாடிநாடிக்
[illegible]டேனோவடியருடன்கோவேயெங்குகனேயெங்குருவேயென்று
பாடேனோவானந்தப்பரவசமுற்றுன்கமலப்பதநண்ணேனோ.

வாவாவென்னவருடணிகைமருந்தையென்கண்மாமணியைப்
பூவாய்நறவையாறந்தவநாள்போக்கின்றதுவும்போதாமன்
மூவாமுதலினைநட்கேலாமூடநினைவுமின்றிறண்ணி
யாவநெஞ்சேயெனைக்கெடுத்தாயந்தோநீதானுவாயே.

Be Courteous and considerate to every one you meet.

வாழும்படிநல்லருள்புரியுமருவுந்தணிகைமலைத்தேனைச்
சூழுங்கலபமயிலரசைத்துதியாப்பவமும்போதாமல்
வீழுங்கொடியர்தமக்கன்றிமேவாநினைவுமேவியின்று
தாழும்படியென்றனையலைத்தாய்சவலைமனநீசாகாயோ.

நெஞ்சேயுகந்ததுணையெனக்குநீயென்றறிந்தேநேசித்தேன்
மஞ்சேர்தணிகைமலையமுதைதவாரிக்கொள்ளும்போதென்னுள்ளே
நஞ்சேகலந்தாயுன்னுறவுநன்றேறயினியுன்னட்பகன்று
ஞ்சேனிலையேல்வன்னரகத்துள்ளேன்கொள்ளேனென்றையுமே.

தேனூரலங்கற்குழன்மடவார்திறத்தின்மயங்காத்திறலடைதற்
கானூர்கொடியெம்பெருமான்றனருட்கண்மணியேயற்புதமே
கானூர்பொழில்சூழ்திருத்தணிகைக்கரும்பேகருணைப்பெருங்கடலே
வானூரமுதேநின்றிருத்தாளடியேன்முடிமேல்வைப்பாயே.

தாழுங்கொடியமடவியர்தஞ்சழக்காலுழலாத்தகையடைந்தே
யாழும்பரமானந்தவெள்ளத்தழுந்திக்களிக்கும்படிவாய்ப்ப
ஆழுந்தியசீரன்பர்மனத்தொளிருஞ்சுடரேயுயர்தணிகை
வாழும்பொருளேநின்றிருத்தாளடியேன்முடிமேல்வைப்பாயே.

பாகைப்பொருவுமொழியிடையீரென்றுமடவார்ப்பழிச்சாமல்,
லோகைப்பெறுநின்றிருத்தொண்டருடன்சேர்ந்துண்மையுணர்ந்திடு
வான், றோகைப்பரிமேல்வருந்தெய்வளாமணியேதிருத்தணிகை,
வாகைப்புயனேநின்றிருத்தாளடியேன்முடிமேல்வைப்பாயே.

தணிகைமலையைச்சாரேனோசாமியழகைப்பாரேனோ
பிணிகையறையைப்பேரேனோபேராவன்புகூரேனோ
வணிசெயருணீராரேனோவாருத்தாகந்தீரேனோ
பணிசெய்தொழும்பிற்சேரேனோபார்மீதிரங்குநீரேனே.

எளியேனென்னவிருப்பாரோவேழைக்கிரங்கும்விருப்பாரோ
வளியேன்பேர்நெஞ்சிருப்பாரோவழியார்க்காமந்திருப்பாரோ
களியேனென்னவுகுப்பாரோகருதுமருட்குக்கருப்பாரோ [ரோ.
தெளியேன்யானென்செய்கேனேதென்பாற்றணிகைப்பொருப்பா

தணிகாசலம்போய்த்தழையேனோசாமிதிருத்தாள்விழையேனோ
பணிகாதலித்துப்பிழையேனோபாடிமனதுகுழையேனோ
திணிகாணுலகையழையேனோசேர்ந்தவ்வீட்டினுழையேனோ
பிணிகாணுலகிற்பிறந்துழன்றேபேதுற்றலையும்பழையேனே.

தேனேயுளங்கொடெளிவேயகண்டசித்தமேவிநின்றசிவமே
கோனேகனிந்தசிவபோதஞானகுருவேவிளங்குகுகனே
தானேதனக்குநிகராய்விளங்குதணிகாசலத்தெம்மரசே
நானேழையிங்குமனநொந்துநொந்துநலிகின்றசெய்ந்நலமோ.

---

Without true friends, the world is but a wildernes s.

மணியேகலாபமலைமேலமர்ந்தமதியேநினைச்சொன்மலரா
லணியேனலன்புமமையேன்மனத்திலடியாரடிக்கண்மகிழ்வாய்ப்
பணியேநினைந்துபதையேனிருந்துபருகேனுவந்தபடியே
யெணியேநினைக்கிலவமாமிவ்வேழையெதுபற்றியுய்வதரசே.

அவநாள்கழிக்கவறிவேனலாதுனடிபேணிநிற்கவறியேன்
றவநாடுமன்பரொடுசேரவந்துதணிகாசலத்தையடையே
னெவனுனெக்குமவணீயிருக்குமிடமீபிலுன்றனடியா [ரேனே.
ரிவனுரிவன்றனியல்பென்னவென்னிலெவனென்றுரைப்பையெ

வரங்கொளடியர்மனமலரின்மகிழ்வுற்றமர்ந்தமாமணியே
திரங்கொடணிகைமலைவாழுஞ்செல்வப்பெருக்கேசிற்பரமே
தரங்கொளுலகமயலகலத்தாழ்ந்துள்ளுருகவழுதழுது
கரங்கொள்சிரத்தோடியானுன்னைக்கண்களாரக்கண்டிலனே.

மட்டித்தளறுபடக்கடலைமலைக்குங்கொடியமாவுருவைச்
சட்டித்தருளுந்தணிகையிலென்முயேதமரேசற்குருவே
யெட்டிக்கனியாமிவ்வுலகத்திடர்விட்டகலநின்பதத்தைக்
கட்டித்தழுவிநின்னுருவைக்கண்களாரக்கண்டிலனே.

பள்ளவுலகப்படுகுழியிற்பரிந்தங்குழலாதானந்த
வெள்ளத்தழுந்துமன்பர்வழிவிருந்தேதணிகைவெற்பரசே
யுள்ளமகலவங்குமிங்குமோடியலையும்வஞ்சநெஞ்சக்
கள்ளமகற்றுநின்னுருவைக்கண்களாரக்கண்டிலனே.

வஞ்சகப்பேதையர்மயக்கிலாழ்ந்துழ
னெஞ்சகப்பாவியேனினைந்திலேனையோ
வெஞ்சகப்போரினைவிட்டுளோர்புகழ்
தஞ்சகத்தணிகைவாழ்தருமவானையே.

வானிகர்கூந்தலார்வன்கணுன்மிக
மானிகழ்பேதையேன்மதித்திலேனையோ
தானிரும்புகழ்கொளுந்தணிகைமேலருட்
டேனிருந்தொழுகியசெங்கரும்பையே.

கருங்கடுநிகர்நெடுங்கண்ணினார்மய
லொறுங்குறுமனத்தினேனுன்னிலேனையோ
தருங்குபுகழ்மிகுந்திடுந்தணிகைமாமலை
மருங்கமர்ந்தன்பருண்மன்னும்வாழ்வையே.

அன்பினுனதுதிருவடிக்கேயாளாய்த்தொண்டொன்முற்றுதே
துன்பினுடையோர்பாலணுகிச்சேர்ந்தேதனினியோர்துணைகாணே
னென்பினமணிந்தமாலைபுனையெம்மான்றந்தபெம்மானே [யோ.
முன்பினடுவாய்முளைத்தோனேமுறையோமுறையோமுறையே

Time is not mere money but is the very life.

வேதாநந்தனொடுபோற்றிமேவப்படுநின்பதமறந்தே
யீதானந்தந்திடுவீறென்றீனரிடம்போயிரந்தலைந்தேன்
போதானந்தப்பரசிவத்திற்போந்தபொருளேபூரணமே
மூதானந்தவாரிதியேமுறையோமுறையோமுறையேயோ.

அண்ணாவேர்வென்னருமையையாவோபன்னிரண்டு
கண்ணாவோவேல்பிடித்தகையாவோசெம்பவள
வண்ணாவோநற்றணிகைமன்னாவோவென்றென்றே
யெண்ணாவோதுன்பத்திருங்கடற்குண்மன்னினனே.

தேவரேமுதலுலகங்கள்யாவையுஞ்சிருட்டியாதியசெய்யு
மூவரேயெதிர்வருகினுமதித்திடேன்முருகநின்பெயர்சொல்வோர்
யாவரேனுமென்குடிமுழுதாண்டெனையளித்தவரவரேகாண்
டாவநாடொணாத்தணிகையம்பதியில்வாழ்சண்முகப்பெருமானே.

தேறுப்பெருமனமானதுதேறுந்துயர்மாறும்
மாறுப்பிணிமாயுந்திருமருவுங்கருவொருவும்
வீறுப்பொடுவருசூர்முடிவேறுக்கிடவருமோ
ராறுக்கரப்பொருளேயெனவருணீறணிந்திடிலே.

மஞ்சேர்பிணிமிடியாதியைநோக்கிவருந்துறுமென்
னெஞ்சேதணிகையனாறெழுத்துண்டுவெண்ணீறுண்டுநீ
யெஞ்சேலிரவும்பகலுந்துதிசெய்திடுதிகண்டா
யஞ்சேலிதுசத்தியமாமென்சொல்லையறிந்துகொண்டே.

ஊன்பார்க்குமிவ்வுடற்பொய்மையைத்தேர்தலொழிந்தவமே
மான்பார்க்குங்கண்ணியர்மையலில்வீழ்மயக்கமற்றே
தேன்பார்க்குஞ்சோலைத்தணிகாசலத்துன்றிருவழகை
நான்பார்க்குநாளெந்தநாண்மயிலேறியநாயகனே.

எப்பாலவருமிறைஞ்சுந்தணிகையிருந்தருளென்
னப்பாவுன்பொன்னடிக்கென்னெஞ்சகமிடமாக்கிமிக்க
வெப்பானநஞ்சனவஞ்சகர்பாற்செலும்வெந்துயர்நீத்
திப்பாரினின்னடியார்க்கேவல்செய்யவெனக்கருளே.

எய்யாதருடணிகாசலமேவியவென்னருமை
யையாநினதுதிருவடியேத்தியன்றோவயனுஞ்
செய்யாண்மருவும்புயனுடைத்தேவனுஞ்சேணவனு,
நைய்யாதவாயுளுஞ்செல்வமும்வண்மையுநண்ணினரே.

கற்றவர்புகழ்நின்றிருவடிமலரைக்கடையனேன்முடிமிசையமர்த்தி
யுற்றவிவ்வுலகமயக்கறமெய்ம்மையுணர்த்துநாளெந்தநாளறியே
னற்றவருணரும்பரசிவத்தெழுந்தநல்லருட்சோதியேவைநீர்
கொற்றவேலுகந்தகுமரனேதணிகைக்குன்றமர்ந்திடுகுணக்குன்றே.

Be quite happy with what is within your reach.

வருபயனறியாதுழன்றிடுமேழைமதியினேனுய்ந்திடும்வண்ண
மொருவருநினதுதிருவடிப்புகழையுன்னுநாளெந்தநாளறியே
னருவுருவாகுஞ்சிவபிரானளித்தவரும்பெறற்செல்வமேயமுதே
குருவுருவாகியருடருந்தணிகைக்குன்றமர்ந்திடுகுணக்குன்றே.

இன்னுமெத்தனைநாட்செல்லுமேழையேனிடர்க்கடல்விடுத்தேற
மின்னும்வேற்படைமிளிர்தருங்கைத்தலவித்தகப்பெருமானே
துன்னுநற்றணிகாசலத்தமர்ந்தருடோன்றலேமயிலேறி
மன்னுமுத்தமவள்ளனின்றிருமனக்கருத்தறியேனே.

செங்கண்விடைதனிலேறியசிவனார்திருமகனா
ரெங்கண்மணியனையார்மயிலின்மீதுவந்திட்டா
ரங்கண்மிகமகிழ்வோடுசென்றவர்நின்றதுகண்டே
னிங்கண்வளையிழந்தேன்மயலுழந்தேன்கலையெனவே.

அழகாவமலாவருளாளாவறிவாலறிவாரகமேவுங்
குழகாகுமராவெனையாண்டகோவேநின்சீர்குறியாரைப்
பழகாவண்ணமெனக்கருளிப்பரனேநின்னைப்பணிகின்றோர்க்
கழகாதரவாம்பணிபுரிவாரடியார்க்கடிமையாக்குகவே.

புரிவேன்விரதந்தவந்தானம்புரியாதொழிவேன்புண்ணியமே
பரிவேன்பாவம்பரிவேனிப்பரிசாலொன்றும்பயன்காணேன்
றிரிவேனினதுபுகழ்பாடிச்சிறியேனிதனைத்தீர்வேனே
லெரிவேனெரிவாய்நரகத்தேயிருப்பேனிளைப்பேன்விளைப்பேனே.

ஆறுமுகமுந்திணிதோளீராறுங்கருணையடித்துணையும்
வீறுமயிலுந்தனிக்கடவுள்வேலுந்துணையுண்டெமக்கிங்கே
சீறும்பிணியுங்கொடுங்கோளுந்தீயவினையுஞ்செறியாவே
நூறும்பகட்டானதிகாரநடவாதுலகம்பரவுறுமே.

மருளுறுமுலகிலாம்வாழ்க்கைவேண்டியே
யிருளுறுதுயர்கடலிழியுநெஞ்சமே
தெருளுறுநீற்றினைச்சிவவென்றுட்கொளி
லருளுறுவாழ்க்கையிலமர்தலுண்மையே.

அன்பிலாவஞ்சர்தம்மவலச்சூழலி
லென்பிலாப்புழுவெனவிரங்குநெஞ்சமே
யின்பருச்சண்முகவென்றுநீறிடிற்
றுன்புறுத்தனிக்கதிச்சூழல்வாய்க்குமே.

காயமாங்கானலைக்கருதிநாடொறு
மாயமாங்கானிடைவருந்துநெஞ்சமே
நேயமாஞ்சண்முகவென்றுநீறிடிற்
றேயமாம்பெரும்பிணித்துன்பநீங்குமே.

Trials teach is experience.

நதியும்மதியும்பொதியுஞ்சடையார்நவின்மோனும்
விதியுந்துதியைம்முகனார்மகனார்மிகுசீருந்
நிதியும்பதியுங்கதியுந்தருவார்நெடுவேலார்
வதியும்மயின்மேல்வருவார்மலரேவருமாறே."

சந்தீர்வரையுட்சிந்தாமணிநேர்தணிகேசர்
மந்தாநிலமேழ்ந்தார்மருகின்மயிலேறி
வந்தார்நிலவோர்செந்தாமரையின்மலர்வாசக்
கொந்தார்குழலென்னிலையுங்கலையுங்கொண்டாரே.

சேதனநந்தார்சென்றுவணங்குந்திறல்வேலார்
தாதனவண்ணத்துள்ளொளிர்கின்றதணிகேசர்
மாதனமுந்தாவந்தெனவந்தேவாதாதா
வாதனமென்றாரென்னடியம்மாவவர்சூதே.

முருகாசரணஞ்சரணமென்றன்பதமுன்னியுள்ள
முருகாதநாயனையேற்குநின்றண்ணருளுண்டுகொலோ
வருகாதபாற்கடன்மீதேயனந்தலமர்ந்தவன்றன்
மருகாமுக்கண்ணவன்மைந்தாவெழின்மயில்வாகனனே.

ஆறுமுகங்கொண்டவையாவென்றன்பமனைத்துமின்னு
மேறுமுகங்கொண்டதல்லாலிறங்குமுகமிலையால்
வீறுமுகங்கொண்டகைவேலின்வீரம்விளங்கவென்னைச்
சீறுமுகங்கொண்டவற்றன்பமோடச்செலுத்துகவே.

எளியனேனின்னுமெத்தனைநாட்செலுமிடர்க்கடல்விடுத்தேற
வொளியனேகமாய்த்திரண்டிடுஞ்சிற்பரவுருவமேவுருவில்லா
வெளியதாகியவத்துவேமுத்தியின்மெய்ப்பயன்றருவித்தே
யளியதாகியநெஞ்சினர்க்கருடருமாறுமாமுகத்தேவே.

மான்கண்டகையுடையார்தருமகனார்தமைமயின்மே
னான்கண்டனனவர்கண்டனர்நகைகொண்டனமுடனே
மீன்கண்டனவிழியாரதுபழியாகவிளைத்தா
ரேன்கண்டனையென்றாளனையென்னென்றுரைக்கேனே.

உலகம்பரவும்பரஞ்சோதியுருவாங்குருவேயும்பரிடைக்
கலகந்தருசூர்க்கிளைகளைந்தகதிர்வேலரசேகவின்றருசீர்த்
திலகந்திகழ்வாணுதற்பரையின்செல்வப்புதல்வாதிறலதனு
விலகுங்கலபமயிற்பரிமேலேறும்பரிசென்னியம்புகவே.

வலத்தால்வடிவேற்கரத்தேந்துமணியேநின்னைவழுத்துகின்ற
நலத்தாலுயர்ந்தபெருந்தவர்பானண்ணும்பரிசுநல்கினையே
றலத்தாலுயர்ந்தவானவருந்தமியேற்கிணையோசடமாள
மலத்தால்வருந்தாப்பெருவாழ்வான்மகிழ்வேனின்பம்விளைர்வேனே.

Truth is our only armour in all passages of life and death.

என்னிருகண்ணின்மேவுமிலங்கொளிமணியேபோற்றி
பன்னிருபடைகொண்டோங்கும்பன்னிருகரத்தாய்போற்றி
மின்னிருநங்கைமாருண்மேவியமணாளபோற்றி
நின்னிருபாதம்போற்றிநீள்வடிவேலபோற்றி.

மதிவளர்சடைமுடிமணிதருசுரர்முடிமணியென்கோ
பதிவளர்சரவணபவநவசிவகுருபதியென்கோ
துதிவளர்துணையடிதொழுமடியவர்பெறுதுணையென்கோ
நிதிவளர்பரசுகநிலைபெறுநெறிதருநினையானே.

வன்குலஞ்சேர்கடன்மாமுதல்வேரறமாட்டிவண்மை
நன்குலஞ்சேர்விண்ணகரளித்தோயன்றுநண்ணியென்னை
நின்குலஞ்சேர்த்தனையின்றுவிடேலுளநேர்ந்துகொண்டு
பின்குலம்பேசிநின்றருமுண்டோவிப்பெருநிலத்தே.

கண்ணப்பனென்னுந்திருப்பெயரானுலகம்புகழுந்
திண்ணப்பனைத்துஞ்சிவனார்மகனுக்குத்தெண்டனிட்ட
விண்ணப்பமொன்றிந்தமேதினிமாயையில்வீழ்வதறு
தெண்ணப்படிநின்றிருவருளீகவிவ்வேலையுயற்கே.

கங்கையஞ்சடைசேர்முக்கட்கரும்பருண்மணியேபோற்றி
யங்கையங்கனியேபோற்றியருட்பெருங்கடலேபோற்றி
பங்கையன்முதலோர்போற்றும்பரம்பரஞ்சுடரேபோற்றி
சங்கைதீர்த்தருளுந்தெய்வச்சரவணபவனேபோற்றி.

பணிப்பறவருளுமுக்கட்பரஞ்சுடரொளியேபோற்றி
மிணிப்புறுகருணைவான்றேனெனக்கருள்புரிந்தோய்போற்றி
துனிப்பெரும்பவந்தீர்த்தென்னைச்சுகம்பெறவைத்தாய்போற்றி
தனிப்பெருந்தவமேபோற்றிசண்முகத்தரசேபோற்றி.

மணப்புதுமலரேதெய்வவான்சுவைக்கனியேபோற்றி
தணப்பறவடியர்க்கின்பந்தருமொருதருவேபோற்றி
கணப்பெருந்தலைவரேத்துங்கழற்பதத்தரசேபோற்றி
குணப்பெருங்குன்றேபோற்றிகுமரசற்குருவேபோற்றி.

தவம்பெறுமுனிவருள்ளத்தாமரையமர்ந்தோய்போற்றி
பவம்பெறுஞ்சிறியேன்றன்னைப்பாதுகாத்தளித்தோய்போற்றி
நவம்பெறுநிலைக்குமேலாநண்ணியநலமேபோற்றி
சிவம்பெறும்பயனேபோற்றிசெங்கதிர்வேலோய்போற்றி.

Never be in a hurry. Contentment will both clothe and feed.

மூவடிவாகிநின்றமுழுமுதற்பரமேபோற்றி
மாவடியமர்ந்தமுக்கண்மலைதருமணியேபோற்றி
சேவடிவழுத்துந்தொண்டர்சிறுமைதீர்த்தருள்வோய்போற்றி
தூவடிவேல்கைக்கொண்டசுந்தரவடிவேபோற்றி.

விண்ணுறுசுடரேயென்னுள்விளங்கியவிளக்கேபோற்றி
கண்ணுறுமணியேயென்னைக்கலந்தநற்களிப்பேபோற்றி
பண்ணுறுபயனேயென்னைப்பணிவித்தமணியேபோற்றி
யெண்ணுறுமடியார்தங்கட்கினியதெள்ளமுதேபோற்றி.

மறையெலாம்பரவநின்றமாணிக்கமலையேபோற்றி
சிறையெலாந்தவிர்ந்துவானோர்திருவுறச்செய்தோய்போற்றி
குறையெலாமறுத்தேயின்பங்கொடுத்தவெங்குருவேபோற்றி
துறையெலாம்விளங்குஞானச்சோதியேபோற்றிபோற்றி.

தாருகப்பதகன்றன்னைத்தடிந்தருள்செய்தோய்போற்றி
வேருகச்சூரமாவைவீட்டியவேலோய்போற்றி
யாருகச்சமயக்காட்டையழித்தவெங்கனலேபோற்றி
போருகத்தகரையூர்ந்தபுண்ணியமூர்த்திபோற்றி.

சிங்கமாமுகனைக்கொன்றதிறலுடைச்சிம்புள்போற்றி
துங்கவாரணத்தோன்கொண்டதுயர்தவிர்த்தளித்தோய்போற்றி
செங்கண்மான்மருகபோற்றிசிவபிரான்செல்வபோற்றி
யெங்களாரமுதேபோற்றியாவர்க்குமிறைவபோற்றி.

முத்தியின்முதல்வபோற்றிமூவிருமுகத்தபோற்றி
சத்திவேற்கரத்தபோற்றிசங்கரிபுதல்வபோற்றி
சித்திதந்தருளுந்தேவர்சிகாமணிபோற்றிபோற்றி
பத்தியின்விளைந்தவின்பப்பரம்பரபோற்றிபோற்றி.

தெருளுடையோர்க்குவாய்த்தசிவாநந்தத்தேன்போற்றி
பொருளுடைமறையோருள்ளம்புகுந்தபுண்ணியமேபோற்றி
மருளுடைமனத்தினேனைவாழ்வித்தவாழ்வேபோற்றி
யருளுடையரசேயெங்களறுமுகத்தமுதேபோற்றி.

பொய்யனேன்பிழைகளெல்லாம்பொறுத்திடல்வேண்டும்போற்றி
கையனேன்றன்னையின்னுங்காத்திடல்வேண்டும்போற்றி
மெய்யனேமெய்யருள்ளமேவியவிளைவேபோற்றி
யையனேயப்பனேயெம்மரசனேபோற்றிபோற்றி.

He who defends the weak, is a gentleman.

முருகநின்பாதம்போற்றிமுளரியங்கண்ணற்கன்பா
மருகநின்கழல்கள்போற்றிவானவர்முதல்வபோற்றி
பெருகருள்வாரிபோற்றிபெருங்குணப்பொருப்பேபோற்றி
தருகநின்கருணைபோற்றிசாமிநின்னடிகள்போற்றி.

கோதிலாக்குணத்தோய்போற்றிகுகேசநின்பாதம்போற்றி
தீதிலாச்சிந்தைமேவுசிவபரஞ்சோதிபோற்றி
போதினுன்முகனுங்காணாப்பூரணவடிவபோற்றி
யாதிநின்ருள்கள்போற்றியநாதிநின்னடிகள்போற்றி.

வேதமுங்கலைகள்யாவும்விளம்பியபுலவபோற்றி
நாதமுங்கடந்துநின்றநாதநின்கருணைபோற்றி
போதமும்பொருளுமாகும்புனிதநின்பாதம்போற்றி
யாதரமாகியென்னுளமர்ந்தவென்னரசேபோற்றி.

---

# ஆத்திசூடி.—Avvai Sayings.

ஆத்திசூடியமர்ந்ததேவனை
யேத்தி யேத்தித் தொழுவோ மியாமே.

அறஞ் செய விரும்பு—Desire to do charity.
ஆறுவது சினம்—Anger should be appeased.
இயல்வது கரவேல்—Refrain not to do what is feasible.
ஈவது விலக்கேல்—Never prevent a gift.
உடையது விளம்பேல்—Reveal not your possessions.
ஊக்கமது கைவிடேல்—Persevere unceasingly
எண்ணெழுத் திகழேல்—Neglect not Arithmetic and [Grammar.
ஏற்ப திகழ்ச்சி—Begging is baseful.
ஐய மிட்டுண்—Give alms before eating.
ஒப்புர வொழுகு—Behave with propriety.
ஓதுவ தொழியேல்—Cease not learning.
ஔவி யம்பேசேல்—Avoid enviousness.
அஃகஞ் சுருக்கேல்—Raise not price of grain selfishly.
கண்டொன்று சொல்லேல—Misrepresent no facts
ஙப்போல் வளை—Ever be flexile to all.
சனி நீராடு—Spring water bath is wholesome.
ஞயம் படவுரை—Speak with civility.

---

Accept the place the Divine providence has found for you.

இடம்பட வீடிடேல்—Construct only compact houses.
இணக்கமறிந் திணங்கு—Be friendly with worthy people.
தந்தை தாய்ப்பேண்—Honor thy parents.
நன்றி மறவேல்—Forget not a benefit.
பருவத்தே பயிர்செய்—Cultivate in due season.
மண் பறித் துண்ணேல்—Usurp not others land.
இயங்கித் திரியேல்—Do not loaf about.
இயல்பலாதன செயேல்—Err not from prescribed customs.
அரவ மாட்டேல்—Play not with snakes
இலவம் பஞ்சிற் றுயில்—Preferable to sleep on silk cotton.
வஞ்சகம் பேசேல்—Speak not deceitfully.
அழக லாதன செயேல்—Avoid doing mean acts.
இளமை யிற்கல்—Learn in thy infancy.
அறனை மறவேல்—Forget not charity.
அனந்த லாடேல்—Indulge not in morning sleep.
கடிவது மற—Avoid rebuking.
காப்பது விரதம்—Preserve penance.
கிழமைப்பட வாழ்—Live to be pecuniarily useful.
கீழ்மை யகற்று—Avoid lowness.
குணமது கைவிடேல்—Hold to what is good & useful.
கூடிப் பிரியேல்—Break not good friendship.
கெடுப்ப தொழி—Avoid injuring others.
கேள்வி முயல்—Be prompt in gaining information.
கைவினை கரவேல்—Conceal not art learnt.
கொள்ளை விரும்பேல்—Desire not plunder.
கோதாட் டொழி—Avoid vexacious games.
சக்கர நெறிநில்—Being loyal is essential.
சான்றோ ரினத்திரு—Associate with the wise.
சித்திரம் பேசேல்—Avoid romantic expressions.
சீர்மை மறவேல்—Never forget gracefulness.
சுளிக்கச் சொல்லேல்—Speak not offensive words.
சூது விரும்பேல்—Gambling is bad.
செய்வன திருந்தச்செய்—Be perfect in doing right things.
சேரிடமறிந்து சேர்—Associate only with befitting people
சையெனத் திரியேல்—Do not lead a contemptible life.
சொற் சோர்வு படேல்—Be steady in your words.
சோம்பித் திரியேல்—Don't be lazy.
தக்கோ னெனத் திரி—Behave yourself worthily.
தானமது விரும்பு—Be charitable to the deserving.

---

With patience and perseverance, anything could be gained.

திருமாலுக் கடிமை செய்—Serve God (Vishnu.)
தீவினை யகற்று—Refrain from doing evil.
துன்பத்திற் கிடங்கொடேல்—Give no room for affliction.
தூக்கி வினை செய்—Deliberate before you begin.
தெய்வ மிகழேல்—Avoid blasphemy. [country.
தேசத்தோ டொத்துவாழ்—Observe the custom of your
தையல் சொற் கேளேல்—Avoid listening female advice.
தொன்மை மறவேல்—Neglect not old friendship.
தோற்பன தொடரேல்—Never undertake what you will not
நன்மை கடைப்பிடி—Hold right principles firmly. [win.
நாடொப் பன செய்—Let your act be approvable.
நிலையிற் பிரியேல்—Be steady in your attitude.
நீர் விளை யாடேல்—Avoid swimming in deep waters.
நுண்மை நுகரேல்—Avoid dainties.
நூற் பல கல்—Indulge in studying instructive books.
நெற் பயிர் விளை—Grow paddy with perseverance.
நேர் பட வொழுகு—Be upright in your actions.
நைவினை நணுகேல்—Do not follow what is destructive.
நொய்ய வுரையேல்—Do not speak contemptuously.
நோய்க் கிடங் கொடேல்—Give no room for diseases.
பழிப்பன பகரேல்—Speak not to be despised.
பாம்பொடு பழகேல்—Mix not with venemous people.
பிழை படச் சொல்லேல்—Avoid being found fault with.
பீடு பெற நில்—Live to attain greatness.
புகழ்ந்தாரைப் போற்றி வாழ்—Help those who entreat you
பூமி திருத்தி யுண்—Till the ground and eat. [for it.
பெரியாரைத் துணைக் கொள்—Seek of the help the wise.
பேதைமை யகற்று—Avoid ignorance.
பையலோ டிணங்கேல்—Do not unite with youngsters.
பொருடனைப் போற்றி வாழ்—Keep your wealth with care.
போர்த் தொழில் புரியேல்—Shun war and strife.
மனந் தடு மாறேல்—Falter not in your mind.
மாற்றானுக் கிடங் கொடேல்—Defend your foe bravely.
மிகை படச் சொல்லேல்—Do not speak superfluously.
மீதூண் விரும்பேல்—Be not gluttonnous.
முனை முகத்து நில்லேல்—Stand not in the van.
மூர்க் கரோ டிணங்கேல்—Join not with stubborn persons.
மெல்லியாடோள் சேர்—Live with thy own wife.
மேன்மக்கள் சொற் கேள்—Act up to the advise of greatmen.
மைவிழியார் மனையகல்—Enter not the brothel.

---

Struggle to keep from all impurities.

மொழிவதற மொழி—Say what thou sayest rightly.
மோகத்தை முனி—Control your passion.
வல்லமை பேசேல்—Boast not of your own abilities.
வாதுமுற் கூறேல்—Do not begin a quarrel.
வித்தை விரும்பு—Be desirous to learn.
வீடுபெற நில்—Strive to attain salvation.
உத்தமனாயிரு—Try to be virtuous.
ஊருடன் கூடி வாழ்—Be social with your fellowmen.
வெட்டெனப் பேசேல்—Speak not harshly.
வேண்டிவினை செயேல்—Avoid deliberate evil doings.
வைகறைத் துயிலெழு—Rise early in the morning.
ஒன்னாரைச் சேரேல்—Never associate with enemies.
ஓரஞ் சொல்லேல்—Better to be impartial.

**Translated by Messrs :—**

A. Balasundara Mudaliar, *Sereshtadar, Collector's Office, Bangalore.*
and
V. T. Venugopaul Mudaliar, B. A.,
*for whose kindnesses the compiler is highly grateful.*

மதுரை சொக்கநாதரது அறுபத்துநாலு

# திருவிளையாடற் பயங்கரமாலை.

1. *இந்திரன்பழி தீர்த்தது.*

*ஏவிற்கிளைத்தவிருத்திரனுருயிர்பொன்றச்செய்து*
*மேவுறபாவத்தைமண்பெண்புனன்மரமேனிறுவிச்*
*சேவித்திடப்பொன்விமானமுன்சேர்த்தியதேவர்தங்கோன்*
*பாவத்தைதீர்த்தசொக்கேபரதேசிபயங்கரனே.*

2. *வெள்ளையானையின் சாபந்தீர்த்தது.*

*இந்திரன்கையிற்றருவாசனிட்டவெழின்மலரைச்*
*சிந்தவெண்சிந்துரந்தீங்கடைந்தேதென்மதுரையிலன்*
*புந்துறச்சென்றுபணிந்தேத்தநோக்கியுயர்பெருஞ்சா*
*பந்தனைத்தீர்த்தசொக்கேபரதேசிபயங்கரனே.*

After storm of adversity, God gives us the sunshine of joy.

3. திருநகரங் கண்டது.

கதியெனமேற்றிசைப்போமோர்வணிகன்முன்கண்டெவருந்
துதிகொணர்பாண்டியன்றன்பாலுரைக்கவத்தூமொழியை
மதியினிற்கொண்டவன்றன்னாற்கடம்பவனமதுரைப்
பதியெனக்கண்டசொக்கேபரதேசிபயங்கரனே.

4. தடாதகைபிராட்டி பிறந்தது.

சீராகவாழுமதுராபுரியிற்செழியர்குலப்
பேராமலசனுனைவேண்டித்தந்தருள்பிள்ளையென்ன
நேராகமூன்றுமுலையாளொருபெண்ணை நீதியுடன்
பாராளத்தந்தசொக்கேபரதேசிபயங்கரனே.

2. திருமணஞ்செய்தது.

தாண்டியவெண்பரிமீதேறிமன்னர்கடம்மைவென்று
மீண்டிடமூன்றுமுலையாளொருபெண்ணைமேவிநின்கண்
டீண்டியிரண்டுமுலையாண்மணஞ்செய்துதென்மதுரைப்
பாண்டியனானசொக்கேபரதேசிபயங்கரனே.

6. வெள்ளியம்பலத்தில் திருக்கூத்தாடியது.

விதம்பெறவேதென்மதுரையிலேமணவேள்வியிலற்
புதம்பெறவந்தமுனிவர்குழாத்தைப்புசியுமென்ன
இதம்பெறவேநடனத்தையீந்தருளென்னமுனிப்
பதஞ்சலிக்காடுஞ்சொக்கேபரதேசிபயங்கரனே.

7. குண்டோதரனுக்கன்னமிட்டது.

சுகியாரமுதன்னறுசுவைகூட்டித்துலங்குமன்னம
முகியாதளித்தவையெல்லாமுமுண்டுமுடிவிலதாற்
பசியாக்குறையையுமுண்டகுண்டோதரப்பூதமுண்ணப்
பசியாக்கிவைத்தசொக்கேபரதேசிபயங்கரனே.

8. அன்னக்குழியையும் வையையு மழைத்தது.

அருகிருக்குங்குழியன்னமெல்லாம்புசித்தாரியபின்
மருவுநற்கேணிகுள்முதலாயுண்டுவற்றியதாற்
பெருகுவையைப்புனல்வெள்ளமெல்லாம்பெரும்பூதமுண்ணப்
பருகிவித்திட்டசொக்கேபரதேசிபயங்கரனே.

9. எழுகடலழைத்தது.

பெரியாருனதுபிதாவின்றிவசம்பெருங்கடலைத்
தரியாதவனியின்மீதழைப்பாயென்றுசாற்றிடவே
முரியாரமுகிதடாதகையாரன்னைமூழ்கமுன்னீர்ப்
பரிவாயழைத்தசொக்கேபரதேசிபயங்கரனே.

---

Never slander people behind their back.

10. மலயத்துவசனை யழைத்தது.

வித்தாரமாகமதுராபுரியின்முந்நீரழைக்கக்
கத்தாவையன்றியதின்மூழ்கவந்திடுகாரணமென்
மைத்தார்குழலிதடாதகைத்தாய்க்குமலையத்துவசப்
பத்தாவைக்காட்டுஞ்சொக்கேபரதேசிபயங்கரனே.

11. உக்கிரபாண்டியனவதரித்தது.

தடாதகையார்தென்மதுராபுரியிற்றவழுமன்பும்
விடாவகையாலுக்கிரனும்புதல்வனைமேதினியோர்
அடாவகையன்றியரசாள்வதாகவழகிற்குறை
படாவகையீந்தசொக்கேபரதேசிபயங்கரனே.

12. உக்கிரகுமாரனுக்கு வேல்வளை செண்டு கொடுத்தது.

தெரியலர்வந்துவணங்கித்திறையிடுஞ்சீர்மதுரைத்
தரிபெறவேணுமிளமைந்தனேதருநாட்டரசன்
கிரிகடலாம்பகைகிட்டிவளைசெண்டுசத்தியினாற்
பரிகரியென்றசொக்கேபரதேசிபயங்கரனே.

13. கடல்சுவற வேல்விட்டது.

செருவேறுமன்னருடன்புவிமீதிற்றிகழ்சனமு
மருவேதனையுடன்றீங்கடைந்தேயணிகூடல்கொள்ளப்
பெருவேலைவந்ததற்குக்குமாரன்பிடித்தெறிய
பருவேல்கொள்ளென்றசொக்கேபரதேசிபயங்கரனே.

14. இந்திரன்முடிமேல் வளையெறிந்தது.

மடலவிழ்சோலைமதுரைநன்னாட்டின்மழைபொழியத்
திடஞ்செயுங்காரைச்சிறைவைக்கநீசென்றிமையவர்கோ
னடல்செயும்பாண்டியனின்வளையாலவன்றன்முடிமேற்
படவெறிவித்தசொக்கேபரதேசிபயங்கரனே.

15. மேருவைச் செண்டாலடித்தது.

நான்மறையோரைவழுதியிகழநன்மாரியின்றி
மேலுயர்பூதலத்தெல்லோரும்வாடிமிடைந்திடவே
சேல்கொடிசென்றட்டுமேருப்பொன்கொண்டுதிகழ்மதுரைப்
பாலினுமானசொக்கேபரதேசிபயங்கரனே.

16. வேதத்துக்குப் பொருளளித்தது.

மரியாதமாமறைவாழ்வீரபாண்டியன்வாழுமந்நாள்
தெரியாமலந்தணரெல்லாந்திகைப்பத்தெளிந்திடவே
விரிவானவேதங்களெல்லாந்தெரிந்துவிளங்கமிக்கப்
பரிவாயுரைத்தசொக்கேபரதேசிபயங்கரனே.

Join not in filthy conversation.

## 17. மாணிக்கம் விற்றது.

சாத்திரமேன்மைதவறுமதுரைத்தலமதனில்
மாத்தநச்செல்வவணிகனைப்போல்வளர்மாமதிபின்
கோத்திரமன்னன்முடிசூட்டமாணிக்கங்குற்றமறப்
பாத்திபற்கீந்தசொக்கேபரதேசிபயங்கரனே.

## 18. வருணன்விட்டகடலை வற்றச்செய்தது.

மடலவிழ்பொய்கைவளஞ்சூழ்மதுரைவழுதியின்மேல்
அடல்கொண்டவிந்திரன்சொல்லால்வருணனந்நாளில்விட்ட
கடல்வந்தலைக்கத்தராபதிவாடுதல்கண்டுமுகிற்
படல்நான்குவிட்டசொக்கேபரதேசிபயங்கரனே.

## 19. நான்மாடக்கூடலானது.

மதியாலவருணன்மழையால்வருந்தியிம்மாநிலத்தோர்
கதியாருமில்லைசரணெனவேபுட்கலாபத்தினால்
நதியால்மதுரையைநான்மாடக்கூடனலஞ்சிறக்கப்
பதியாகப்பண்ணுஞ்சொக்கேபரதேசிபயங்கரனே.

## 20. எல்லாம்வல்லசித்தரானது.

செகம்புகழ்ந்தோதுமதுராபுரியிற்செகமறிய
அகந்தொறுநீசெய்தவாடல்கண்டேயழகார்வழுதி
இகழ்ந்திவராரென்னையாமேயெல்லாம்வல்லசித்தரென்று
பகர்ந்தருளெந்தசொக்கேபரதேசிபயங்கரனே.

## 21. கல்லானைக்குக் கரும்பருத்தியது.

நீங்காதசெல்வமதுரைநன்னாட்டினிரைபுவியைத்
தாங்காதவிற்றிருத்தோளினிற்சாத்துந்தகைவழுதி
ஈங்கார்கல்லானையருந்தக்கரும்பினையீவையெனப்
பாங்காகவாங்குஞ்சொக்கேபரதேசிபயங்கரனே.

## 22. யானையெய்தது.

வகையானதொன்மையறியாமறுமண்டலத்துமன்னன்
தொகையாகவாழும்வழுதிதன்மேல்விட்டசூட்சியினான்
மிகையாளவேந்தையுங்கூடற்பதியும்விழுங்கவந்த
பகையானையெய்துசொக்கேபரதேசிபயங்கரனே.

## 23. விருத்த குமார பாலரானது.

சேலிகல்கூடற்புறத்தேமறையவன்செல்வமின்னை
மால்நெறிநின்றமறையோன்மணஞ்செயமாமியெனும்
நீலித்துரத்தவிருத்தகுமாரனும்பாலனுங்
பால்மொழிக்கானசொக்கேபரதேசிபயங்கரனே.

---

24. மாறியாடினது.

விதமானவெண்ணெண்கலைவல்லவகூடலின்மீனவனற்
புதமாம்பதத்தினருமைகண்டேபொற்பதம்வருந்த
இதமாய்நடிக்கின்றதெத்தனைகாலமெனவிரங்கப்
பதமாறியாடுஞ்சொக்கேபரதேசிபயங்கரனே.

25. பழியஞ்சினது.

செழியன்றமிழ்வளர்கூடலிற்பூசுரன்றேவிவந்தே
அழியுமிடத்தினிலம்மறையோனொருவேடன்கொன்றான்
மொழியும்பரிசுதெளியாதவேந்தன்முன்னோறியப்
பழியஞ்சிக்காட்டுஞ்சொக்கேபரதேசிபயங்கரனே.

26. மாபாதகந் தீர்த்தது.

தோதகவாசகமாமதுராபுரிசூழ்பதியிற்
பேதகமானமறையோன்புதல்வன்பிதாவைக்கொன்று
தீதகந்தன்னிலுஞ்செய்யாதசெய்தவைதீரவொண்ணாப்
பாதகந்தீர்த்தசொக்கேபரதேசிபயங்கரனே.

27. அங்கம் வெட்டினது.

புடவிக்குள்வீறுமதுராபுரியிற்புகழ்பணிக்கன்
இடமுற்றமைந்தரிற்சித்தனென்போன்செய்ததீமையினாற
கடகொட்டிவாளிட்டெதிரிட்டவன்றனைக்கண்டதுண்டம்
படவெட்டிவிட்டசொக்கேபரதேசிபயங்கரனே.

28. நாக மெய்தது.

தென்னாட்டையாளுமனந்தகுணத்துச்செழியன்றன்
இன்னாதவெந்தொழிலெண்ணிப்பிரவருமிங்கழலை
முன்னாகமூட்டிமதுரைநன்னாட்டைமுடிக்கவிட்ட
பன்னாகமெய்தசொக்கேபரதேசிபயங்கரனே.

29. மாயப்பசுவை வதைத்தது.

அசைவருங்கூடற்பதிவருங்கோவையடர்துமென்ன
வசைமலிகுண்டர்வெகுண்டேபினும்மகமாற்றியந்த
இசைக்கிரிற்பொலிகுடிகளெல்லாமிறவன்றும்விட்ட
பசுவையுங்கொன்றசொக்கேபரதேசிபயங்கரனே.

30. மெய்க்காட்டிட்டது.

விண்ணாடர்போற்றுமதுரைதன்மேன்மறுவேடன்வரத்
தண்ணாறுமந்திரிச்சாமந்தனார்செய்ததன்மைகண்டே
எண்ணாப்பெரும்படைமெய்க்காட்டிட்டுமெழில்பெற்றுநின்
பண்ணார்கதியருள்சொக்கேபரதேசிபயங்கரனே.

31. உலவாக்கிழி யருளியது.

கோத்திரமன்னன்மறையோரினுண்மைகொள்ளாததினாற்
சாத்திரவேள்விதனைமறந்தேமழைதாழ்த்திடவே
காத்தருளென்னமதுரையிலேசுனகக்கிழியைப்
பாத்திபற்கீந்தசொக்கேசபரதேசிபயங்கரனே.

32. வளையல் விற்றது.

நிகரற்றதாருகாவனமடவார்நின்மதுரைதன்னிற்
றகவுற்றசெட்டிப்புதல்விகளாகிச்சமைந்தவந்நாள்
மிகவுற்றநல்வளைகொள்ளுமென்றேயவர்வீதிதொறும்
பகர்செட்டியானசொக்கேசபரதேசிபயங்கரனே.

33. அட்டமாசித்தி யுபதேசித்தது.

நலங்கிளர்வெள்ளிப்பொருப்பினின்மூவிருநாரியர்க்குத்
துலங்குபதேசந்தெரியாமற்சாபிக்கத்தொன்மதுரை
இலங்கியசாரலிற்கல்லாகிமாற்றிநற்சித்தியெட்டும்
பலந்தரச்செய்தசொக்கேசபரதேசிபயங்கரனே.

34. விடை யிலச்சினை யிட்டது.

ஓங்கியகூடற்பதிவந்தசெம்பியனூர்செல்லவே
ஆங்கொருவாசலிலச்சினைவாங்கியறையிருளில்
ஈங்கொருவாசல்விளையாடற்காணிடபக்குறியைப்
பாங்குடனிட்டசொக்கேசபரதேசிபயங்கரனே.

35. தண்ணீர்ப்பந்தல் வைத்தது.

முந்திப்பரிதிகுலத்தோருமன்னர்முதிர்படையால்
வந்திடக்கண்டுமதுரையர்கோன்செய்யும்வாறதென்ன
தந்திரத்தாலவன்றன்றேற்கவெல்லுவையென்றுதண்ணீர்ப்
பந்தல்வைத்திட்டசொக்கேசபரதேசிபயங்கரனே.

36. இரசவாதஞ் செய்தது.

மணிதிகழ்மாடமலிமதுராபுரிவாழ்சித்தராய்த்
துணிவுடனின்னன்புகேட்டணைந்தோமென்றுசொல்லியபின்
அணிதிகழ்பூவணைப்பொன்னனையாட்கருளாணிப்பொன்னைப்
பணிவிடைக்கீந்தசொக்கேசபரதேசிபயங்கரனே.

37. சோழனை மடுவில் வீட்டியது.

வேதாவணங்குமதுராபுரியில்வெகுண்டுபோரத்
தீதாகவந்தனிற்போர்செய்யவேண்டிச்செழியனுக்காய்
ஆதாரமாய்ச்சென்றமராடிக்கிள்ளியையாழ்மடுவிற்
பாதாளத்திட்டசொக்கேசபரதேசிபயங்கரனே.

38. உலவாக்கோட்டை யளித்தது.

பெருங்கோடைலாவும்வயல்சூழ்மதுரைப்பெரும்புவியின்
மருங்கோடுவாழ்கின்றகுத்திரவாதியென்மாதவர்க்காய்
இருங்கோடிலாதவாழுதிட்டிளைத்தனையென்றுநெல்லின
பருங்கோட்டையீந்தசொக்கேபரதேசிபயங்கரனே.

39. மாமனாகவந்து வழக்குரைத்தது.

எண்பார்மதுரைவணிகன்புதல்வனில்லாமையினால்
நண்பாமருகன்மகவாகினைத்துநடந்தபின்பு
மண்பரணிகைக்கொள்ளமாமனைப்போல்வழக்காடச்செட்டிப்
பண்பாகவந்தசொக்கேபரதேசிபயங்கரனே.

40. வரகுணனுக்குச் சிவலோகங் காட்டியது.

வரகுணபாண்டியன்பிர்மத்தியால்வந்துயிர்வருந்தத்
திரமுடனேயிடைமாமருதூரிற்றெளியச்செய்தே
உரகமுன்சூழ்ந்தமதுரையிலேயவனூரறியப்
பரவுலகீந்தசொக்கேபரதேசிபயங்கரனே.

41. விறகு விற்றது.

புயல்வளர்சோலைமதுரைநன்னாட்டிற்புகழ்பணிக்கன்
இயலிசைவல்லனெனவரவேமிசைப்பாணனுக்காய்
வியனுறவேழிசைச்சாதாரிபாடவிறகுதலை
பயனுறவந்தசொக்கேபரதேசிபயங்கரனே.

42. திருமுகங் கொடுத்தது.

வேடிக்கையாகமதுராபுரியினின்மேன்மையெல்லாம்
நாடிப்புகழுமியாழ்ப்பாணபத்திரனல்லிசைக்காய்த்
தேடிக்கொடுத்தபொன்போதாமற்சேரற்குச்சீட்டுக்கவி
பாடிக்கொடுத்தசொக்கேபரதேசிபயங்கரனே.

43. பலகையிட்டது.

முத்தமிழோர்தென்மதுராபுரியின்முப்போதுமல்லால்
வெத்துயராமத்துப்பாடப்பொன்மாரிக்குவேண்டியதோர்
சித்திரமாம்போற்பலகையைச்செவ்வியபாணனென்னும்
பத்திரற்கீயுஞ்சொக்கேபரதேசிபயங்கரனே.

44. இசைவாது வென்றது.

முடிவொன்றிலாதமதுராபுரிமன்னன்முத்தமிழ்நூல்
குடிகொண்டவெற்றிவிறலிதன்னோடிசைகூறுமென்ன
வடிவங்கொள்பத்திரனின்மனையாளிசைவாதுவெல்லும்
படிவந்துதவுஞ்சொக்கேபரதேசிபயங்கரனே.

45. பன்றிக்குட்டிக்கு முலைகொடுத்தது.

கொள்கூடலில்வேளாளர்செய்ததும் துவர
வன்றிறன்மாமுனிசாபத்துக்கேற்கவடிவுறத்தாய்
சென்றிடக்குட்டியின்றாய்போற்பரிந்துசெழு முலைபாற்
பன்றியுமானசொக்கேபரதேசிபயங்கரனே.

46. பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கியது.

நீலக்கரும்பன்றிக்குட்டிமுன்னான்குநின்பாலருந்திக்
கோலத்துடன்மந்த்ரிகோலமதாகத்தென்கூடலிலே
சீலத்தவர்புகழ்வேளாளர்கோத்திரத்திற்செனிக்கப்
பாலர்க்களித்தசொக்கேபரதேசிபயங்கரனே.

47. கரிக்குருவிக் குபதேசித்தது.

சுத்தித்துறக்கும்வெங்காகத்திறைற்கயவாய்க்குருவி
முத்தித்தலமிம்மதுரையென்றேநின்முறையிடவே
மித்திஞ்சயத்தினையாரருளால்வியன்வன்குருவிப்
பத்திக்கருளுஞ்சொக்கேபரதேசிபயங்கரனே

48. நாரைக்கு முத்திகொடுத்தது.

சுத்திக்கழனிதொறுமீனருந்துஞ்செங்கானரையான்
முத்திக்குரியபெரியோரைச்சார்ந்துமுகிழ்த்ததினால்
எத்திக்குமேய்ந்துமதுராபுரியில்வந்தேத்தியபின்
பத்திக்கருளுஞ்சொக்கேபரதேசிபயங்கரனே.

49. திருவாலவாயானது.

ஆம்பாரனைத்துமலைதொத்திநீங்குமன்னுளினின்னை
வேம்பார்தொடைப்புயனித்தலத்தெல்லைவிளம்பெனவே
தேம்பாதசெல்வத்திருவாலவாயெனச்சீருடைத்தாய்ப்
பாம்பால்வளைத்தசொக்கேபரதேசிபயங்கரனே.

50. சுந்தரப்பேரம் பெய்தது.

மல்படுதிண்புயன்வங்கியசேகரன்மதுரையின்வாய்
வில்வலிவிக்கிரமச்சோழன்படையொடுமீண்டமரச்
சொல்படுநின்னைநின்றேத்தவவற்குநற்சுந்தரப்பேர்ப்
பல்கணைதொட்டசொக்கேபரதேசிபயங்கரனே.

51. சங்கப்பலகை கொடுத்தது.

உலகமகிழ்வெய்தமுன்னாட்புலவருடனிருக்க
இலகுகவியையளித்தருள்வாயென்றெதிர்புகழும்
புலவர்மதுரையிலேழேழுபேரும்பொருந்தச்சங்கப்
பலகைகொடுத்தசொக்கேபரதேசிபயங்கரனே.

---

Never be afraid to tell the truth, cost it what it may.

52. தருமிக்குப்பொற்கிழி யளித்தது.

மாப்பாடலஞ்செறிமாமதுராபுரிவாழ்வழுதி
காப்பாய்நினைந்தபடிகவிபாடிக்கனகத்திறைற
கோப்பாகக்கட்டுங்கிழியையறுத்துக்குலதிலகப்
பார்ப்பானுக்கீந்தசொக்கேபரதேசிபயங்கரனே.

53. கீரனைக் கரையேற்றியது.

உயர்ந்தநற்கூடல்வருந்திமுன்னேபுன்னுடனெதிர்க்க
வியர்ந்திடநன்னுதற்கண்ணழற்காட்டமிகவஞ்சியே
கயந்தனில்வீழநக்கீரனையேகரையேற்றியபின்
பயந்தனைத்தீர்த்தசொக்கேபரதேசிபயங்கரனே.

54. கீரனுக்கு இலக்கண முபதேசித்தது.

எண்ணுந்தமிழின்பெருமைபின்நாட்டிவிசைந்திடவும்
மண்ணின்றஞானநக்கீரர்க்குண்டாகவுமாமலயம்
நண்ணுங்குறுமுனிவர்க்குபதேசநற்கூடலிலே
பண்ணுந்தமிழைச்சொக்கேபரதேசிபயங்கரனே.

55. சங்கத்தார் கலகந்தீர்த்தது.

எழிறிகழ்கூடலினின்வாசகப்பொருளின்பயனை
வழிபடுசங்கத்தவர்மொழிவாயென்றுவந்துநிற்க
ஒழிதிகடான்செல்வனுப்பூர்கிழான்மைந்தனூமையினற்
பழுதில்லையென்னுஞ்சொக்கேபரதேசிபயங்கரனே.

56. இடைக்காடன் பிணக்குத் தீர்த்தது.

திருந்தியசெல்வமதுரைச்செழியன்முன்சென்றடியேன்
அருந்தமிழ்பாடினன்கேட்டானிலையென்றவன்சொலவே
கரும்பெனச்சொல்லியுடன்வடபாலிடைக்காடனுக்காப்
பரிந்துபின்போனசொக்கேபரதேசிபயங்கரனே.

57. வலை வீசினது.

இருமீன்பிடிக்கவலைப்பிள்ளையாயெழின்மாமதுரைப்
பொருமீன்கணுளைத்தரவேண்டுமென்னப்பொருந்தியபின்
வருமீனருந்திக்கடலேழுழக்கியமாமகரப்
பருமீன்பிடித்தசொக்கேபரதேசிபயங்கரனே.

58. வாதவூரடிகளுக் குபதேசித்தது.

ஞாலத்தர்போற்றுமதுராபுரிமன்னன்பொருளைக்
கோலிப்பெரும்பரிகொள்ளப்பொருந்துறைகூட்டியப்போ
தாவித்தஞானவுபதேசம்வாதவூரருக்கன்பாய்
பாலித்தருளுஞ்சொக்கேபரதேசிபயங்கரனே.

It is better to slip with the foot than with

59. நரி பரியாக்கியது.

அரியார்க்குஞ்சோலைமதுரையின்மன்னனடற்பரிக்காய்
எரியாதகோபத்துடன்வாதவூரர்க்கிடுக்கணுரைத்
தரியாத்திருவுளத்தாலேநரிதனைத்தாரணியிற்
பரியாக்கிவைத்தசொக்கேபரதேசிபயங்கரனே.

60. பரி நரியாக்கியது.

வரிபயின்மீனத்துவசன்முன்னேநின்றதுமாறுன்னில
விரிவுறச்சென்றுவெளிதனிற்காண்பித்துமேன்மையுடன்
நெருநலின்முன்றந்தபொன்னுக்கெல்லாமவிலைநேரிட்டபின்
பரிநரியாக்குஞ்சொக்கேபரதேசிபயங்கரனே.

61. மண் சுமந்தது.

ஆடல்வந்தமாகப்பரிக்குநரியிட்டவமைச்சனுக்குக்
கடல்வந்தவெள்ளமழைப்பிக்கத்தென்கரைகட்டுதற்காச்
சுடவந்தபிட்டுக்குக்கூடையினான்மண்சுமந்தடியும்
படவந்திருந்தசொக்கேபரதேசிபயங்கரனே.

62. பாண்டியன் சுரந்தீர்த்தது.

வந்தித்தவர்கண்மனத்துயர்தீர்க்குமதுரையென்றே
சிந்தித்துயர்கதிசேராமற்றீநெறிசேர்ந்துபொல்லா
நிந்திச்சமணனும்வழுதிவெப்புங்கெடநீறதனைப்
பந்திக்கவீந்தசொக்கேபரதேசிபயங்கரனே.

63. சமணரைக் கழுவேற்றியது.

இதத்தச்செழுந்தமிழ்த்தென்கூடன்மன்னன்முன்னேடெழுதி
வித்துடன்சம்பந்தர்வெண்ணீறுபோற்றிடவெற்றிகண்டே
மதத்தபொல்லாச்சமணெண்ணாயிரவரைவன்கழுவிற்
பதைத்திடவேற்றுஞ்சொக்கேபரதேசிபயங்கரனே.

64. வன்னியுங் கிணறும் இலிங்கமு மழைத்தது.

கதிசேர்வணிகன்விடத்தாலுயிர்விடக்கன்னியர்க்கா
விதிசேர்சம்பந்தரெழுப்பியநாளினில்வீறுசொல்ல
நிதிசேர்நிரம்பியகூவமிறைவன்னிநன்மதுரைப்
பதிசேரச்செய்யுஞ்சொக்கேபரதேசிபயங்கரனே.

பயங்கரமாலை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

Never despair, but trust in God.

உ

வேல்முருகர் துணை.

# திருப்புகழ்.

## விநாயகர் துதி.

கைத்தல நிறைகனி யப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுக னடிபேணிக்-
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பகமெனவினை கடிதேகும ;
மத்தமு மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை-
மத்தள வயிறனை யுத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே ;
முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட வெழுதிய முதல்வோனே-
முப்புர மெரிசெய்த வச்சிவ னுறைரதம
அச்சது பொடிசெய்த அதிதீரா ;
அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை யிபமாகி-
அக்குற மகளுட னச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

## விநாயகமலை.

சரவணசாதா நமோநம கருணையதீதா நமோநம
சததள பாதா நமோநம அபிராம-
தருணகதீரா நமோநம நிருபமர்வீரா நமோநம
சமதள வூரா நமோநம சகதீச ;
பரமசொரூபா நமோநம சுரர்பதிபூபா நமோநம
பரிமள நீபா நமோநம உமைகாளி-
பகவதிபாலா நமோநம விகபரமூலா நமோநம
பவுருஷ சீலா நமோநம அருடாராய் ;
இரவியு மாகாச பூமியும் விரவிய தூளேற வாணவ
ரெவர்களு மீடேற வேழ்கடல் முறையோவென்-

றிடர்பட மாமேரு பூதர மிடிபட வேதா ணிசாசர
    ரிகல்கெட மாவேக நீடயில் விடுவோனே ;

மரகத வாகார னாயனுமிரணிய வாகார வேதனும்
    வசுவெனு மாகார வீசனு மடிபேண-

மயிலுறை வாழ்வே விநாயக மலையுறை வேலாமகீதர
    வனசர ராதார மாகிய பெருமாளே.

---

ஸ்ரீ கந்தவேள் ஆறு படைவீடு.

## (I) திருப்பரங்குன்றம்.

வடத்தை மிஞ்சிய புளகித வனமுலை
    தனைத் திறந்தெதிர் வருமிளைஞர் களுயிர்
    மயக்கி யைங்கணை மதனனை யொருவரு மையினாலே-

வருத்தி வஞ்சக நினைவொடு மெலமெல
    நகைத்து நண்பொடு வருமிரு மெனவுரை
    வழுத்தியங் கவரொடு சருவியுமுடல் தொடுபோதே ;

விடத்தை வென்றிடு படைவிழி கொடுமுள
    மருட்டி வண்பொருள் கவர்பொழு தினில்மயல்
    விருப்பெனும்படி மடிமிசை யினில்விழு தொழிலதானே-

விளைத்திடும்பல கணிகையர் தமதுபொய்
    மனத்தை நம்பிய சிறியனை வெறியனை
    விரைப்பதந்தனி லருள்பெற நினைகுவ துளதோதான் ;

குடத்தை வென்றிரு கிரியென வெழில்தள
    தனத்த கொங்கைகள் மணிவட மணிசிறு
    குறக்கரும்பின் மெய்துவள் புயனெனவரு . வடிவேலா-

குரைக் கருங்கடல் திருவணை யெனமுன
    மடைத் திலங்கையி னதிபதி நிசிசரர்
    குலத்தொடும்பட வொருகணை விடுமரி மருகோனே ;

திடத் தெதிர்ந்திடு மசுரர்கள் பொடிபட
    வயிற் கொடும்படை விடுசர வணபவ
    திறற்குகன் குருபரனென வருமொரு முருகோனே-

செழித்த தண்டலை தொறுமில கியகுட
    வளைக் குலந்தரு தரளமு மிகுமுயர்
    திருப்பரங்கிரி வளநகர் மருவிய பெருமாளே.

---

## (2). திருச்செந்தூர்.

பரிமள களபசு கந்தச் சந்தத் தனமானார்-
படையம படையென வந்திக்குங்கட் கடையாலே ;
வரியளி நிரைமுரல் கொங்குக் கங்குற் குழலாலே-
மறுகிடு மருளனை யின்புற் றன்புற் றருள்வாயே ;
அரிதிரு மருகக டம்பத் தொங்கற் றிருமார்பா-
அலைகுமு குமுவென வெம்பக் கண்டித் தெறிவேலா ;
திரிபுர தகனரும் வந்திக் குஞ்சற் குருநாதா-
ஜெயஜெய ஹரஹர செந்திற் கந்தப் பெருமாளே.

---

தொந்திசரிய மயிரே வெளிற நிரை
தந்தமசைய முதுகே வளைய விதழ்
தொங்க வொருகை தடிமேல் வரமகளிர் நகையாடி-
தொண்டு கிழவனிவ னாரென விருமல்
கிண்கிணென்மு னுரையே குழறிவிழி
துஞ்சு குருடுபடவே செவிடுபடு செவியாகி ;
வந்தபிணியு மதிலே மிடையு மொரு
பண்டி தனுமெ யுறுவே தனையுமிள
மைந்த ருடைமை கடனே தெனமுடிக துயர்மேவி-
மங்கை யழுது விழவே யமபடர்கள்
நின்றுசருவ மலமே யொழுக வுயிர்
மங்குபொழுது கடிதே மயிலின்மிசை வரவேணும்.
எந்தை வருக ரகுநாயக வருக
மைந்த வருக மகனேவருக யினிவருக
வென்கண் வருக வெனதாருயிர் வருக அபிராம
இங்கு வருக வரசே வருகமுலை
யுண்கவருக மலர் சூடிட வருக
வென்று பரிவினொடு கோசலை புகல வருமாயன்
சிந்தை மகிழு மருகா குறவரிள
வஞ்சி மருவு மழகா வமரர்சிறை
சிந்த வசுரர்கிளை வேரோடுமடிய அடுதீரா-
திங்க ளரவு நதிசூடிய பரமர்
தந்தகுமர வலையே கரைபொருத
செந்திநகரி லினிதே மருவிவளர் பெருமாளே.

There is no place like home if it is tidy.

## (3) பழநி.

நாத விந்துக லாதி நமோநம
வேத மந்த்ர சொரூபா நமோநம
ஞான பண்டித சுவாமீ நமோநம வெகுகோடி-
நாம சம்புகு மாரா நமோநம
போக வந்தரி பாலா நமோநம
நாகபந்தம யூரா நமோநம பரசூரர்;
சேத தண்டவி நோதா நமோநம
கீதகிண்கிணி பாதா நமோநம
தீரசம்ப்ரம வீரா நமோநம கிரிராஜ-
தீப மங்கள சோதி நமோநம
தூய வம்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம அருள்தாராய்;
ஈதலும் பலகோ லால பூசையும்
ஓதலுங் குண வாசார நீதியும்
ஈரமுங் குருசீர் பாத சேவையு மறவாத-
ஏழ்தலம் புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதே மனோகர
ராஜ கெம்பிர நாடாளு நாயக வயலூரா;
ஆதரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முனாளினி
லாடல்வெம் பரிமீதேறி மாகயிலை யிலேகி-
ஆதியந்த வுலா வாசு பாடிய
சேரர் கொங்கு வைகாவூர் நனாடதி
லாவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே (க)

---

பனாதனை மலமறந்து மதலையென வேதவழ்ந்து
அழகுபெற வேநடந் திளையோனாய்-
அருமழலை யேமிகுந்து குதலைமொழி யேபுகன்
றதிவிதமாய் வளர்ந்து பதினாறாய்;
சிவகலைக ளாகமங்கள் மிகவுமறை யோதுமன்பர்
திருவடிகளே நினைந்து துதியாமல்
தெரிவையர்க ளாசைமிஞ்சி வெகுகவலையா யுழன்று
திரியுமடி யேனையுன்ற னடிசேராய்;

---

மவுனவுப தேசசம்பு மதியறகு வேணிதும்பை
மணிமுடியின் மீதணிந்த மகதேவர்-
மணமகிழ வேயணைந்து வொருபுறம தாகவந்த
மலைமகள் குமார துங்க வடிவேலா ;
பவனிவர வேயுகந்து மயிலின்மிசை யேதிகழ்ந்து
படியதிர வேநடந்த கழல்வீரா
பரமபத மேசெறிந்த முருகனெனவே யுகந்து
பழநிமலை மேலமர்ந்த பெருமாளே.

## (4) திருவேரகம்.

மலடிவயிற்று மகன்போலே யொரு
புலையர் லெடுத்த தனம்போலே யொளிர்
வயிரமடுத்த கனம்போலே யிள முலைமானார்-
வலியவணைத்த சுகம்போலே கதி
ரொளிவிடுரத்ந வடம்போலே பரி
மணமிகு புட்ப வனம்போலே சுர நதிபோலே
அலைகடல் பெற்றிடு பெண்போலே யொரு
புலவர் தமக்கிரு கண்போலே கரை
யருகி லடுத்த சலம்போலே யுண தழகாமோர்-
அமுதுபுசித்த ரசம்போலே திரை
கடன்மடை விட்ட சலம்போலே தின
மதிசயமுத்தமி ழன்பாலோ தநின் னருடாராய்
கலக லெனச்சொல் சிலம்பா சீர்பெறு
மலைமகள் பெற்ற குழந்தாய் மாமத
கரிமுகனுக் கொரு தம்பி கானவர் மகளாமோர்-
கடிமலர் மொய்த்த சுரும்பே ஞானிகள்
மனதுரு சித்த கரும்பே வானவர்
கவலை தணித்தரு ளன்பே மாயவன் மருகோனே
குலிசன் மகட்கொரு நண்பா வேழிலை
யளிகள் சுவைத்த கடம்பா போய்வரு
குரைகடலுக்கொரு சம்பா ஞய்வரு வடிவேலா-
கொடிய பிணிக்கு மருந்தே தாள்பணி
யமரர் தமக்கு விருந்தே தோகைகொள்
குருகு நடத்து துரங்கா வேரக முருகோனே. (க)

(இதன் தொடர்ச்சி 178-வது பக்கம் காண்க.)

Persistence is the key to success.

சிவமயம்.

செல்வம் :—சீர், கல்வி, இன்பம், ஐசுவரியம், பாக்கியம், சுவர்க்கம் எனப் பல பொருட் கிளவியாய் நிற்கும். அச்செல்வம் பொருட்செல்வம், கல்விச்செல்வம், அருட்செல்வம் என மூவகைப்படும். அவற்றுள் முதற் கண்ணதாயுள்ள பொருட்செல்வமானது; மண், பொன், ஆதியனவாம். அவை இவ்வுலக இன்பத்திற் கின்றியமையாதன. உலகவின்பத்திற்கு முற்றும் அருகராயுள்ள மானிடரை மிக மேம்பாடுடையரென உயர்த் திக்கூறுவர். "அரிதரிது மானிடராய்ப் பிறத்தலரிது." என்றும், "எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதான் யாதினு மரிதரிதுகாண்." என்றும், "அண்டசஞ்சுவேதசங்களுற் பிசஞ்சராயுசத்தோ, டெண்டருநாலெண் பத்துநான்கு நூறாயிரத்தா, லுண்டுபல் யோனியெல்லா மொழித்து மானிடத்துதித்தல், கண்டிடிற்கடலைக் கையானீந்தினன் காரியங்காண்." என்றும், "மானிடப்பிறவிதானும் வகுத்தது மனவாக்காய மானிடத்தைந்து மாடுமரன் பணிக்காக வன்றோ, வானிடத்தவரு மண்மேல் வந்தரன் றனை யர்ச்சிப்ப, ரூனெடுத்துழலுமூம ரொன்றையு முணராரந்தோ." என்றும், மண்ணவராகிய மானிடர்கட்கு இகபரமுத்தி யென்னும் மூன்று பதங்களும், விண்ணவர்களாகிய தேவர்கட்குப் பரமுத்தியாகிய இரண்டு பதங்களும், பண்ணவர்களாகிய பாதளவாசிகட்கு இன்பமுத்தி யென்னும் ஒரு பதமும் சித்திக்கும் என்று தனியூர்ப் புராணங் கூறலானும் மானிடப்பிறவியானது விசேடித்ததெனக் கொள்ளக்கிடக்கின்றது. "மண்ணவர்க்கிகமும் பரமு மத்துவிதமுத்தியும் வயங்குகற்பகத்தார், விண்ணவர்க்கமையும் பரமுமுத்தியுமேல் விளம்பிய விரண்டுமெண்ணுதை, பண்ணவர்க்கின்பமுத்தியுமாயபடர்புழுகீச் சரத்தமர்ந்து, கண்ணவர்க்கினிய புரிதருவாதக் களிமதயானை பொற்பதமே." என்றும் சுவர்க்க, மத்திய, பாதளமென்னும் திரிலோகங்களுள்ளும் நல்வினைப்பயனாகிய இன்பத்தை மேலேயுள்ள சுவர்க்கலோகத்தினும் தீவினைப்பயனாகிய துன்பத்தைக் கீழேயுள்ள பாதள லோகத்திலும் சென்று அனுபவித்து அவ்வினை தொலைந்தவுடன்றே மீண்டும் பூமியில் வந்து தோன்றுதலுண்மையாதலானும் சுவர்க்கவாசிகளாகிய தேவர்களும் புவியில் வந்து இறைவனைப் பூசிப்பதுண்மையாதலானும் புவியே விசேடமுடைத்தென்றாயிற்று. ஆனதுபற்றி "உலகமென்பதுயர்ந்தோர்மாட்டே" என்பதற்கிணங்கப் புவியின்கண்ணுள்ள மானிடர்கள் மிகச்சிறந்தவர்களெனப்பெறப்படுகிறது. "அயன்படைத்திடு மண்டத்திற்காவியாய்ப், பயன்படைத்த பழம்பதியென்பரா, னயம்படைத்திடு நற்றொண்டைநாட்டினுள், வியன்படைத்து விளங்குமேற்பாடியே." என்னுந் திருவிருத்தத்தால் நன்கு விளங்குகின்றது. அதுநிற்க, மேற்கூறிய அருமையும் பெருமையும் வாய்ந்த மானிடராய்ப் பிறந்த யாவர்க்கும் பொருட்செல்வம் அத்தியாவசியகமென்றும், அவற்றைத் தேடிக்கொள்ளல் அவசியமென்றும் அப்படி யடையப்பெறுங்காலத்தில் அறத்தின் வழியாகவே சம்பாதிப்பது எண்ணிறந்த நன்மைகளைப் பயக்குமென்பது உண்மையேயாம். இக்கருத்துப் பற்றியே தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் "அறன் ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து, தீதின்றி வந்தபொருள்." என்று திருவாய்மலர்ந்தருளினார்கள். ஆகவே அறத்தையும் இன்பத்தையும் விரும்பிய ஒவ்வொருவரும் தருமவழியிலேயே அப்பொருட்செல்வத்தை யடைதல் வேண்டும் என்பது நன்கு புலப்படுகிறது. இவ்வுலக இன்பத்தைப் பெரும்பாலும் வேண்டிநிற்கும்

Riches fear not words.

இல்லறத்தார்க்கேயன்றி மறுமையின்பத்தை வேண்டிநிற்கும் துறவறத்தார்க்கும் பொருட்செல்வம் வேண்டுமென்னுங் கருத்துட்கொண்ட பரமாசிரிய துல்லியரான மணிவாசகப்பெருமானும் "முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியும்." என்றும் "வறியார் இருமை அறியார்" என்றும் திருக்கோவையாருள் அருளிச்செய்தார்கள். அத்தகைய பொருட்செல்வத்தின்பெருமை மிகச்சிறந்ததென ஸ்ரீ கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள் "பிறந்த நல்லுயிர்க்கெலாம் பெருமைநல்கிய விறந்தோர் பொருண்மைய திரண்டின் வன்மையு மறிந்தவர் தெரிவரேலரியகல்வியிற், சிறந்தது திருவெனச் செப்பலாகுமால்." என்றும் "அளப்பருங்கல்வியு மாக்கம்யாவையுங், கொளப்படு தன்மையிற் குறைவுறாதவை, வளர்த்தலின் மேதக வனப்புச்செய்தலிற், கிளத்திடின்மேலது கேடில் செல்வமே." என்றும் வியந்துகூறியுள்ளார்கள். இக்காரணம்பற்றியே மகாகவியாகிய கம்பர்—"பூரியர்தமைவேந்தாக்கும் புவிபுரக்குந் துய்க்கும், சீரியவுண்டிசேர்க்குந் தேவர்தம்முலகம்போக்கும், காரியமனைத்துங் கூட்டுங்கருதலர் தம்மைவாட்டுங், கூரியதிதன்மேலில்லை கொழும்பொனீர் கொண்மினென்றார்." எனவுங் கூறினார். திருத்தக்கதேவர் சீவகசிந்தாமணியில்—"வென்றியாக்கலுமேதகவாக்கலுங், குன்றினார்களைக் குன்றெனவாக்கலு, மன்றியுங்கல்வியோடழகாக்கலும், பொன்றுஞ்சாகததினாய் பொருள்செய்யுமே" என்றும், "பொன்னினாகும் பொருபடையப்படை தன்னினாகுந் தரணிதரணியிற், பின்னையாகும் பெரும்பொருளப்பொருள், துன்னுங்காலை துன்னாதனவில்லையே." என்றும் ஐம்பெருங்காப்பியங்களிலொன்றாகிய வளையாபதியில் "குலந்தருங்கல்விகொணர்ந்துமுடிக்கு, மலந்தகிளைகளழிபசிதீர்க்கு, நிலம்பகவெம்பிய நீள்சுரம்போகிப், புலம்பில்பொருடரப் புன்கண்மையுண்டோ." என்றும், தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் திருவாய்மலர்ந்தருளிய திருக்குறளில் "பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருளல்லதில்லை பொருள்." என்றும் இன்னும் அநேக பிரபலப் பிரமாணங்களினால் எடுத்துக்காட்டவல்லதூஉம், பெருந்துணையாயுள்ளதூஉமாகிய இப்பொருட்செல்வமில்லாவிடில் பலவிதமான இடையூறுந் துன்பமுமே விளையும் என்பது யாவர்க்கும் பிரத்தியட்சமேயாம். மிக்க கல்விகேள்விகளிற் சிறப்புடையரேனும் பொருட்செல்வமிலராயின் அவர் தம் வாய்மொழியொரு சிறிதும் எடுபடாதென்றும் மனைவி மக்களும் ஏற்றுக்கொள்ளாரென்பது உண்மையெனப் பொய்யாமொழிப்புலவராகிய நாயனார் "இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை, எல்லாருஞ் செய்வார் சிறப்பு" என்றும் பூலோக சரஸ்வதியாகிய ஔதாட்டியார்—"கல்லானே யானாலுங் கைப்பொருளொன்றுண்டாயின், எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை, இல்லாளும் வேண்டா ளீன்றெடுத்த தாய்வேண்டாள், செல்லாதவன் வாயிற்சொல்." என்றும், யாவற்றையுங் கருப்பத்திலடக்கிப் பிறர்க்கிடந்தராதுகாக்குந்தாயே வேண்டாளாயின் அப்பொருட்செல்வ மிருக்கவேண்டியது உத்தமமல்லவா? இப்பொருட்செல்வமாத்திரம் உண்டாகப்பெறின் அவரெப்படிப்பட்டவராயினும், அறிவிலராயினும் நன்கு மதிக்கப்படுவார்கள். "குணமிருந்தாலுங் குலமிருந்தாலுங் கொழுந்தமிழின், மணமிருந்தாலுமதியிருந்தாலும் வழுத்திடுவங், கணமிருந்தாலுமோர்காசும்பெறாது சிங்காரவரைப், பணமிருந்தாலவர்க்கெல்லாரு மஞ்சலிபண்ணுவரே." எனத்தனியன் கூறுதலானும் அத்தகைய பொருட்செல்வத்தை எத்தகைய இடையூறுகள் வரினும் பொருட்படுத்தாது "திரைகடலோடியுந் திரவியந்தேடு." என்பதற்கிணங்கப் பெருமுயற்சி செய்து தீவினையின் வருவாயை விட்டு நல்வழியில்

வரும் பொருட்செல்வத்தால் இம்மையின்பத்திற்கும், மறுமையின்பத்திற்கும் ஏதுவாகிய நல்லறங்களைச் செய்தல்வேண்டும். அங்ஙனஞ் செய்யாது "பாடுபட்டுத்தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக், கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங் காவிதான் போயினபின் யாரே யனுபவிப்பார், பாவிகா ளந்தப் பணம்." என்னும் இப்பாசுரத்திற்கு இலக்காக வாழ்நாளெல்லாம் வீணாளாகக் கழித்து வருந்திச் சம்பாதித்த பொருட்செல்வத்தைச் சேமித்து வைத்து இறந்துபோவோமாயின் நம்மிலும் அறியாமையுடையவர்கள் யாவருளர். இக்கருத்துப்பற்றியே தவராஜ சிங்கமாகிய பட்டினத்தடிகள் திருவாய்மலர்ந்தருளியவாறு " பிறக்கும்பொழுது கொடுவந்ததில்லை பிறந்து மண்மேல், இறக்கும்பொழுது கொடுபோவதில்லை யிடைநடுவிற். குறிக்குமிச் செல்வஞ் சிவன்றந்ததென்று கொடுக்கறியா, திறக்குங் குலாமருக் கென்சொல்வேன் கச்சியேகம்பனே" என்றும் பழிபாவத்திற்கஞ்சி யப்பொருட்செல்வத்தைக் காப்பாற்றி இல்லற தருமங்களைக் குறைவற அப்பொருட்செல்வத்திற் கேற்ப விதிவிலக்கின்படி செயற்பாலனவற்றிற் பெருக்கியும், அல்லாதனவற்றிற் சுருக்கியும் செலவிடுவதே இருமையின்பத்தைப் பயத்தலாகும் அதுதான் அறிவுடையார் கடமையாகும். அதனையொருபொருட்டாய் மதியாமல் வீண்செலவு செய்வாராயின் துன்பத்திற் கிடந்தருமென்பதிலையமில்லை. " ஆனமுதலி லதிகஞ் செலவானால். மானமழிந்து மதிகெட்டுப்—போனதிசை, எல்லார்க்குங் கள்ளனா யேழ்பிறப்புந் தீயனாய், நல்லார்க்கும் பொல்லானா நாடு." என ஔவையாரும், "இன்னறரும் பொருளை யீட்டுதலுந் துன்பமே பின்னை யதனைப் பேணுதலுந் துன்பமே—யன்ன, தழிந்தாலுந் துன்பமே யந்தோ பிறர்பால், இழிந்தாலுந் துன்பமேயாம்." எனக் கூறக்கிடக்கிறது. இத்தியாதிகாரணங்களால் மேம்பட்ட பொருட்செல்வம் நிலையாமை பற்றி யருவருக்கக்கூடியதென்பார். " புள்ளிய தோலாடை புனைந்தரவப் பூணணிந்த, வெள்ளிய செங்கண் விடையானடிக் கமலம், உள்ளியமெய்யன்பருவருத்துத் தள்ளியசெல்வத் தருக்கிறுமென் செய்தாய்." என்பது பெறப்படுகிறது அத்துடன் செல்வம் என்னும் பொருளானே "பல்கதிர்விரித்துத்தோன்றிப் பாடுசெய்கதிரேபோல, மல்லனீர்நிலைகிற்றேன்றி மறைந்திடுநும்மைவிட்டுச், செல்வமென்றுறுவதற்குச் செல்வமென்றுரைக்கும்பேர் நன்றல்லலை விளைப்பதாகா தரும்பெறற்செல்வம்பாவாய்." என்றுங் குசேலோபாக்கியானத்திலும் "ஈட்டியதேன் பூமணங்கண்டிரதமுங்கூட்டிக்கொணர்ந்தொரு கொம்பிடைவைத்திடு, மோட்டித்துரந்திட்டது வலியாக்கொளக, காட்டிககொடுத்தவை கைவிட்டவாறே." என்னுந் திருமந்திரத்தாலும், "ஈண்டலரிதாய்க் கெடுதலெளிதாகி, நாண்டல் சிறிதாய் நடுக்கம் பலதருஉம், மாண்பி னியற்கை மருவிலரும் பொருளை, வேண்டாதொழிந்தார் விறலோ விழுமிதோ." என்னும் வளையாபதியானும், "தீயாலோ நீராலோ தேர்வேந்தர் தம்மாலோ, மாயாததெவ்வர் வலியாலோ—யாதாலோ, விப்பொருள்போய் மாய்கின்றதென்றுபொருள், வைத்தார்க ளெப்பொழுது நீங்கா ரிடர்.' என்னும் பெருந்தேவனார் பாரதத்தானும் "வெறுத்துவாரியிலொருபொருள் வீழ்த்தினும் விரும்ப, மறுத்துவந்துதன் மருங்குறு மவற்குரித்தாயி, னிறுத்தொர் செப்பினுள் வைத்துறைநின்று தான்றனே, பொறுத்துக் காப்பினு மாய்ந்துபோம்போம் பொருண்மாதோ." என்னும் பாகவதத்தானும் "கூத்தாட்டவைக்குழாத் தற்றேபெருஞ்செல்வம், போக்குமது விளிந்தற்று." என்னுந் திருக்குறளானும், "துப்புறு பொருளினைத் தேடத் துன்பமாங், கைப்பொருளுண் டெனிற் கருத்துமோகமா, மப்

பொருளழிந் திடும் போதுமல்லா, மெப்பொழுதோம் பொருளின்ப மாதோ.' என்னும் சிவகுறுந் திரட்டானும், "திருமகணிலை மையுஞ் செல்வர்கேட்டி ரேன், மருவியு மணிதரை யிகந்து மற்றவள், பொருவறுபுகழினர் புதியகாமுறு, மொருவர்கண் ணுறவிலனுணர்ந்து கொண்மினே, புண்ணியமூலந் தபின்பொரு ளிலார்களைக்கு கண்ணிலாது றந்திடுங்கணிகைமார்கள்போ, லெண்ணிலளிகந் திடும்யாவர் தம்மையு, நண்ணியநண்பிலணங்கைவண்ணமே," என்னும் சூளா மணியானும், "முல்லை முகை சொரிந்தாற்போன் றினியபாலடிசின்மகளி ரேந்த, நல்ல கருணையாறுள்வாயும்பொறகலத்து நயந்துண்டார்க, ளல்ல லடையவடகிடுமிரேறட்டகத்தென் றயில்வார்க் கண்டுஞ், செல்வநமரங்கா ணினையன்மின்செய்தவமே நினைமின் கண்டீர்." என்னுஞ் சீவகசிந்தாமணி யிலும் கூறுதலால் நன்கு புலப்படுகிறது. ஆனதுபற்றித்தான் பொருட் செல்வத்தைவிடக்கல்விச்செல்வமானது மிகச்சிறப்புடைத்தென்பது முடிந்த முடிபேயாம். அதாவது கற்றக்குரிய நூல்களை நல்லாசிரியரை யடுத்துக் கேட்குமுறையானே வழிபட்டொழுகி வரன்முறையாகக் கேட்டாராய்ந்து ஐயந்திரிபறத்தெளிந்து அதன்வழி யொழுகலே சிறப்புடைத்தாம். கற்றற் குரிய நூல்களாவது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு புரு ஷார்த்தங்களை யுள்ளங்கை நெல்லிக்கனிபோ லெடுத்துக்காட்டி யுறுதிப் பொருள்களை யுணர்த்துவதே நன்னூல்களாகும். அதனைக் கற்றவர்கட்கு அக்கல்விச்செல்வமானது யாவற்றையும் பகுத்தறிவதற்கு ஏதுவாதலும், கொள்ளற்பாலனவற்றைக் கொள்ளுதலும், தள்ளற்பாலனவற்றைத் தள்ளு தலும் ஆகிய கருவியாய் நிற்குமெனப் பெறப்படுகிறது. "அறம் பொருள் ளின்பம் வீடும்பயக்கும், புறங்கடை நல்லிசையு நாட்டு--முறுங்கவலென், றுற் றுழியுங் கைகொடுக்குங் கல்வியினூங்கில்லைச் சிற்றுயிர்க்குற்றதுணை." எனக் குமரகுரு சுவாமிகள் கூறியவாற்றானுந் தெளியப்படும். இம்மைப்பயனைத் தருவதன்றி மறுமை வீடென்னும் மும்மையினும் இன்பம் பயத்திலினாலும் அவ்வவர் பிறவிதோறும் அழிவின்றி ஒருங்கே சேரலானும் கற்றவர் அரசருக் கும் மேம்பாடுடையவரென வியந்து கூறினர். "மன்னனு மாசறக் கற்றோ னுஞ் சீர்தூக்கின், மன்னனிற் கற்றோன் சிறப்புடையன், மன்னனுக்குத் தந் தேசமில்லாற் சிறப்பில்லை, கற்றோர்க்குச் சென்றவிட மெல்லாஞ் சிறப்பு." என அதிவீரராமபாண்டியர் கூறலானும் பிறர்க்குக் கொடுக்குந்தோறும் நாளுக்குநாள் ஓங்கிவளர்தலானும் பொருட்செல்வத்தைவிடக் கல்விச்செல் வம் மிகச் சிறந்ததெனப் புலப்படுகிறது. "கேடில்விழுச்செல்வங் கல்வி யொருவருக்கு மாடல்ல மற்றை யவை." எனவும். "செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வமச்செல்வம் செல்வத்து ளெல்லாந் தலை." எனவும் "ஒருமைக் கட்டான்கற்ற கல்வி யொருவற்கெழுமையுமேமாப் புடைத்து." எனவும் "யாதானு நாடாமா லூராமாலென்னொருவன் சாந்துணையுங் கல்லாத வாறு." எனவும் திருக்குறள் நன்கு புலப்படுத்துவதாலும் நன்கு விளங்கு கின்றது. அதுவுமன்றி "பொன்னணியும்வேந்தர்புனையாப் பெருங்கல்வி, மன்னுமறிஞரைதாமற்றெவ்வார்—மின்னுமணி, பூணும் பிறவுறுப்பும் பொன்னே யதுபுனையாக், காணுங் கண்ணேக்குமோ காண்." என நன்னெறி யில் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் கூறியவாற்றானும். மன்னரிலும் மேம்பட்டவர் கல்லுரெனப் பெறப்படுகிறது. ஆனதுபற்றித்தான் மற்றெ ல்லா அழகினுங் கல்வி யழகே மிக்கதென்பார். "குஞ்சியழகுங் கொடுந்தா னைக் கோட்டழகும், மஞ்சளழகு மழகல்ல—நெஞ்சத்து, நல்லம்யா மென்னு நடுவுநிலைமையாற், கல்வி யழகே யழகு." என நாலடியார் கூறலானும் கல்விச்

Learning is an ornament in prosperity.

செல்வமுடையவரே மேலானவராவார். "களர்நிலத்துப்பிறந்த வுப்பினைச் சான்றோர், விளைநிலத்து நெல்லினும் விழுமிதாக்கொள்வர், கடைநிலத்தோராயினுங் கற்றுணர்ந்தோரை, தலைநிலத்து வைக்கப்படும்" என நாலடியாரினும் "எக்குடி பிறப்பினும் யாவரேயாயினு மக்குடிக்கற்றோரை மேல்வருகவென்பார்." என நறுந்தொகையிலும் கற்றவர்கட்கே கண்ணென்றுங் கல்லாத மாந்தர்க்குப் புண்ணென்று கூறக்கிடக்கிறது. "கண்ணுடையரென்பவர் கற்றோர்முகத்திரண்டு புண்ணுடையர் கல்லாதவர்." என்னுந் திருக்குறளானும் உணர்வதாகும் பின்னுந் திருக்குற்றாலப் புராணத்துள் "இருவிழிகள்வாண்முகத்திலிருந்தாலும் வானிரவி யெழுந்தாலன்றி, கருதுநிலம்பல்பொருளுங் காண்டலரிதாமுலகிற் கண்போல் யாரும், பெருகியசெல்வமுமறிவும் பெற்றாலு நுண்கேள்வி பெறுவார்க்கன்றித், திருவளர்புண்ணியபாவமிம்மைமறுமையும் வீடுந்தெரியாவன்றே." எனக் கூறலானும் கல்லாதவர்களுருவம் பேய்த்தோற்றமென்றே கந்தபுராணத்துள் "திருமைகொள்வளனெடுதீதில்கல்வியா, மொருமையிலென்றினை யெய்திடாதெனி, னருமைகொளவ்வுயி ரதனிற்றற்றவும், பெருமையதுடையது பேயின்றோற்றமே." எனவுங்கூறும். அப்படிக் கல்லாதவர்கள் முகம் மயானத்தையொக்குமென உபதேசகாண்டத்துள் "கற்றிலாய் கலைகற்றுணரார் முக, முற்றுநோக்கின் மயானத்தையொக்குமால், பெற்றுளார் பெறும்பேறு தங்காதலர், சொற்றகல்வியிற் றூயரென்றோதலே." எனவும் கற்றவருக்கு எவ்வகையாற்றானும் யாதொரு துன்பமும் வாராதென்பது ஆன்றோர் துணிபேயாம். ஆனதுபற்றி விநாயபுராணத்துள் ஸ்ரீ சச்சியப்ப முனிவரவர்கள் "வறுமையான்மடமைதன்னால் வருந்திநெஞ்சழியுங்காலை, யுறுதிசெய்துணையாங் கற்ற வுணர்வினை வளர்க்குமென்று, மிறுதியில்லாத வின்பமீட்டுமாதலினாற்கற்று, மறுவறுவொழுக்கமுள்ளார் வாய்மொழிகேட்டல்வேண்டும்." எனக்கூறலானும் கற்றவர்கள் புகழுடம்போடு நிலைத்திருப்பார்களென ஸ்ரீ குமரகுருசுவாமிகள் நீதிநெறிவிளக்கத்துள் "கலைமகள்வாழ்க்கை முகத்ததெனினு மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய், வெற்றுடம்பு மாய்வனபோன் மாயா புகழ்கொண்டு, மற்றிவர்செய்யுமுடம்பு." என வியந்துரைத்தலானும் கற்றறிவுடையோர் சொல்லின் வனப்பே சாலப்பெரிதுடைத்தென ஏலாதிகூறும் "மயிர்வனப்புங் கண்கவருமார்பின் வனப்பு, முகிர்வனப்புங் காதின்வனப்பும்—செயிர்தீர்ந்த, பல்லின்வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த சொல்லின் வனப்பே வனப்பு." ஆகவே இக்கல்விச்செல்வத்தைச் சிறப்பு வகையாக நோக்குமிடத்து மோக்ஷத்திற்கும் மிக்க சாதனமாயுள்ளதேயாம். "கற்றல் கேட்டலுடையார் பெரியார்கழல் தொழுதேத்த." எனவும் "கல்லாநெஞ்சினில்லாவீசன்" எனவும் "கற்றிலேன் கலைகண்ஞானங் கற்றவர்தங்களோடு முற்றிலேனாதலாலே யுணர்விக்குஞ்சேயனானேன்." எனவும் "கல்லாதபுல்லறிவின் கடைப்பட்டநாயேனை." "கற்றவர்விழுங்குங் கற்பகக்கனியை மற்றவரறியாமாணிக்கமலையை." எனவும் மெஞ்ஞானிகளும் திருவாய்மலர்ந்தருளினார்கள். அதுவுமல்லாமல் திருமூலர் திருமந்திரத்தில் "நில்லாநிலையை நிலையாகநெஞ்சத்து, நில்லாக்குரம்பை நிலையென்றுணர்வீர்கா, ளெல்லாவுயிர்க்கு மிறைவனேயாயினுங், கல்லாதார்நெஞ்சத்துக் காணவொண்ணாதே." எனவும் அப்படிக்கற்று அதன்வழி நிற்றலே பெரிதுஞ் சிறப்பாமென்று திருக்குறளில் "கற்க கசடறக் கற்பவை கற்றபி னிற்க வதற்குத் தக." எனவும் அம்முறையானே கற்றநூல்களின் நுண்ணிய பொருளுணர வேண்டுமென்றும் அதன் பின்னரே சிவனடி நிழலை யெளிதிற் பெறலாகும். அதுபற்

றித்தான் கூர்ம புராணத்துள் "நூல்பலகற்றோனேனும் பொருணுணுத்தறி யானென்னின் மாலொடுவாளாகத்துமாநிறக்காகம்போல்வ னேலவுறக்கற்ற நூலின் பொருடெரிந்திருநூல்சொன்னசீலமே யொழுகுகின்றோன் சிவனடி நீழல் சேர்வான்." என்றும் கல்வி கற்றவர்களே தங்குல விளக்காகப் பிரகாசிப்பாரென • நான்மணிக்கடிகையில் "மனைக்குவிளக்குமடவாண்மடவா, டனக்குத்தகைசால்புதல்வர்—தனக்கினிய, காதற் புதல்வர்க்குக் கல்வியே கல்விதனக், கோதிற்புகழ்சா லுணர்வு." எனக்கூறலானும் இத்துணைப் பெருஞ்சிறப்பினைவாய்ந்த இக்கல்விச் செல்வத்தைப் பொதுவகையானே நோக்குமிடத்து பாஷையைக் குறித்துப் பேசவந்ததொக்கும். இனி இக்கல்விச் செல்வத்தை யுயர்வு சிறப்பாய் நோக்குமிடத்து மேம்பட்ட தமிழ்ப் பாஷையைச் சார்ந்து நிற்கும் தமிழ் என்றால் இனிமை, பண்பாகுபெயராய் பாஷைக்காயிற்று. "தமிழ்தழீ இயசாயலார்" என்றுஞ் சிந்தாமணி செய்யுட்கு நச்சினார்க்கினியர் இனிமை தழீஇயசாயலார் என்றார். தமிழானது அமிர்தம் போல் மொழிக்குமொழி தித்திக்கும்; பாவிலினியது தமிழ் என்பார். தமிழ் நீர்மையென்றுபொருள்படும்; நீர்மை ஒப்புரவு, குணம், நிலைபரம் என்றாகும். ஒப்புரவு உபகாரம், ஒற்றுமை, கொடை, சமாதானம், முறைமை என்றாகும். குணம்—இலட்சணம், சுகம், சீர்மை, நன்மை, மேன்மை என்றாகும். நிலைமை—மெய் என்றாகும் ஆகவே ஒவ்வொரு சொற்குபகாரமாய் நிலைபெற்றிருக்கும். தமிழ் பாஷைக்குமாத்திரம் நாவினியற்கையின்படியே இலக்கணமுண்டாயது மற்றைய பாஷைகளின் அமைதிக்கேற்றவாறு இலக்கணமுண்டாயது. "சிவகணமேனுந் தமிழ்நூல்கற்க." என்றதனால் தமிழ் மிகச்சிறந்ததாயிற்று. பொருட் பொலிவையுடையது தமிழிற் சித்தாந்தம். அப்பொருட் பொலிவில்லாதது மற்றைய பாஷைகளேயாம். தொல்காப்பிய ஆசிரியர் அகத்தியனார்க்குமுன்னர் தென்மொழியிருந்தது உண்மையென்றும் வியாசர் வேதங்களை நான்காக வகுப்பதற்கு முந்தியே தமிழ் மொழியிருந்ததென்றும் ஆசிரியர் தொல்காப்பியர் இலக்கணப்பாயிரத்தில் மதுரை ஆசிரியர் நச்சினார்க்கினியர் நன்கு விளக்கியுள்ளார். வடமொழிக்குத் தமிழ் முற்பட்டதென்பார் தமிழினருமை பழமையாய்ப் பசுமரத்தாணிபோல் வலியுறுத்துகின்றது. தமிழ் பழங்காப்பியமாகிய சிலப்பதிகாரத்தில் ஆசிரியர் இளங்கோவடிகள் வியந்து கூறியுள்ளார் ஆதியாகவே தமிழிருந்ததென்பதற்கு "ஆதியிற்றமிழ் நூலகத்தியற்குணர்த்திய, மாதொருபாகனை வணங்குதும்." என்றும், "பேரீத மெய்ஞ்ஞான நலம்பெறப்பொருட்டே." என்றும் சேனாவரையர் கூறியுள்ளார். எல்லாச் சொற்களுக்கும் எளிதாகக் காரணங் கூறுதற்கு அமைதியுடைய பாஷையே முதல் பாஷையாம். அப்பாஷையானது தமிழ்ப்பாஷையென்பார். ஆரியத்திற்கு முன்னிருந்த கிரந்தம் பெரும்பான்மையும் தமிழையே ஒத்திருத்தலின் அதனை வடதமிழ் என்பரீ யாழ்ப்பாணத்துப் பேரகராதியில் வடதமிழ் எனபதற்குக் கிரந்தம் என்றிருக்கிறது. ஆப்கானிஸ்டான் என்னும் மகம்மதிய நாட்டில் ஓர் நகருக்குத் "தமிழகம்" எனனும் பெயர் வழங்கி வருகின்றது. ஆதலால் அந்நகரில் மகம்மதிய பாஷையோடு தமிழையுங் கலந்து பேசுகிறார்கள். இத்தாலி தேசத்தில் பல நூற்றாண்டுகட்கு முன்னர்த் தமிழர்களுக்குச் சமமான சாதியார்களிருந்தார்களென அறிஞர் கால்டுவேல் துரை கூறியுள்ளார். சென்னை கவர்னர் கிராண்டப் துரை என்பவர் பரீட்சா பட்டம் அளிக்கும் பிரசங்கத்தில் தமிழர்களுடைய பழமையை நோக்குங்கால் ஆரியருடைய பழமையானது காலப்பொழுதிற்கு முன்பெற்ற ரூட்டர் தந்தியை யொக்குமெனச் சொற்றார். பதினேழாவது

Conversation teaches more than medication

யுகப்பிரளயத்திற்கு முந்தியே தமிழுள்ளது என்பார் அதாவது வேதங்கட்கு முன்னமே தமிழுள்ளதெனச் சித்தர் நூல் கூறும். பாஞ்சாலநாட்டு மன்னவன் பிரவாகனசைவலி என்போன் தமிழனே அவனது கல்விக் கழகத்தில் கௌமதர் முதலிய் ஆரிய முனிவர்கள் தமிழருடைய ஆரிய தத்துவ ஞானங்களைக் கற்றுணர்ந்தாரெனச் சாந்தோக்கிய உபநிடதம் ஐந்தாவது பிரபாடகம் மூன்றாவது கண்டத்திற் கூறும். கனம் சுந்தரம் பிள்ளை முதலிய பிரமுகர் தமிழரும் ஆரியரும் ஒருப்பட்டே பின்னரே உபநிடதங்கள் உண்டாயின என்பார். அஸ்தினாபுரியை இராஜதானியாகக்கொண்ட குருநாடும் திரிதராட்டிரன் ஆரியனான காந்தார தேசத்தரசன் மகளாகிய காந்தாரியை மணஞ்செய்யும் முன் தமிழ் நாடாகவே யிருந்ததென்றும் பிறகு அக்காந்தாரியின் குல மொழியே அரண்மனைமொழியாகி நாளடைவில் வளர்ச்சி பெற்றமையின் ஆரிய நாடாயிற்றென்பார். மன்னர் மன்னனாகிய சனகன் தன்னையடைந்த சுவேதகேது, அருணேயர் சோமசசு மசத்யயஞ்ஞர், யாக்ஞவல்கி என்னும் ஆரிய முனிவர்களை நோக்கி நீவிர் அக்கினிகோத்திரத்தை யெவ்வாறு செய்கின்றீர் என்று வினவ அதற்கு யாக்ஞவல்கி சிறிது பொருத்தமாகவும், ஏனையோர் சிறிதும் பொருந்தாமலும் விடை கூறக் கண்ட சனகன் இவ்வளவுதானோ என்றிகழ்ந்து தேர்மீதேறிச் சென்றான். இவர் மூவர் இராசன்னிய வகுப்பைச்சேர்ந்த இவன் நம்மை அவமதித்தானென நின்றுவிட்டார்கள். யாக்ஞவல்கி மாத்திரம் பின்தொடர்ந்து தேரோடு சென்று அதன் உண்மைப் பொருளைச் செவிமடுத்துத் தெளிந்தாரெனவும் அதுமுதல் சனகன் பிராமணனாக அவரால் மதிக்கப்பெற்றான் என்று சதபாத பிரமாணம் பதினோராவது புத்தகம் கூறுவதால் அச்சனக பூபதி தமிழ் மன்னனென்றும் அவன் நாடு தமிழ் நாடென்றும் அதனையடுத்த கோசல நாடெல்லாம் தமிழ் நாடென்றும் கூறுவார்கள். இவற்றால் தமிழும், தமிழரும், ஆரியத்தினும் ஆரியரினும் தொன்மையும் தலைமையும் பிறவும் பெறப்பட்டவர்கள் எனப் புலப்படுகிறது. "இழுமென்மொழியான் விழுமியது நுவலினும் பரந்தமொழியானடிநிமிர்ந்தொழுகலும் தோலெனமொழிப தென்மொழிப்புலவர்." எனவும் "முத்தமிழுடைவினைமுற்படுகிரிதனில் முற்படவெழுதியமுதல்வோனே." எனவும் "பரிவுடனழகிய பழமொடுகடலைசண் படுகிடுபெருவயிறுடையவர் பழமொழியெழுதிய கணபதி—யிளையோனே." எனவும் அறத்தைவளர்த்திடு பாசிவை குலவித்திறத் தமிழைத் தருபழையவருளிய—சிறியோனே." எனவும் "முதியமாதமிழிசையதாகவே—மொழிசெய்தே நினைந்திடுமாறு." எனவும் "முற்படவெழுதிய முதல்வோன் என்றபடி பழமொழி—பழையவன், முதுமொழி—முதியமாதமிழ் என்றமையால் தமிழ் ஆரியத்திற்கு முற்பட்டதாமென்பார். "கொன்றைச்சடையார்க் கொன்றைத்தெரியல் கொஞ்சித் தமிழாற்பகர்வோனே." என்பதனால் கடவுள் மொழி தமிழ் என்றாயிற்று. "புகலரியதான தமிழ்முனிவரோது புகழிமலைமேவு பெருமாளே." என்பதால் நன்கு விளங்கும் "வசிட்டர் காசிபர் தவத்தான யோகியர், அகத்யமாமுனியிடைக்காடற்கீரனுக்கு, வகுத்தபாவினிற்பொருட்கோலமாய்வரு முருகோனே." என்பதாற் றெற்றெனத்தெளிகிறது. "அம்புலிதனக்குள்வளர் செந்தமிழ்வழுத்தியும் அன்பொடு துதிக்கமனம்—அருள்வாயே." எனவே தமிழேயுலகத்திலிருந்ததெனத் தெரிகிறது. "சனகர்க்கும் அகத்ய புலத்திய சனற்குமாரர்க்கும், அநுக்ரக மெய்பலகச் சதுபத்து நவப்புலவர்க்கும், வியத்தியல் ஞானபடலத் துறைலக்கணமிலக்கியத்தமிழ்த் த்ரயமத்திலகப்பொருள் விர்த்தியினைப்பழுதற் றுணர்வித்தருள் வித்தக சற்குருநாதா." என்பதால் புலத்தி

யர்முதல் தமிழ் கற்றவர் என்று நன்குபெறப்படுகிறது. "ஈசருடன் ஞானமொழி பேசுமுகமொன்றே," என்பதில் விசாக நட்சத்திரத்தோன்றிய அறுமுகச் சிவனார்க்கு விசாகம் என்று ஓர் திருநாமம் உண்டு. ஆறுமுகங்களில் முன் மூன்று முகங்களில் நடுவிலுள்ள ஒளி மயமாகிய முகத்தினால் சிவபிரானுக்குத் தமிழாலுபதேசித்ததென்பார். ஏனைய விரண்டு முகங்களும் வெண்மை பின் மூன்றுங் கருமை யென்பார் ஒளி மயமென்பது ஞானமயமென்றாலும் அதுதான் மெய்ஞ்ஞானமென்பார். "ஞானத்தமிழ் நூல்களென்பார்." அதுபற்றித்தான் தமிழ் மெய்ஞ்ஞானம் மேம்பட்டதாயிற்று. "அமருமிடனனலெனுமொரு வடிவுடையவனிலுரையவன், முதுதமிழுடையவன் அரியொடய னுலகரியவனடநவில் சிவன்வாழ்வே." என்பதினாலே தமிழ் தெய்வமொழியெனவலியுறுத்தலாயிற்று; ஆகவே கடவுண்மொழி தமிழ் என்றாயிற்று. அரிபிரமாதியரும், இந்திரன், குபேரன் முதலியோரும், தாருகன் இரணியன் முதலியோரும் தமிழையே பேசுவார்கள். அகத்தியர், மார்க்கண்டேயர், வான்மீகர், கவுதமர், சுகர், வசிட்டர், காசிபர் மற்றும் முனிவர்கள் முதலியோர்களும் தமிழ் நூல் செய்தார்கள். சனகர் சனற்குமாரர் முதலியோரும் தமிழ் நூல் ஆராய்ச்சி செய்துவந்தார்கள். ஆனதுபற்றித்தான் வடமொழி பயிற்சியுள்ள யாவரும் வடமொழியே முன்மொழியென்றும் எல்லாப் பாஷைகட்கும் வடமொழி முற்பட்டதெனவும் கூற வல்லுநரும் தத்தம் வீட்டில் வழக்க பழக்கங்களில் பேசிவருவது தமிழ்ப்பாஷையேயாம். வடமொழி சுலோகங்களைச் சொல்லலாம் எழுதலாம் வடமொழியாகவே இலௌகிகமாகவாவது வைதிகமாவது கிரிகைகளின் மூலமாய்ப்பேசுவது அசாத்தியமேயாம். ஆண்பாலவிருதுக்கு வேட்டையாடுவதுபோல் தட்டித்தடுமாறிப் பேசமுயன்றாலும் அவர் தம்மனைவி மக்களாதியர்கள் எப்படிப் பேச முடியும்? ஒரு சிறிதும் இயலாத காரியமாகும். வடமொழி சுலோகங்கட்கு வியாக்கியானஞ்செய்யும்போது தமிழினால்தான் எழுதவும் பேசவும்வேண்டும். "வடிவேலெறிந்த வான்பகைபொறாது பஃறுளியாற்றுடன்பன்மலையடுக்கத்துக்குமரிக்கோடுங்கொடுங்கடல்கொள்ள." எனவும் "நெடியோன்குன்றமுந் தொடியோள்பௌவமும், உரையாசிரியரடியார்க்கு நல்லார்." ஆகவே பெருவெள்ளத்தால் மூடப்பட்ட இந்நாட்டைப் புறநானூற்றில் மிக்க பெருவழுதியைப்பாடிய பாட்டில் பாண்டியனால் உண்டாக்கப்பட்டார் என்றார். ஆறு தோண்டா தவராசன் அரசனைகான் என்னும் முறைமைப்படி தொல்காப்பியத்திலும் குமரியாற்றின் தெற்கு நாற்பத்தொன்பது நாடுகள் கடல்கொண்டதென நச்சினார்க்கினியர் கூறியுள்ளார். இருக்குவேதம் குமரி கடல்கொள்ளப்படுமுன் உண்டாயிற்றென்றும் அக்கடல்கொண்ட வரலாற்றை அதர்வணவேதமெடுத்துக்கூறுமென்றலின் வேதங்கட்கு முன்னரே உள்ளதென்பதாயிற்று. கொங்கணநாடு அல்லது கொங்காணி என்ற மொழியும் தமிழ்கோட்டைமதிலின் கல் வெட்டாகவேயிருக்கிறது. அந்நாடும் பூர்வத்தில் தமிழ்நாடாகலின் தமிழ் ஒன்றே மிக மேம்பட்டதென்பார். நடுநிலையாய்ப்பார்க்குமிடத்து உலகின்கண் அறிந்தவரையில் மேன்மையான கலைஞானங்களிலும், நீதிநூல்களிலும் தமிழ் ஒன்றே இலக்கியமான ஒற்றுமைப்பெற்றிருக்கிறது. ரெவரெண்டுபெர்சிவில் விரிந்த பொருட்பொலிவை அடக்கியிருப்பது தமிழ் ஒழிந்த மற்றைப் பாஷைகட்கு இல்லையென்றும் மனதின் தோற்றங்களைத் தமிழைவிட நுணுக்கமாகவும், தத்துவமாகவும் சொல்லத்தக்கவை. பிறபாஷை மொழிகளில் கிடையாவென்றும் உறுதியாய்ச் சொல்லுவேனென்று சொன்னார். சார்லஸ் கோவர் துரையவர்கள் செம்

பாகமும், தார்க்கிக வழக்கும் மிக ஏற்றமுடையது தமிழென்றும். திராவிட மொழிக்குப் பிரதிநிதியாக நிற்கத் தக்க தமிழ் மொழியைப் பற்றி அவர் எழுதிய நூலில் சொல்லுமிடத்து மக்களாற் பேசுவதற்கு மிகப் பொலிவும், திருத்தமும், சீரும், இனிமையும் உடைய மொழிகளில் இத் தமிழ் மொழி யொன்றே யென்றார். 1800 ஆண்டுகட்கு முந்தித் தமிழர் என்று ஒரு சாரார் கூறுவதற்குத் தமிழர்களுடைய 90 கோட்டைகளையும் 99 நகரங்களையும் ஆரியர் அழித்தார்கள் என்று மாக்ஸ் மில்லர் துரை கூறியுள்ளார். இருக்கு வேதத்தில் வரும் தாசர் என்போர் தமிழராவார் தசாங்கத்திற் சிறந்த தமிழராசர் என்றாயிற்று தசம் - பத்து - தாசர், தசம், தசார் - தயார் - நீவிர் தயாராக இருத்தல் வேண்டுமெனில், தசாங்கத்தோடு இருத்தல் என்பது பொருள். "தேசாங்கசூரன் தோற்க மயிலேறி." என்றார். தசாங்கம் :— மலை - ஆறு - நாடு - ஊர் - மாலை - பரி—கரி - முரசு - கொடி - செங்கோல். "களிறு கங்கை நீருண்ண மண்ணையிற், காயினத்தோடே கலவு செம்பியன், களிறு தெண்டிரைக் குரை கடாரமுங், கொண்டு மண்டலங் குடையுள் வைத்ததும்." எனக் கலிங்கத்துப் பரணிகூறலானும் ஒரு சோழன் கங்கையாற்று வரை சென்று மண்ணையுங் கடாரத்தையும் வென்று நில மெல்லாம் தன் வசப்படுத்திக்கொண்டான் என்பது பொருள். தமிழில் பகுதி விகாரப்படினும் முற்றும் மாறாது நிற்கும். பிறபாஷைகளில் சம்பந்த மில்லாமல் மாறுபடும். தமிழ் நூல்களில் ஒருவர்க்கொருவர் வேறுபாடின்றி இனம்பற்றிக் கூறும். வடமொழியில் தருமசாத்திரம் - மிருதிகளில் குற்றங் கட்குத் தண்டனை இனம்பற்றி ஓரமாய் விதித்துள்ளது. நன்மைதரு மார்க்கங்களைக் கூறுமிடத்து ஓரமாய்க் கூறும். தமிழ் மொழியில் எல்லாப் பொருளும் இரண்டு திணைகளாகப் பகுக்கப்பட்டுள்ளன. ஆங்கில முதலிய பாஷைகளில் முறைபிறழ்ந்து ஆண்பாலுக்குப் பெண்பாலும், பெண்பாலுக்கு ஆண்பாலும், ஒன்றன்பாற் பெயருங் கூறும். வடமொழியிலோ பால்வரம்பின்றிப் பலவாறு கூறும். வியாசர் வேதங்களை நான்காக வகுப்பதற்கு முன் தமிழ்மொழி யிருந்ததுண்மையென்பதற்கு வச்சிரசூசி கோபநிடதத்தில் துவாபரயுகத்தில் வியாசர் தோன்றினார் என்று கூறும். வியாசர் தன் குமாரனான சுகமுனிக்கு யசுர் வேதம் உபதேசித்ததாய் சுகரகசியோபநிடதத்தில் கூறும். அதர்வண வேதத்தில் ஒரு சாகை சீதை, கிருஷ்ணன், இராமன் முதலியோர் விஷயங்களைப்பற்றிக் கூறும். வியாச கட்டளை யென்னுஞ் சொல் வியாச கட்டுக்கதை யென்றிருப்பது மருவி வழங்குவது போலும்; பலமாய்க் கட்டுப்படுத்திப்போயினார். அவ்வபிமானம்பற்றிச் செய்வதுதான் முறைமையாகும். இந்து சமுத்திரம் புகழ்பெற்ற இக்கடலானது பல்லாயிரம் ஆண்டுகட்கு முந்தி நிலனாயிருந்ததென்பார். ஆங்கில வல்லுநரும் ஒப்புக்கொள்ளப்பட்ட முடிவேயாம். பல் வேறு வகைப்பட்ட மக்களின் உருவையும் - உறுப்பையும் இயங்கியற் பொருள் நிலையிற் பொருள்களைப் பகுத்தறியும் நூல்களும் தமிழ் எழுத்துக்களை எழுதிய சேப்போடுகளும், சிலாசாசனங்களும் அகப்பட்ட தெனவும் அதனால் தொல்லோர் வழங்கிய தமிழ் மொழியொன்றே என அறிஞர் ஹோராக்கல் துரையவர்கள் வியந்து கூறியுள்ளார். ஆனதுபற்றித் தமிழ் பூர்வீகமான பாஷை யென்றாயிற்று. அதனுடன் மேலாகிய சாந்தோக்கிய சுருதியிலே ஏழாவது பிரபாடகத்தில் கூறி ஆங்கு ஐந்தாவது வேதமெனப் புகழப்பட்ட பரமேதிகாசமாகிய சிவரகசியத்திலே ஒன்பதாவது அம்சத்தில் சிவபிரானே திராவிட வேதத்தை இராமபிரானுக்குத் திருவாய் மலர்ந்தருளின ரென்றிரு

He who cannot comprehend a sign is not clever.

கிறது. அதினால் இராமர் முதலிய யாவரும் தமிழொன்றே நன்கு பெறப் படுகிறது. அது பர்வதாகிருதியாக, வெள்ளிமலையின்கண் விளங்குமென் றும் கூறுமாதலால் அதன் பெருமையை யாவரே கணிக்கவல்லார். திருமந் திரத்தில் —"மாரியுங் கோடையுநின்றங் கிளக்கின்ற காலத்து, வாரிய முத்தமிழு ருடனே செலாக், காரிகையார்க்குங் கருணைசெய்தவே." என்றும் ஆரியத்திற்கு முந்தியே தமிழ் உண்டென வலியுறுத்தும் "முற் படவெழுதியமுதல்வோன் ஆதிவிநாயகன்," என்றார். "மறவாநாயக ஆதி நாயகர், இளையநாயக சாவிரி நாயக" என்றார். ஆகவே நன்கு புலப்ப டுத்தியது. மச்சபுராண முகவுரைகாரர் இலக்கணங்கள், நீதிநூல்கள், காவியங்கள், தோத்திரங்கள், சாத்திரங்கள் முதலியவை தமிழுக்கே மிகச் சிறப்புடைத்தென்றும், தமிழ்நூலாரிடத்துத் தந்துவஞான சாத்திரங்களை வடநூலார் கடன்வாங்கிக்கொண்டார்கள் என்றார். அதினாலேயே சுதந் திரமுந் தொல்வழக்கும் பாரம்பரியமான உடன்பாடும் வடமொழிக் குக கிடையாதென மேலாகக் கொள்ளக் கிடக்கிறதென்பார். அநேக விதமான அற்புதங்களை விளைவிப்பதற்கு ஆதாரமாயுள்ளது தமிழ்ப் பாஷையேயாகும். அப்படிப்பட்ட தமிழாலாக்கப்பட்ட வேதமானது அதாவது தமிழ்வேதம் சிவபிரான் ஒருவரையே பதியாகப் போற்றும். வடமொழிவேதம் பலதெய்வங்களைப் போற்றும். சைவ சமய உயர் வினையும் ஏனைய சமயத்தாழ்மையையும் விபூதி, உருத்திராக்க, பஞ்சாக்கிர மகிமையையும் பேசுவது தமிழ் வேதமேயாம். "தமிழ்வேதம் பாடினார் தாளம்பெற்றார்." என்றும் "மிக்க சொற்றமிழினால் வேதமும் பாடி னார்," "விருப்புடன்பாடலிசைத்தார் வேதம் தமிழில்," மறைகளாயநான்கு மென மலர்ந்த செஞ்சொற்றிருப்பதிகம்" என்றும், அருண்மொழித்தேவர் கூறியுள்ளார். இத்தமிழ்வேதமே மறைக்கதவினைத் திறப்பித்ததும், எலும் பைப் பெண்ணாக்கியதும், கல்லின்மேற் மிதக்கச்செய்ததும், முதலையுண்ட பாலனை யழைப்பித்ததும், ஊமைப்பெண்ணைப் பேசவைத்ததுமாகிய தமிழ் வேதம் பதிநூலென்றும் அல்லது சித்தாந்தமென்றும் கழிபேருவகையடைய திருவருளைக்கொடுக்கும், முத்தியுங் கொடுக்கும் ஒப்புயர்விலாத மகிமை பெற்றிருப்பது பூர்வீகம்பெற்ற தமிழ்வேதமென்பார். "தொண்டர்நாத னைத் தூதிடைவிடுத்தது, முதலையுண்டபாலனை யழைத்தது மெலும்பு பெண்ணுருவாக்கொண்டது, மறைக்கதவினைத்திறந்ததுங்கன்னித், தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச்சொற்களோ சாற்றீர்." என்னுந் திருவிளையாடற் புராணத்தானும் தமிழ்மொழி, தெய்வமொழியென வலியுறுத்தலாயிற்று. "வெள்ளேறுடையான்றனை கன்புசெய்திருத் தாண்டகவேந்தர் என்றும், பாட்டிற் கின்புறுகுருபரன்" என்றும், "பாடுவார் பசிதீர்ப்பாய்" என்றும், "வாரம்பாடுந்தோரியமடந்தை" என்றும், "பழுதிலாத சொன்மணியினைப் பற்றிச் செய்தன்பு முழுதுமாகிய வடத்தினான்முறை தொடுத்தலங்கல் அமு துசாத்துமெய்யன்பருக ககமகிழ்ந்தையர்." என்றும்; "பன்மாலைத் திரளி ருக்கப் பாமாலைக்கே நீதான் பட்ச" மென்றும். பல்வேறு வகையான கியா யங்களினாலே தமிழ்ப்பாட்டில் எல்லாம்வல்ல இறைவனுக்குப் பேரானந்த மும், பெருமகிழ்ச்சியும் உண்டென நன்குணர்வதாயிற்று. இத்தகைய மாட் சிமைகள் எந்தப்பாஷையிலுங் கிடையாதென்பது வற்புறுத்திக் கூறுவதற்கு வலிமை பெற்றுள்ள தமிழ்ப் பாஷைக்குரிய ஆன்றோர்களின் துணிபே யாம். இத்தமிழ்ப் பாஷைக்குச் சமத்துவமாவது, மேலாகவாவது வட மொழி முதல் எந்தப் பாஷைக்கும் இடந்தருவதில்லை. காக்கையின் றலை

யிற் பனங்காயைக் கட்டுவதுபோல் வடமொழிக்கு ஏற்றஞ் சொல்வது வீண் கற்பனையேயாம். "சுடர்ச்சடவுள் தந்ததமிழ் தந்தான்." என்று கம்பராமாயணத்தில் மகாகவி கம்பர் கூறியுள்ளாரென்றால் இதன் மகிமையை சொல்லவும் வேண்டுமோ; சமயாசாரியர்களும், சந்தானாசாரியர்களும்; மற்றும் மேலாய பிரமுகர்களும், ஆழ்வாராதிய பெருமக்களும், யா[illegible]யகர்த்தர்களும், ஏனையோர்களும், தமிழ்ப் பாஷையில் தான் பரோபகாரமாயுள்ளனவும், இகபர சாதனங்கட்கின்றியமையாதனவுமாகிய சாத்திரங்களையுந் தோத்திரங்களையும் ஞான பொக்கிஷங்களாக உலவாக்கிழியைப்போல் என்றும் குறையாச் செல்வத்தைக் கொள்ளைகொள்ள வைத்துப் போனார்கள். திருவருட் செல்வர்களாகிய அன்னோர்கட்கு வடமொழியில் மனஞ் செல்லாது பண்டைய தமிழில் நுழைந்தது பூர்வ சம்பந்தம பற்றியேயாம். நவீனமாய் வடமொழியில் புகுவதற்கும் அதை யெடுத்துக் கூறுவதற்கும் அவர்கட்கு புரிகோ மற்றெளிதோ எனப் பரியாலோசிக்குமிடத்துத் திருவருள் கைவந்த பெரியார்கட்கு எதுவும் எளிதேயாம். ஆனதுபற்றித் தான் "பழைய காலைத் தூர்க்கக்கூடாது புதுகாலைத் தோண்டக்கூடா"தென்னும் பழமொழிக்கிணங்கப் பண்டைய வாசனையால் தமிழ்ப் பாஷைக் கருகாயிருந்ததுமன்றி உலகினர்களுய்தற் பொருட்டுப் பெருங் கருணைத் திறத்தானே பேருபகாரமாகத் தலங்கடோறுஞ் சென்று பதிகம் பாடிப் பணிந்து கற்பனைக்கடங்கா அற்புதங்களைச் செய்து நம்மனோரை வழிப்படுத்தி யாளாக்க முயன்றார்கள் என்பதிலையமில்லை. யாவரும் ஒப்பக் கூடிய செப்பரும் பேறுயுள்ள இப்பெரும் வாழ்வெல்லாம் அருமருந்தன்ன செந்தமிழ்ப் பாஷையாலன்றோ நேர்ந்தது எனக் கூறுவதற்கு இடந்தருகிறது. அதுவுமன்றி, துவாதசாந்த ஸ்தலமென்பதும், பாண்டிநாட்டின் இராஜதானியாயுள்ளதும், வந்தியின் பிட்டுண்டு மதிபொதியும் மணிச்சிரசில் மண் சுமந்து மாற்றடிப்பட்டும் அவராலடைக்கப்பட்ட வைகைக்கரையிலுள்ளதும், சுரர்களால் பூசிக்கப்பட்ட கடம்பவனமாயிருந்ததும், சிவபிரான் சடையினின்று மதிக்கலையின் அமுதகிரணத்தைச் சிறிது சிந்த அது சென்று எங்கும் மதுரமயமாக்கினமையின் மதுரை யென்றாயதும், பழமையாகிய தெய்விகம் அடைந்ததுவும், சீரும், சிறப்பும், வாய்க்கப்பெற்றதும், தடாதகைப் பிராட்டியும், சோமசுந்தரக்கடவுளும், உக்கிர குமாரராகிய குமாரக்கடவுளும் முறையே முடிபுனைந்து அரசு செய்ததும், அறுபத்து நான்கு திருவிளையாடல்களைச் செய்ததும், எண்ணிறந்த புலவர்கள் பல கோடி காலமிருந்து கணக்கிறந்த நூல்களியற்றியதும், எண்ணாயிரம் சமணர்களைக் கழுவிலேற்றிச் சைவத்தை நிலைநாட்டியதும், சங்கமிருந்து தமிழை வளர்த்ததும் இம்மதுரைமாநகரமேயாம். "சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவனுஞ், சௌந்திரபாண்டியனெனும் தமிழ் விரகனுஞ், சங்கப்பலகையுந் தழைத்தினிதோங்கு, மங்கலப் பாண்டிவள நாடு." என்னுந் திவ்விய திருத்தலத்தில், சங்கப் புலவர்களுடன் தானும் தமிழ்ப் புலவனாயிருந்து ஆராய்ச்சி செய்தாரென்றும், அறுமுகச்சிவனாரே தமிழ்ச்சங்கத் தலைவரா யிருந்தாரென்றும், நல்லாசிரியராகிய இடைக்காடர் பாடிய பாசுரத்தைப் பாண்டியன் கேட்டுச் சிறிதுமுடி துளக்கானென்று சந்நிதானத்தில் வலிந்துரைக்கக் கேட்ட சோமசுந்தரக்கடவுள் இடம்பிரியா உமாபிராட்டியுடனும், சங்கப் புலவர்களுடனும் தனது திருக்கோயிலுக்கு நேர் வடக்கே வையையாற்றின் தென்பாரிசத்தில் ஓர் பழைய கோவிலிற்குச் சென்றாரென்றால் அச்சிவபிரானுக்குத் தமிழின்பேரிலிருந்த அபிமானமும்,

Support who submits to you.

தமிழ்ப்புலவர் மேலிருந்த விசுவாசமும் நன்கு விளங்குகின்றது. "சன்னிதியில் வீழ்ந்தெழுந்து தமிழறியும் பெருமானை தன்னைச் சேர்ந்தார், நன்னிதியே திருவாலவாயுடைய நாயகனே நகுதார் வேம்பன், பொன்னிதி போலளவிறந்த கல்வியுமிக்குளனென்று புகலக் கேட்டுச், சொன்னிறையுங் கவிதெடுத்தேனவமதித்தான் சிறிதுமுடிதுளக்காகி." என்றும், "பரிவாயின் மொழிதொடுத்து வருணித்தோர்க்ககமகிழ்ந்தோர் பயனு நல்கா விரிவாய தடங்கடலே நெடுங்கழியே யடுங்கான விலங்கே புள்ளே, பொரிவாய பாரை மரநிரையேவான் றெடுகுடுமிப்பொருப்பே வெம்பு, மெரிவாய கொடுஞ்சுரமே யென விவற்றோரன்றினையொத்திருந் தானெந்தாய்." என்றும், "என்னை யிகழ்ந்தனனோ சொல்வடிவாய் நின்னிடம் பிரியா விமயப் பாவை, தன்னையுஞ் சொற்பொருளான வுன்னையுமேயிகழ்ந்தனனென்றனக்கியாதென்ன, முன்னை மொழிந்திடைக்காடன் றணியாத் முனிவீர்ப்பமூர்த்தி சொற்றா, னன்னவுரை திருச்செவியினூறுபாடென வுரைப்ப வருளின்மூர்த்தி." என்றும், "போனவிடைக் காடனுக்குங் கபிலனுக்கு மகத்துவகை பொலியுமாற்றான், ஞானமயமாகிய தன்னிலிங்க வுருமறைத் துமையாநங்கை யோடும், வானவர் தம்பிரானெழுந்து புறம்போய்த் தன் கோயிலினைர் வடபால்வையை, யானநதித்தென்பாலோ ராலயங்கண்டங் கணினிதமர்ந்தான் மற்றோ." என்றும், "சங்கவான் றமிழ்த் தெய்வப் புலவோருமுடனெழுந்து சைலவேந்தன், மங்கை நாயகன் போனவழிபோயங்கிருந்தார்—காணோர்." என்றும் கூறியமுன்னமே மனம் பொறுதவரானோர் என்று ஏற்படுகிறது. அச்சோமசுந்தரக்கடவுளே தருமிக்குப் பொற்கிழியருள்வான்வேண்டி—"கொங்குதேர்வாழ்க்கையஞ்சி றைத்தும்பி காமஞ்செப்பாது கண்டதுமொழிமோ, பயிலியது கெழீஇய நட்பின்மயிலியற், செறியெயிற்றரிவை கூந்தலின றியவு, முளவோநீயறிவும்பூவே." என்னுந் தமிழ்ப் பாசுரம் எழுதிக்கொடுத்தனுப்ப அதைக்கண்ட நக்கீரர் அரசன் கொடுக்கவிருந்த ஆயிரம்பொன்னையுங் கொடாதீர். பாடல் குற்றமென்ன அதையுணர்ந்த தருமி இறைவனிடம் விண்ணப்பிக்க இறைவனே தமிழ்ப் புலவனாக் வந்து நக்கீரரை யாது குற்றமென வினவ, குற்றங்கூறிய நக்கீரர்முன் நெற்றிக்கண்ணைச் சிறிதுகாட்ட முற்றிலுங் கண்ணானாலு நும்பாடல் குற்றம் குற்றமே என்றார் "வறுமைநோய்பிணிப்பப் பன்னாள் வழிபடுமடியேனின்பாற், பெறுபொருளிழந்தே னென்றுபேசிலேன் யார்க்குமேலாய், கறைகெழுமிடற்றோய் நின்றன்கவிக்குற்றஞ்சில்வாழ்நாட்சிற், றறிவுடைப் புலவர் சொன்னாலாருனைமதிக்கவல்லார்" என்றும், "எந்தையிவ்விகழ்ச்சி நின்னதல்லதையெனக்கியாதென்னச், சிந்தைநோயிழந்துசைவச் சிறுவனின்றிரங்கியார்க்கும், பந்தமும்வீடும்வேதப்பனுவலும்பயனுமான, சுந்தரவிடங்கனங் கோர்புலவனாய்த் தோற்றஞ்செய்தான்." என்றுகூறவே "கற்றைவார்சடையோனெற்றிக் கண்ணினைச்சிறிதேகாட்டப், பற்றுவானினுமஞ்சானும்பரார்பதிபோலாக முற்றுநீர்கண்ணானாலுமொழிந்தநும்பாடல் குற்றங்குற்றமேயென்றான் றன்பாலாகியகுற்றந்தேரான்." என்பதினாலே நக்கீரர்க்கிருந்த தமிழின்வல்லமும், சிவபிரானுக்கிருந்த அடியார்க்கெளியனென்ன வுமிழிடத்திருந்தஆசைப்பெருக்கமேயாம். எல்லாம்வல்லமுழுமுற்கடவுள் தமிழ்ப் புலவனாகவந்தானென்றே ஏற்படுகிறது. அறுமுகச்சிவனாகிய எங்கள் தமிழறியும்பெருமான் பொய்யாமொழிப்புலவர் சிகாமணியின் தமிழ்ப்பாடலைக் கேட்கக்கடுஞ்சுரமாகிய பாலைநிலத்தின் கொடியவெப்பத்தையுஞ் சகித்துக் கொண்டுவேடனைப்போலிருந்தும் புலவர்வரநேர்கண்டு கோழியும்பாடிக்

குஞ்சியையும்பாடுவேனோ என்னும் விரதத்தைவிட்டுப் பொய்யாமொழிப்புலவர் வேடனுருக்கொண்டிருந்த அறுமுகன்முன்னர் "பொன்போலுங்கள்ளிப் பொறிபரகருங்கானலிலே, என்பேதை செல்லற்கியைந்தனளே—மின்போலும், மானவேன்முட்டைக்குமாறாயதெவ்வர்போங், கானவேன்முட்டைக்குங்காடு" எனப்பாடினார் அதைக்கேட்ட முருகக்கடவுள் பொருந்தவில்லையென "விழுந்ததுளியந்தரத்தேவேமென்றும்வீழின், எழுந்துசுடர்சுடுமென்றேங்கிச்-செழுங்கொண்டல், பெய்யாதகானகத்திற் பெய்வளையும் சென்றனளே, பொய்யாமொழிப்பகைஞர்போல் எனப்பாடினார் ஆகவே எந்தையாராகிய சந்தவேட்குத்தமிழ்ப்பாஷையிலிருந்தவிருப்பத்தை நோக்குமிடத்து தமிழ்பாஷையானது மிகச்சிறந்ததாயிற்று. திருமழிசையாழ்வாரை ஆசிரியராகக் கொண்டகணிகண்ணனைப் பாடக்கேட்ட பல்லவராயன் அசூயைகொண்டு ஊரைவிட்டுப்போவெனுஞ்சொற்காற்றாது ஆசிரியரிடம்விண்ணப்பிக்க ஆசிரியர் வெஃகாவையடைந்து "கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி, மணிவண்ணா நீயிங்கி ராதே துணிவுடனே செந்நாப்புலவனுஞ் செல்கின்றேனீயுன்றன், பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்." எனக் கேட்ட மாத்திரத்தில் நமது காப்புடைக் கடவுளாகிய விட்டுணு மூர்த்தியும் உடனே பாயைச் சுருட்டிக்கொண்டு பின்றொடர்ந்து போனார் என்றார். அதனை ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மீனாட்சியம்மன் பிள்ளைத்தமிழ் என்னும் பிரபந்தத்தில் காப்புடைக் கடவுளின்றுதியில் "மணிகொண்ட நெடுநேமி வலயஞ் சுமந்தாற்று மாசுணச்சூட்டு மோட்டு, மால்களிறு பிடர்வைத்த வளரொளிவிமானத்து வாலுளைமடங்க ருங்கு, மணிகொண்ட பீடிகையினம் பொன்முடிவைத் தெமையனொடு வீற்றிருந்த, வங்கயற் கண்ணமுதை மங்கையர்க்கரசியை யெம்மனையை யினிதுகாக்க, கணிகொண்டதண்டுழாய்க் காடலைத்தோடுதேங் கலுழிபாய்ந் தளறுசெய்யக், கழனிபடு நடவையிற்கமலத் தணங்கரசொர்கை யணைமுகந்து செல்லப், பணிகொண்ட முடவுப் படபாய்ச்சுருட்டுப் பணைத்தோ ளெருத்தலைப்பப், பழமறைகண் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப்பசுங் கொண்டலே." எனக் கூறுவதால் விட்டுணுமூர்த்திக்கு தமிழின்மேலிருந்த ஆசைக்களவிடற்பாலதன்று. ஒப்பிலாமணிப்புலவருக்காக தமிழின் அருமையறிந்த குமண மகாராஜன் தன் தலையையுங் கொடுத்தாரென்று ஏற்படுகிறது. "அந்த நாளி வந்திலை யருங்கவிப் புலவோய், இந்தநாள் வந்துநீ நொந்தெனை யடைந்தாய், தலைதனைக் கொடுபோய்த் தம்பிகைக் கொடுத்ததன், விலைதனை மீட்டுன் வெறுமைநோய் களையே." என்பதினால் தமிழுக்கிருந்த அபிமானத்தைக் கணிக்கவல்லார் யார். மதுரைக் கவிராயருக்குக் கொடுப்பதற்கிலையேயென பாம்பின்வளையிற் கையை வைத்து உயிரைவிடத்துணிந்த நின்றை - காளத்தியாரை பாராமுன்னமே மதுரைக்கவிராயர் பாடக் கேட்டபோதே ஊரைவிட்டுப் போனவர் திரும்பிவந்து தானடையப்பெற்ற சிலோரத்தினத்தைக் கொடுத்துத் தன் வறுமையையும் எதிர் பாராமல் இல்லையெனாது கொடுக்குஞ் சுதந்தரத்தை நிலைப்படுத்தி மகிழ்ந்தாரென்றால் அத்தமிழ் வித்துவான் மேலிருந்த அபிமானத்தை என்னென்பாம். "நீளத்திருந்துழன்றாய் நீங்காநிழல் போல, நாளைக்கிருப்பாயோ நல்குரவே—காளத்தி, நின்றைக்குச் சென்றக்கா ளீயெங்கே நானெங்கே, இன்றைக்கே சற்றேயிரு." எனவுங் கூறினார். தில்லைவாழந்தணரி லொருவரும், சந்தான குரவர்களில் ஒருவரும், கொற்றவன் குடியிலே வாழ்க்கையுடையவரும், முள்ளிச் செடிக்கு முத்தி கொடுத்தவரும், சிவப்பிரகாசம், திருவருட்பயன்

முதலிய அரிய பெரிய ஞான பொக்கிஷங்களை யளித்தவருமாகிய ஸ்ரீ உமாபதி சிவாசாரியசுவாமிகட்கு (பெற்றான் சாம்பனுக்குத்தீக்கை செய்துவைக்க) நற்றமிழ் பாசுரம் ஸ்ரீ நடராஜப்பெருமானார் "அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங் கொடியார்க் கெழுதிய கைச்சீட்டு—படியின் மிசை, பெற்றான் சாம்பனுக்குப் பேதமறத் தீக்கை செய்து, முத்தி கொடுக்க முறை." என்னுந் திருமுகத்தைக் கண்டு முத்தி கொடுத்த திருப்பாசுரமும் தமிழினாற்றான் எழுதப்பட்டார் திருவாதவூரடிகளாகிய நமது மணிவாசகப்பெருமானார் "கடலிற வண்ணன் கண்டேனென் றிடந்து மறை சிலம்ப நற்று மலரடிக்கணிய—பண்டை நாளொருவிலர் தொண்டராயினர், முட்டாட்டாமரை முறுக்கவிழ் மலர்மேல், வலம்புரிகிடக்கும் வாதவூரன்ப பாடும் மணிநீ கூடும்பொருட்டு மதுரைமாநகரிற் குதிரை மறியும், விண்புகழ் முடிமிசை மண்பொறை சுமந்து, நீற்றெழினின்மேனியின் மாற்றடிப்பட்டு என்னைத் தொண்டனென்னக் கொண்டனன்." என்று துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் திருவாக்கின்படியும் - வேதம் மட்கலமென்றும் - திருவாசகம் பொற்கலமென்றும் வியந்து கூறியபடி மிக்க ஏற்றமுடைய செந்தமிழால் திருவாய்மலர்ந்தருளிய திருவாசகமும், திருக்கோவையாரும் ஸ்ரீ நடராஜப்பெருமான் தன் திருக்கரத்தால் அரிய பெரிய தமிழ்ப் பாஷையிலெழுதித் தன்னுடைய கைச்சாத்துமிட்டாரென்றால் இத்தமிழ்ப் பாஷையினுக்கிருக்கும் அதிதீவிர பக்குவம் எந்த பாஷைக்கிருந்தது கைச்சாத்திடாத பத்திரம் செல்லாதென்பதுபோல எங்கள் பெருமானார் கைச்சாத்திடாத எந்த பாஷையும் எங்கடமிழ்ப்பாஷைக்கு முன்னிற்கமாட்டாதென்பது சத்தியமேயாம். வடமொழிப் பயிர்ச்சியும் பெரிதுமுடைய மாக்ஸ் மில்லர் துரையவர்கள் அனித்தியகாலத்திலும் சொற்பகால ஆராய்ச்சியில் நான் அடையப்பெற்ற பெருமகிழ்ச்சிக்களவில்லை. அருமை மிக்க செந்தமிழ்ப் பாஷையில் மனதைச் செலுத்தாமல் வீணாய்க் காலமெல்லாம் கழித்துவிட்டேன் என மனம் வருந்துகிறேன். இனியாவது மற்றவர்கள் தமிழையே அனுசரித்து அதின் பெரும்பலனை எளிதில் அடைவார்களென நம்புகிறேன் எனக் கூறினாரென்று தமிழ் ஆராய்ச்சியில் மிக்க வல்லுநருங் கூறக் கேட்கிறோம். இத்துணைப்பெருஞ் சிறப்பினை வாய்ந்த தமிழ்ப் பாஷையைப்பற்றி யபாரமாயிருப்பதால் விரிக்கிற் பெருகுமென விடுதாம். இக்கல்விச் செல்வத்தை மக்கட்பிறப்பினர் யாவரும் எத்துணைச் சிரமப்பட்டாயினும் கல்வி கைவரப்பெற்று இம்மையின்பத்திற் கேதுவாகிய பொருட் செல்வத்தைப் பொருட்படுத்தாது என்றும் அழியா இயல்பினையுடைய கல்விச் செல்வத்தையடைந்து பேரானந்தப் பெருவாழ்வை பெறுவதற்கரிய இக்கல்விச் செல்வத்தை ஒவ்வொரு கணமும் விடாமுயற்சியோடு "பாடையேறினு மேடது கைவிடேல்." என்பதற்கிணங்க அக்கல்விச் செல்வத்தை அடைதல் வேண்டுமென்பது சர்வ சம்மதமேயாம். ஆகவே முற்கூறிய பொருட் செல்வமும், கல்விச் செல்வமுமாகிய இருவித செல்வங்களும் பெருந்துணைப் பற்றுக்கோடாயிருந்தாலும் அவ்விரண்டு செல்வங்கட்கு மேம்பட்டதாயுள்ளது அருட் செல்வமேயாம். "நூலேணி விண்ணேற நூற்குப் பருத்திவைப்பார் போலே கருவி நன்னூல் போதம் பராபரமே." என்னும் ஸ்ரீ தாயுமான சுவாமிகள் திருவாக்கின்படி இனியருட் செல்வமானது மாமுங்காயும், மணியுமொளியும், பூவுமணமும், எள்ளுமெண்ணெய்யும் போலச் சிவனோடு அபேதமாயிருக்கும் ஞானமே அருள் என்று கூறப்படும். அவ்வருள் என்பது சத்தியேயென்று கூறப்படும்.

அதனை "அருளது சத்தியாகுஞ் சத்தி தன் வடிவே தென்னிற் றடையிலா ஞானமாகும்." என்பதனாலுணர்வதாயிற்று. இவ்வருட் செல்வம் மேற்கூறிய பொருட்செல்வம், கல்விச்செல்வம் போல் இலகுவாய் பெறக்கூடியதன்று. இது அநேக கோடி ஜென்மாந்திரங்களில் செய்துவந்த சரியை, கிரியையாதிய சிவபுண்ணிய முதிர்ச்சியினாலே சிவபெருமானது திருவருளாலடையப்பெற்ற மெய்யன்பு வாயிலாக அடையப்படுவதாய் அரும்பெரும் விசேடமாய் நிற்கும் அழியாச் செல்வமேயாம். சைவசமய குரவர்கள் நால்வரும் முறையே இளமை வயது முதலிய பருவங்களில் அவ்வருளை இம்மைக்கண் காலவேறுபாட்டால் பெற்றலமையும், பிறவிதோறுஞ் செய்துவந்த பதிப்புண்ணிய மேலீட்டின்படி முறையாற் பெற்றமையை விளக்குதற்குப் போதிய சான்றாகும். இன்னும் சிவஞான போதத்து எட்டாஞ் சூத்திரத்து முதலதிகரணத்தில் "ஆளுடைய பிள்ளையார் முதலிய நாயன்மார்க்குத் தவமின்றியும் ஞானநிகழ்ந்ததாலோ என்னும் ஆசங்கையை நீக்குதற்குப் படிமுறையினன்றி யிவ்வொருபிறப்பிற் செய்த தவந்தானே யமையாதென்பதனை யுணர்த்தற்கும், முன் செய்த தவமே." என விசேடித்தாரென்று கூறியிருப்பதும் இன்னுந் திருத்தொண்டர் புராணத்துட் கூறப்படும் ஏனைய வடியவர்கள் சரித்திரங்களானும் அது நன்கு விளங்கும் இத்துணையரிதிற் பெறப்பாலனவாகிய அச்சிவபெருமான் திருவருட் செல்வமொன்றே என்றாகும். "அருள்வித்திட்டுக் கருணைநீர் பாய்ச்சி." எனக் குமாரகுருபர சுவாமிகள் கூறியவண்ணம் உலகினருக்கும் சத்திநிபாதர்க்கும் பயன்படுதல் முறையே பொதுவுஞ் சிறப்புமாம் எனப் பேர்பெற்று அவித்தை வேறுபாட்டால் இரண்டெனப்படினும் அத்திருவருட் செல்வமொன்றே ஆன்மாக்களுக்கு மும்மலங்களையும் தொழிற்படுத்தி பாகம் வருவித்தற்பொருட்டு திரோதான சத்தியெனப் பேர்பெற்று நிற்றல்போல ஒன்றேயாம். அவ்விருதிறப் பகுப்பையும் நாமெல்லாம் செவ்விதின் உணர்ந்து உண்மை கடைப்பிடித்து உய்தற்பொருட்டன்றோ முதல் நூல்களும் பொதுவும் சிறப்புமென அவ்வாறு வேறு இருவகைத்தாய் இரண்டு அருளினாலும் இயக்கப்பட்டனவென்க, இத்திருவருளே எவ்வகைத்தாய துன்பங்களை யொழிப்பதும், பிறப்பை யறவே யொழிப்பதும், நித்தியானந்தப் பெருவாழ்வைக்கொடுப்பதும் நமது சமயஞானாசாரியர்களும் மற்றைய நாயன்மார்களும், ஞானதானவள்ளல்களாகிய மெய்க்கண்டசிவ முதலிய சந்தான குரவர்களும், தவராஜசிங்கமாகிய பட்டினத்தடிகளும் மற்றவர்களும் அனுபவித்ததும் இவ்வருட்செல்வத்தையே. இவ்வருட்பெருஞ்செல்வத்தை நோக்குங்கால் முன் கூறுநின்ற பொருட்செல்வம், கல்விச்செல்வம் ஆகிய இருசெல்வங்களும், இவ்வருட் செல்வத்தைப் பெறுவதற்குத் துணைக்காரணமாதல் மாத்திரையானே ஒன்றற்கொன்று சிறந்து உபகாரப்படும். அத்துணையேயன்றி இவ்வருட்செல்வம்போல் முக்கியமாகமாட்டாது. பலவேதுக்களால் துன்பந்தருதலானும், தாயத்தார், கள்வர் முதலியவர்களால் கவரப்படுதலானும், நீராலும், நெருப்பாலும், அள்ளப்படுதலானும், உண்ணப்படுதலானும் அழிந்துபோகும், பிறர்க்குக் கொடுக்குந்தோறுங் குறையும் ஆனதால் பொருட்செல்வத்தைப் பொருட்படுத்தலாகாதென்பார். "பொருளைப் பொருளாப் பொதிந்தோம்பல் செல்லா, தருளைப் பொருளா அறஞ்செய்தல் வேண்டு, மருளைப் பொருளா வறஞ்செய்துவான்கண், ணிருளிலியல் பெய்தாத தென்னேமோ நமர்காள்" என்னும் வளையாபதி கூறலானும். "இளமையுமில்லா யாக்கையுமில்லா, வளவியவான்பெருஞ் செல்வமுநில்லா, புத்தேளுலகம் புதல்வருந்

தாரார், மிக்கவுறவே விழுத்துணையாவது." என்னும் மணிமேகலையானும் கடைமுறையில் நம்மோடு தொடர்ந்து வருவது பதிப்புண்ணியத்தால் வந்த அதாவது அறத்தால் வந்த அருட்செல்வமே. "அன்றறிவா மென்னாதறஞ் செய்கமற்றது, பொன்றுங்காற் பொன்றாத் துணை" என்னுந் திருக்குறளானும். அறத்தால் வரும் அருட்செல்வந்தான் உடன் பற்று மென்றாயிற்று. மற்றவை நம்முடன் பற்றாமையானும் பிற காரணங்களானும், குபேரசம்பத்திருந்தபோதிலும் ஆசைப்பெருக்கத்திற் களவில்லாமல் மேலும்மேலும் அவரைத் தூண்டிப் பெருந்துன்பத்திற்கிடந்தரும். "ஆசைக்கோரளவில்லை யகிலமெலாங்கட்டி யாளினுங் கடன்மீதிலே தமதாணை செலவே நினைவார்." என்னும் ஆன்றோர் கருத்தின்படி மனமலைவதே யல்லாமல் மேலோர் கீழோராகவும் கீழோர் மேலோராகவும் காலக்குறைவாலாவதும் சலபமேயாம். "குடைநிழலிருந்து குஞ்சரமூர்ந்தோர், நடைமெலிந்தோரூர் நண்ணினு நண்ணுவர்" என்பதினாலே செல்வநிலையாதெனப் பெறப்படுகிறது. "ஆறிடுமேடுமடுவும்போலாம்செல்வம்." என்பதாலுமுணர்வதாயிற்று. நமக்கெப்போதும் அருந்துணையாய் ஆவதில்லை. "காதற்ற வூசியும் வாராது காண்கடைவழிக்கே." என்பதனால் பொருட்செல்வம் ஒரு சிறிதும் பயன்படாதென்க கல்விச்செல்வம் உலகினரை மயக்குதற்கு ஏதுவாகிய கல்வியும் ஒரு சிறிதும் பயன்படாததாகும்; "வெல்லாம லெவரையுமருட்டிவிட வகைவந்த, வித்தையென் முத்திதருமோ." எனவும், "மருட்டிவிட வகைவந்த வித்தையென்முத்திதருமோ." எனவும், "கல்லாதபேர்களே நல்லவர்களல்லவர்கள், கற்றுமறிவில்லாதவென்கர்மத்தை யென்சொல்லுவேன்.' என்னுந் தொடர்பாற்றெளிக. முத்திக்கு வித்தாகிய கல்விச்செல்வந்தானும் "மனமடங்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே." என்றபடி மனதையடங்கச்செய்யாத வழி பயனற்றதாகும். "கற்றதினாலாயபயனென்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅரெனின்." என்பதினால் வாலறிவன் தாளைத்தொழச்செய்யாத வழி பயனிலதாகலானும் முத்திக்குச்சாதனமாகிய கல்விச்செல்வமும் வேண்டாமென்னுங் கருத்துபற்றிதான். "உற்றாரையான்வேண்டேனூர்வேண்டேன்பேர்வேண்டேன், கற்றாரையான்வேண்டேன் கற்பவையுமினியமையுங் குற்றாலத்தமர்ந்துறையுங் கூத்தாவுன்குரைகழற்கே, கற்றுவின்மனம்போலக்கசிந்துருகவேண்டுவனே." என்னுந் திருவடிப்பேற்றின் ஞானமாகிய அருட்செல்வத்தை முடிவாக இறுகப்பற்றிக்கொள்ளல்வேண்டும். "பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப், பற்றுகபற்றுவிடற்கு." என்றவாறு அருட்செல்வத்தையேகொண்டு திருவாதவூரடிகளும் கல்விச்செல்வத்தை நீத்துவிட்டமையானும் அருட்செல்வத்தை நோக்குமிடத்துப் பிறப்பின் உயர்வு தாழ்வு மாற்றவல்லதும், உயிரினும் ஓம்பப்படுவதாகிய கல்விச்செல்வமுந் தாழ்மைத்தேயாம். ஆகவே அருட்செல்வந்தலையாயதென்பது வெள்ளிடைமலைமேற் றெள்ளிதிற்பெறப்படுகிறது. இவ்வருட்செல்வத்தையடைந்தமையாலன்றோ ஸ்ரீ தாயுமானசுவாமிகளும் "அல்லார்ந்த மேனியொரு குண்டுகண்பிறையெயிற்று, ஆபாசவடிவான அந்தகா நீயொரு பொருட்டாற் பகட்டுவது அடாதடாகாசு நம்பாற்செல்லாதடாவெனப் பேச வாய்தந்த செல்வமே." என்றும் எல்லாம்வல்லஅறுமுகச்சிவனார் திருமுகக் கருணையால்யாண்டும் அருள்பெற்ற ஸ்ரீ அருணகிரிநாதர் "ஞானச்சுடர்வாள் கண்டாயடா அந்தகாவந்து பாரடா சற்றுஎன்கைக் கெட்டவே" எனவும் யமனையொரு பொருட்படுத்தாது இவ்வாறு அஞ்சாதுகூறியதும் அருட்செல்வத்தாலன்றோ, மெய்ஞ்ஞானிகளெல்லாஞ் செல்வத்துள் எல்லாஞ்சிறந்த

Learning makes a man fit Company for himself.

செல்வமாய் அழியாவியல்பினதாய்ப் பேரானந்தபெற்றியதாய்சிவத்தோடு அத்துவிதமாய்கலக்கச் செய்வதாயுள்ள இவ்வருட் செல்வமோ அரியமானிடப்பிறவியெடுத்தமக்கட்டொகுதிகட்கெல்லாம் முடிவாய் வேண்டப்படும்சீரிய செல்வமென்று அறிவுறுத்திப் போந்தமையான்யாவரும் அதனை விரைந்து பெறுதற்குரியமார்க்கங்களை தேடல்வேண்டும் என்பதுயாவர்க்கும் விளங்கக்கிடைத்தலாய அம்மார்க்கங்களை சரியை-கிரியை-யோகம்-ஞானம் என்னும் நான்கு பாதங்களாகிய பதிப்புண்ணியங்களேயாம். முறையேயனுட்டித்துப் பேறு பெறுவான் அகண்டாகாரநித்தியவியாபக சச்சிதானந்தப் பிழம்பாய்நிறைந்து நிற்கின்ற பரமசிவனிடத்துச் செய்யும்வழிபாடாம். அதுபற்றித்தான் சிவஞானசித்தியாரில் ;—" ஞானநூல் தனையோதலோதுவித்தல் நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல் நன்குணனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும் இறைவனடி அடைவிக்கும் எழில்ஞானபூசை." என்பதனுல் இறைவனடியாகிய திருவருட் செல்வத்தை யடைவதற்கு முக்கியமான ஏதுவாகிய ஞானபூசை உலகத்தின் கண்ணுள்ள மக்களுயிர்கட்கெல்லாம் இன்றியமையாதனவாம்-உயிரினும் சிறந்ததாய் உயிரினும் ஓம்பப்படுதல் வேண்டுமென்று கரதலாகமலம்போல் விளங்கக்கிடத்தலின் இதைவிட மிக்க உபகாரமாயுள்ளதும் இதைவிட மிக்க பேருபகாரமாயுள்ளதும் வேறொன்றுமில்லை ஆகவே செல்வமானது பொருட்செல்வம், கல்விச்செல்வம், அருட்செல்வம் என மூவகைப்பட்டதென்பதும், இவ்விரு செல்வங்களினும் அருட்செல்வம் சிறந்ததென்றும் அருட்செல்வம் உயிர்கட்கு மிக்க பேறுயுள்ளதென்பதும் அதனையடையும் மார்க்கம் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பதும் அந்த ஞானத்தையே அருட்செல்வமென்றும் மற்றைய செல்வங்களைவிட அருட்செல்வமே மிக்க மேம்பாடுடையதென்பதும் தெற்றெனத் தெளியலாகும். அதுபற்றித்தான் சைவ சமயாசாரியர்களும் சந்தான குரவர்களும் ஏனைய நாயன்மார்களும் மற்றும் பெரியார்களும் எளிதில் அடையப்பெற்றதாகிய நன்மார்க்கத்தைப் பற்றிக்கொண்டு அருட்பெருஞ் செல்வமாகிய வீடடைய வேண்டுமென்பது முடிந்த முடிபேயாம்.

வாழ்த்து - வெண்பா.

மன்னுதமிழ் வேதமுயர் மாமனுநீ றக்கமணி
பன்னுமுறை சங்கரனற் பாலரொடு—துன்னுபுகழ்
சீரயன்மா லாதியர்கள் செல்வந் தழைத்துலகில்
நீரமுடன் வாழ்க சிறந்து.

பண்டிதரத்தினம்

தசுஸ்ரீ-புழலை-திருநாவுக்கரசு முதலியார் அவர்கள் உதவியது.

*(Honorary Magistrate Sembiam Perambur*



Don't carry tales for your livlihood.

## (5) திருத்தணிகை. (160-வது பக்கம் தொடர்ச்சி.)

பகலி ராவினுங் கருவியாலனம்
பருகி யாவி கொண் டுடல்பேணிப்-
பழையவேதமும் புதியநூல்களும்
பலபு ராணமுஞ் சிலவோதி ;
அகலநீளமென் றளவு கூறரும்
பொருளி லேயமைந் தடைவோரை-
அசடர்மூகரென் றவலமேமொழிந்
தறிவி லேனழிந் திடலாமோ ;
சகலலோகமும் புகலநாடொ றுஞ்
சறுகி லாதசெங் கழுநீருந்-
தளவு நீபமும் புனையுமார்பதென்
தணிகை மேவுசெங் கதிர்வேலா ;
சிகரபூதரந் தகர நான்முகன்
சிறுகு வாசவன் சிறைமீளத்-
திமிர சாகரங் கதற மாமரஞ்
சிதற வேல்விடும் பெருமாளே.

---

## திருப்போரூர்.

உருக்கார் வாளிகண்கள்
பொருப்பார் வார்தனங்க
ளுரைத்தேன் வாலசந்த்ர நுதனூலா
முருச்சேர் நீண்மருங்கல்
பணைத்தோ ளோதிகொண்ட
லுவப்பாய் மேல்விழுந்து திரிவோர்கள்
அருக்கா மாதர்தங்கள்
கலைக்கே யோடுமின்ப
வலைக்கே பூணுநெஞ்ச னதிபாவி
யசட்டால் மூடுகின்ற
மசக்கால் மாயுமிந்த
வவத்தா லீனனெற்கென் றருள்வாயே
எருக்கார் தாளிதும்பை
மருச்சேர் போதுகங்கை
யிணைச்சூ டாதிகம்பர் புதல்வோனே

இருக்காலே நினைந்து
துதிப்பார் நாவினெஞ்சி
லிருப்பா யாசை மணிமார்பா

செருக்காலே யிருந்த
கடற்சூர் மாளவென்ற
திறற்சேர்வேல் கைக்கொண்ட முருகோனே

தினைக்கோர் காவல்கொண்ட
குறமகடேன் மாதுடங்க
திருப்போ ரூரமர்ந்த பெருமாளே.

## (6) பழமுதிர் சோலை.

காரண மதாக வந்து புவிமீதே-
காலனணு காதிசைந்து கதிகாண;
நாரணனும் வேதன் முன்பு தெரியாத-
ஞானநட மேபுரிந்து வருவாயே;
ஆரமுத மான தந்தி மணவாள-
ஆறுமுக மாறிரண்டு விழியோனே;
சூரர்கிளை மாள வென்ற கதிர்வேலா-
சோலைமலை மேவிநின்ற பெருமாளே.

சீர்சிறக்கு மேனி பசேல் பசேலென
நூபுரத்தி னோசை கலீர் கலீரென
சேர விட்ட தாள்கள் சிவேல் சிவேலென வருமானார்-

கரத்தின் வாலை சிலோர் சிலோர்களும்
நூறு லக்ஷ கோடி மயால் மயால்கொடு
தேடி யொக்க வாடி யையோ வையோவென மடமாதர்;

மார்ப டைத்த கோடு பளீர் பளீரென
ஏம லித்தெ ணவி பகீர் பகீரென
மாம சக்கி லாசை யுளோ முளோமென நினைவோடி-

வாடை பற்று வேளை அடா அடாஎன
நீமயக்க மேது சொலாய் சொலாயென
வாரமுற்ற பாத மிதோ இதோ காணென அருள்வாயே;

பூர தத்தை மேரு வெளீ வெளீநிகழ்
    கோடொ டித்த நாளில் வரைஇ வரைஇபவர்
    பாணி றக்க ணேசர் குவா குவாகனர் இளையோனே-
பாடன் முக்ய மாது தமீழ் தமீழிறை
    மாமு னிக்கு காதி லுணர் வுணர்விடு
    பாச மற்ற வேத குரு குருபர குமரேசா ;
போர்மி குத்த சூரன் விடோம் விடோமென
    நேரெ திர்க்க வேலை படர் படரென
    போய றுத்த போது குபீர் குபீரென வெகுசோரி-
பூமி யுக்க வீசு குகா குகாநிகழ்
    சோலை வெற்பின்மேவு தெய்வா தெய்வானை தோள்
    பூணி யிச்சை யாறு புயா புயாறுள பெருமாளே.

## திருவிடைமருதூர்.

அறுகுநுனி பனியனைய சிறியதுளி பெரியதொரு
    ஆக மாகியோர் பால ரூபமாய்
    அருமதலை குதலைமொழி தனிலுருகி யவருடைய
    ஆயி தாதையார் மாய மோகமாய்
    அருமைபினி லருமையிட மொளுமொளென வுடல்வளர
    ஆளு மேளமாய் வால ரூபமாய் அவரொரு பெரியோராய்
அழகுபெறு நடையடைய கிறுதுபடி மொழிபழகி
    ஆவி யாயவோர் தேவி மாருமாய்
    விழுசுவரை யரிவையர்கள் படுகுழியை நிலைமையென
    வீடு வாசலாய் மாட கூடமாய்
    அணுவளவு தவிடுமிகள் பிதிரவிட மனமிறுகி
    ஆசை யாளராய் ஊசி வாசியாய் அவியுறு சுடர்போலே
வெறுமிடிய னொருதவசி யமுதுபடை யெனமுளவில்
    மேலை வீடுகேள் கீழை வீடுகேள்
    திடுதிடென நுழைவதன்முன் எதிர்முடுகி யவர்களொடு
    சீறி ஞானிபோல் ஏறி வீழ்வதாய்
    விரகினொடு வருபொருள்கள் சுவறியிட மொழியுமொரு
    வீணியார் சொலே மேல தாயிட விதிதனை நினையாதே
பிணிகுபிணு கெனுமுடல மறமுறுகி நெகிழ்வுறவும்
    வீணர் சேவையே பூணு பாவியாய்
    மறுமையுள தெனுமவரை விடும்விழலை யதனில்வரு
    வார்கள் போகுவார் காணு மோனென

விடுதுறவு பெரியவரை மறையவரை வெடுவெடென
மேள மேசொலாய் ஆளி வாயராய் பிடையுற வருநாளில்

வறுமைகளு முங்கிவர வுறுபொருளு நழுவசில
வாத மூதுகா மாலே சோகைநோய்
பெருவயிறு வயிறுவலி படுவன்வர இருவிழிகள்
பீளை சாடிட ஈளை மேவிட
வழவழென உமிழுமது கொழுகொழென ஒழுகிவிழ
வாடி யூனெலாம் நாடி பேதமாய் மனையவள் மனம்வேறாய்

மறுகமனை யுறுமவர்கள் நணுகுநணு கெனுமளவில்
மாதர் சீயென வாலர் சீயென
கனவுதனி லிரதமொடு குதிரைவர நெடியசுடு
காடு வாவென வீடு போவென
அலதழிய விரகழிய வுரைகுழறி விழிசொருகி
வாயு மேலிட ஆவி போகுநாள் மனிதர்கள் பலபேச

இறுதியொ டுறுதியென உறவின்முறை கதறியழ
ஏழை மாதரார் மோதி மேல்விழ
எனதுடைமை யெனதடிமை யெனுமறிவு சிறிதுமற
ஈமொ லேலெண வாயை ஆவென
இடுபறை சிறுபறைகள் திமிலையொடு தவிலறைய
ஈம தேசமே பேய்கள் சூழ்வதாய் எரிதனிலிடும் வாழ்வே

இணையடிகள் பரவுமுன தடியவர்கள் பெறுவதுவும்
ஏசி டார்களோ பாச நாசனே
இருவினையு மலமுமற இறவியொடு பிறவியற
ஏக போகமாய் நீயு நானுமாய்
இறுகும்வகை பரமசுக மதனையரு ளிடைமருதில்
ஏக நாயகா லோக நாயகா இமையவர் பெருமாளே.

பலை முற்றிற்று.

## திருவருணை.

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே

மாறுபடு சூரனை வதைத்தமுக மொன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதியரு ணாசல மமர்ந்த பெருமாளே.

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகர் திருவடி வாழ்க.

ஓம்வேல்முருகர் துணை.

## மாந்தரின் பற்பல நிலைகள்.

உலகம் யாவையு மொருபேரரங்காம்
அலகின் மாக்கள் ஆங்குள நடர்களாம்.
இன்னோர் பிறப்பதும் இன்புற்றிறப்பதும்
நன்னாடகத்தை நலம்பெற நடித்தலாம்.
மண்ணிற் பிறந்தொளிர் மாந்தரின் நிலையெலாம்
எண்ணிப் பார்த்திடின் ஏழதாம். அவற்றுள்,
பரிவுடன் தாய்தரும் பாலமுதுண்டு
சிரிதரு முகத்துடன் செவியமுதூட்டி
மழலைச் சொல்லான் மனமகிழ்விக்கும்
குழவிப் பருவமே கூறு மோர் நிலையாம்.
இணங்கா மனத்தனாய் ஈன்றோர் வருந்தவும்
பிணங்கிச் சிணுங்கிப் பின்ன ரிசைந்து
மெள்ளவே நகர்ந்து துள்ளித்திரும்பும்
பள்ளிக் கேகும் பருவமே யிரண்டாம்.
மூன்றாம் பருவமோ முகமது மினுக்கிச்
சான்றோ மணிகலன் சாலவும பூண்டதைக்
காதலி மகிழ்வுடன் கண்டு களித்தன
ளாதலி னெவற்றினும் அழகே சிறந்தெனு
மாதரார் மயங்கும மாண்டகு வனப்புடைக்
காதலன் பொலிவுடன் காணுறும் நிலையாம்.
நான்காம் பருவமோ நால்வகைப் படையுடன்
மான்போற்றுள்ளி மறலிபோ லெதிர்த்துப்
பற்றித்திருகிப் பகைவரைக் கொன்று
வெற்றியை நாட்டும் வீரனது நிலையாம்.
ஐந்தாம் பருவமாம் அரியநன் னிலையிலோ
புந்திசால் நோக்கும் புகழுறு மொழியும்
ஓங்கிய மீசையும் உருண்ட தொந்தியும்

பாங்குடன் விளங்கப் பரிவுட னெவர்க்கும்
நீதியே புகட்டும் நீதிமான் நிலையாம்.
அதன்பினர்த் தோன்றும் ஆறாம் நிலையிலோ
சதமென விருந்த ஜகந்தனில் வெறுப்புற்று
ஆத்தும ஞான ஆசைப் பெருக்கால்
சாத்திரம் பலவும் சாலவே யுணர்ந்து
கையினில் தடியும் காலினில் குறடும்
மெய்யினில் நீறும் மிகுந்து விளங்க
'அரிபெரி யவனோ? அரன்பெரி யவனோ?
எவனே பெரியவன்? எவனே சிறியவன்?'
என்றே பலகால மெடுத்துப் பேசிக்
காணா ரெதனையுங் கண்டார் போல
வாணாள் கழிக்கும் வைதிகர் நிலையாம்.
இவையெலாம் கடந்த ஏழாம் நிலையிலோ
அவயவம் யாவும் அயர்வடைந் தமையாற்
சொல்லும் பிறழ்ந்து சுவையுங் குறைந்து
பல்லும் உதிர்ந்து பார்வையும் மறைவுற்று
அந்தியிற் குழந்தைக ளாயின ரெனவே
விந்தை விந்தையாய் விரும்பியும் மறந்துங்
கணந்தொறும் கணந்தொறும் குணம்பிறி தாகியும்
உடைநடை யாவையும் ஒருங்கே மாறியுங்
கடைநா ளதனைக் கழிப்பது தானே.!!

சுபம்! சுபம்!! சுபம்!!!

வேதமே விளங்க மெய்ம்மையே வயங்க வெம்மையே நீங்கிட விமல
வாதமே வழங்க வானமே முழங்க வையமே யுய்ய லோர்பரம்
நாதமே தொனிக்க ஞானமே வடிவாய் நன்மணி மன்றிலே நடிக்கும்
பாதமே பிடித்தே னெனகிது போதும் பண்ணிய தவம்பலித் ததுவே.



Neglect of opportunities is a serious fault.

இது வி. கு. முத்தியாமுதலியார் சகோதரர் குமாரரும்
இந்நூல் இயற்றியவரின் தந்தை
வி. ந. சேனைபதிமுதலியார் சிற்றப்பரும் ஆகிய
காலஞ்சென்ற (ரயில்வே)

## வீ. அ. ஏகாம்பரமுதலியாரியற்றிய

# தனித்துதிகள்.

பொன்னுருந்தெய்வப் பொருனைவிரிஞ்சைமாநகர்வாழ்
மன்னும்விநாயகனை வாழ்த்தியே—பன்னுநும்
பாத கமலம் பணிகுவையேற் பாழ்மனமே
பாதக மலம்பறக்கும் பார்.

மார்க்கசகாயர் துதி.

ஓம்நமசி வாயசிவ சம்போ சடாதரா
மேவாங்குமுயர் மதியணிந்த
உத்தமாநின்னன்பா தம்மடிபணிந்துநா
னுய்யவுன் றிணையடிக்கீழ்
ஓம்ஹரஹரா சிவா பரசிவயதற்பரா
வோங்கலெழு கங்காதரா
உமையாளைன்மரகதக் கொடிபாகனேமகிழ்ந்
துறுதிபெறு நீறணிந்தே
ஓம்சங்கராசதாசிவபவசிவெனுமந்த்ர
மோதிநறுமாமலர்களா
லானமிகுபவமகலவர்ச்சிக்குமன்பர்கட்
குரியபரகதியருள்செயும்
ஓம்சிவாநந்தசின்மயசந்த்ரசேகரா
வுண்மைமேவார் மணிவிரிஞ்சை
ஓங்குசிவவடியனுக்குளநோயகற்றிநன்
குயர்மார்க்கபந்தருள்வையே.

வேறு.

சன்மார்க்கசங்கத்தீர் சிற்றடியேனுமதுதாள்வணங்கிச்சாற்று
கின்றேன்றயவினொடுங்கேட்பீர், சன்மார்க்கத்தெனைநமக்குளொ
ருவனெனக் கொள்வீரெல்லாந்செய் வல்லநமதிறைவனையேதொழு
வீர், புன்மார்க்கத்தவர்போலேவேறுசிலபுகன்றே புந்திமயக்கடை
யாதீர்பூரணமெய்ச்சுகமாய்த், தன்மார்க்கமாய்விளங்குஞ்சுத்தசிவ
மொன்றேதன்னுணையென்னுணைசார்ந்தறிமினீண்டே.

God is our refuge & strength. If humble thou shalt prosper.

# சாந்தோபதேச மஞ்சரி மதிப்புரை (3 வது பு.)

பூர்ணசந்திரோதயம் :—இது பக்திமார்க்கத்தில் ஒழுகுவோர்க்கு மிகவும் பிரயோஜனகரமான உயர்நலம் அமைந்த பாசுரத்திரட்டு. தேவாரம், திருவாசகம், திருமந்திரம், நாலாயிரப்பிரபந்தம், பெரியபுராணம், இராமாயணம், திருக்குறள், ஔவையார் முதலிய அநேக பெரியோர் வசனங்கள் பக்தியை உண்டுபண்ணும்படியாக பெங்களூரில் வசிக்கும் ம-ா-ா-ஸ்ரீ வி. சே. ஆறுமுகமுதலியாரவர்களால், ஆராய்ந்து தொகுக்கப்பெற்று ஒருபுஸ்தகமாக பிரஸித்தம் செய்யப்பட்டிருக்கிறது இது மிகவும் உபயோகமானநூல் தேர்ந்தெடுக்கப்பட்டபாசுரங்கள் மிகவும் உயர்நலமுள்ளவைகள். இவைகளை மனநம் பண்ணி, தியானம் செய்தால், அவைகள் இறைவனடி சேர்க்கும் இயல்பின. பக்தியை உண்டாக்குவதற்கு அநுகூலமாய், ஆலயங்களின் படங்களும், ஈசுவராதிகளின் படங்களும், உயர்ந்த பக்தர்களின் படங்களும் இப்புத்தகத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சைவ வைஷ்ணவ மதத்துவேஷம் இல்லாமல் இரண்டு ஸம்பிரதாய நூல்களிலிருந்தும் ஷை பாசுரங்கள் தொகுக்கப்பெற்றிருக்கின்றன. மதசம்பந்தமான கல்விப்பயிற்சி பள்ளிக்கூடங்களில் வேண்டுமென, அறிஞர்கள் பலர் வற்புறுத்திக் கூறிக்கொண்டு வருகிறார்கள். அப்பயிற்சிக்கு அநுகூலமாக இத்திரட்டு பயன்படுமென்று சந்தேகமில்லாமல் நாம் சொல்லுவோம்.

சுதேசமித்திரன் :—பெங்களூர் வி. சே. ஆறுமுகமுதலியார் பதிப்பித்தது. இதில் ஈஸ்வரபக்தி புகட்டக்கூடிய அரியபாடல்கள் பல நூல்களினின்றும் ஆராய்ந்தெடுத்து சேர்க்கப்பட்டிருக்கின்றன. நமது பேர்பெற்ற சில சைவவைஷ்ணவபக்தர்களாகிய தாயுமானவர், பட்டினத்துப்பிள்ளையார், திருவள்ளுவர், சைவசமயாசாரியர் ஆழ்வார்கள் போன்றவர்களாற் செய்யப்பெற்ற பாடல்களில் பொறுக்கியெடுத்து இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சில தோத்திரங்களும் அடங்கியிருப்பதால் இப்புஸ்தகம் பக்தி மார்க்கங்களை உண்டுபண்ணக்கூடியது. புத்தகம் பெங்களூர் கன்டோன்மெண்ட், நால்வர் பவனம், V. S. ஆறுமுகமுதலியாரிடத்தில் கிடைக்கும்.

லோகோபகாரி :—இப்பெயருள்ள புத்தகமொன்று நமது பார்வைக்கு வந்தது. இது நந்தமிழ்மக்கள் அத்தியாவசியகமா யுணர்தற்குரிய வைதிக விஷயங்களைத் தன்னுட்கொண்டு விளங்குகின்றது. இதில் தேவாரம் திருவாசகம் முதலிய சைவநூல்களினின்றும், திருவாய்மொழி முதலிய வைணவநூல்களினின்றும், பாராயணத்திற்குரிய செய்யுள்கள் வேண்டிய அளவிற்கத்திரட்டி எழுதப்பட்டிருக்கின்றன ; இந்நூலில் ஒவ்வொரு பக்கத்தின் முதலிலும் கொன்றை வேந்தன் முதலிய நீதிவாக்கியங்களும், ஒவ்வொரு பக்கத்தின் ஈற்றிலும் ஆங்கிலப்பழமொழிகளும் எழுதப்பட்டிருக்கின்றன. வைதிக சிந்தனைக்குரிய படஙகள் இதனது முதலிலும் கடையிலும் வைக்கப்பட்டிருக்கின்றன. இப்புத்தகத்தை ஸ்ரீமத்-வி. சே. ஆறுமுக முதலியாரவர்கள் மிகுசிரமப்பட்டமைப்பாகவெழுதியிருக்கின்றார். வைதிக சம்பந்தமான விஷயங்களுள் பொதுவான தாயும் உபசாந்திக் கேதுவான தாயுமுள்ள விஷயங்களைத் தன்னகத்துட்கொண்டிருக்கும் இந்நூல் வைதிக வொழுக்கத்தில் பிரியமுள்ள ஒவ்வொரு தமிழரிடத்தும் இன்றியமையாதிருத்தற்குரியதாம்.

**திராவிடன்** :—இது எல்லாம்வல்ல இறைவன் திருவருட்செல்வத்தை எளிதிலடைவதற்கேதுவாகிய தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருமந்திரம், பெரியபுராணம், திருக்குறள், நாலாயிரப்பிரபந்தம் முதலான அரிய பெரிய நூல்களினின்று நித்திய பாராயணத்தின்பொருட்டுத் தொகுக்கப்பட்டிருக்கும் செய்யுட்களைக்கொண்ட ஞான நூலாகும். இதில் வசன நடையில் எழுதப்பட்ட சமயசார்பான வியாசமும் அடங்கியிருக்கின்றது. இதன்கண் ஒவ்வொரு பக்கத்தின் தலைப்பில் சிறந்த தமிழ் நீதிவாக்கியமும், அடியில் ஒவ்வொரு ஆங்கிலப்பழமொழியும் எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது. அருமையும் பெருமையும்வாய்ந்த இந்நூலைப்பற்றி கனம் மாதவராவ், ராஜசபாபூஷணம் புட்டண்ண செட்டியார், ஐகோர்ட்டு நீதிபதியாயிருந்து காலஞ்சென்ற பிரம்மஸ்ரீ - சுந்தர அய்யர், ஸ்ரீலஸ்ரீ-சுவாமிநாத பண்டிதர் முதலானவர்கள் பெரிதும் வியந்து கூறியுள்ளார்கள். இது ஒரு சமரச நூலாதலின் சைவ வைஷ்ணவ மதத்தினர்பால் இருக்கத்தக்கது. ஈசுவர பக்தியும், அடியார் பக்தியும், பரோபகார சிந்தையும் பெரிதும்வாய்ந்த பெங்களூர்த்தண்டு நால்வர்பவனத்திலுள்ள ஸ்ரீமாந் - வி. சே. ஆறுமுக முதலியார் அவர்கள் இந்நூலைத்தொகுத்து வெளிப்படுத்துவதில் எடுத்துக்கொண்ட முயற்சிக்கு அவர்கள்பால் தமிழ் மக்கள் யாவரும் என்றும் நன்றி பாராட்டக்கடமைப்பட்டவர்களாகின்றார்கள். இதன் மூன்றாம் பதிப்பும் விரைவில் வெளிவரும். இதனைவேண்டுவோர் இதன் ஆசிரியடத்தில் ரூ. 1—4—0க்குப் பெற்றுக்கொள்ளுவார்களாக.

**இந்துநேசன்** :—சைவ சமயாசாரியர்களும் வைஷ்ணவ மதாச்சாரியர்களும் உபதேசித்தருளிய இந்துமத சாம்பிரதாய முறையைத் தழுவியிருக்கும் நீதிபோதங்கள் நிரம்பிய அருந் தமிழ் நூலாகும்இது. மைசூர் மராமத் இலாகாவைச்சேர்ந்த அகௌண்டாபீஸிலிருக்கும் மிஸ்டர் V. S. ஆறுமுக முதலியாரே இதன் கிரந்தகர்த்தாவாவர். மதபோதத்தை யவலம்பித்த நீதிசாரத்தை நவில விரும்பும் மகாஜனங்களான பக்திமான்களுக்கு இதுபெரிதும் பிரயோஜனப்படுவது திண்ணம். இதற்கு ஓர் முகம் எழுதியிருக்கும் மிஸ்டர் வி. பி. மாதவராவ் கூறிய புகழனைத்தும் இதற்குரியதென்பதற்கு ஆக்ஷேபமில்லை.

**விவேகபோதினி** :—சாந்தோபதேசமஞ்சரி என்னும் அரிய ஓர் திரட்டு 4-வருடங்களுக்கு முன்பு இரண்டாம் பதிப்பு நிலவியது. இதுகாறும் பல ஆர்டர்களிருந்தும் காகித பஞ்சத்தினால் வெளிவரவில்லை. இந்நூலாசிரியர் பெங்களூர்த்தண்டு, நால்வர் பவனம் வி. சே. ஆறுமுக முதலியார் அவர்கள், இக்காலத்துக் காகிதக் கருப்பையுங் கவனியாது பொதுஜன வேண்டுகோளுக்கிணங்கி இப்போது ஷை நூல் மூன்றாம் பதிப்பு பிரசுரித்திருக்கின்றனர். இதில் முன்னிருந்த பன்னிருதிருமுறைகள், தாயுமானவர், இராமலிங்கசுவாமி, திருக்குறள், பிரபந்தம் முதலிய பாடற்றிரட்டுடன், திருப்புகழ் சேர்த்திருக்கின்றன. முந்தி 170 பக்கமிருந்தது. இப்போது 184 பக்கங்களுடன் பிரபல தமிழ் மேதாவிகளின் மதிப்புரைகொண்டு வெளிவந்துள்ளது. பாரம் கணக்குப்படி இல்லாமல், குறைந்த விலை ரூ. 1-4-0 க்கு விலை போடப்பட்டிருக்கின்றது. இந்நூலாசிரியர் நன்முயற்சி இனிது பெறும்படி ஆசீர்வதிக்கிறோம்.

**ஆனந்தபோதினி** :—சாந்தோபதேசமஞ்சரி யென்கிற பெயர் புனைந்துள்ள ஓர் புத்தகம் எமது மதிப்புரைக்கு வரப்பெற்றோம். இதில் தற்கால நிலைமைக்குத் தக்கவாறு தமிழ்த் திருமுறைகள் பலவற்றுள்ளுமிருந்து சைவ. வைணவ சமரசநோக்கத்துடன், பெங்களூர்த்தண்டு சைவசித்தாந்த சபை தாபகரும் மைசூர் கணித ஆபீஸ் உத்தியோகஸ்தரும் ஆகிய நால்வர் பவனம் ஸ்ரீமான் - வி. சே. ஆறுமுக முதலியார் அவர்கள் திரட்டியுள்ளார். இப்புத்தகத்திற்குப் பல தமிழ் மேதாவிகளும், முக்கியமான பத்திரிகைகளும் கொடுத்துள்ள மதிப்புரைகளுடன், மூன்றும் பதிப்பை யடைந்துள்ள தன்மையே யிந்நூலின் அத்தியாவசியகத்தை நன்கு புலப்படுத்துகின்றது. எங்கும் வியாபித்துள்ள சர்வேச்சுரரது திருவருட்சகாயத்தால் இந்நூலாசிரியர் ஸ்ரீமான் - வி. சே. ஆறுமுக முதலியாருடைய நோக்கம் பலிக்குமாறு பிரார்த்திக்கிறோம். இதன் விலை ரூ. 1—4—0 உரித்தானது.

இக்காலத்தே மதபேத மில்லாத நூல்கள் வெளிவருவது நலம். இதனை யுணர்ந்த எனது நண்பர் ஸ்ரீ ஆறுமுக முதலியார் அவர்கள் "சாந்தோபதேசமஞ்சரி" என்னும் ஓர் அரிய தோத்திர நூலை வெளியிட்டமை கண்டு பெரிதும் மகிழ்ச்சியடைகின்றேன். இதனில் திருமுறைப் பாசுரங்களும், பட்டினத்தார், தாயுமானவர் முதலிய பெரியார் பாடல்களும் விளங்குகின்றன. நாலாயிரப்பிரபந்தம் முதலிய வைணவ சாஸ்திரங்களிற் காணும் அரியபாடல்களும் தொகுக்கப்பட்டுள்ளன. இதற்குமுன் இரண்டு பதிப்புகள் தமிழ் உலகிற்குப் பயன்பட்டமை ஒன்றே இந்நூலின் உபயோகத்தையும் [illegible]வையும் உணர்த்தும். இம்மகோபகாரத்தைச் செய்த நமது நண்பருக்குத் தமிழுலகம் பெரிதும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டதாகும்.

(KAVERI HOUSE,)
MADRAS,
*26th June 1918.*

கா. நமச்சிவாயர்
*Lecturer in Tamil, Queen Mary's College.*

சென்னை துரைத்தன கலாசாலைத் தலைமைத் தமிழ்ப் பண்டிதர் பிரம்மஸ்ரீ-மஹாமஹோபாத்தியாயர் வே. சாமிநாதையர் அவர்கள் எழுதுகிறார்:—சாந்தோபதேசமஞ்சரியின் அமைப்பு நன்றாக இருக்கின்றது. பலருடைய வாக்குக்களிலிருந்து தெய்வ பக்தியைப் புகட்டக்கூடிய நல்ல பாடல்கள் முதலியவற்றை இதில் தொகுத்திருத்தல் மிகவும் உபகாரமானது.

வே. சாமிநாதையன்.

THE HON'BLE MR. JUSTICE,

T. V. SESHAGIRI IYER AVL., B.A., B.L., FAVORS:—

DEAR SIR,

Thanks for the copy of Santhopadesa Manjari I have glanced thro' its contents The book is a well arranged collection of some of the most soul stirring religious songs in the Tamil literatue. The selection has been very judiciously made and is fairly complete.

* * * *

* * * *

Anandale, EGMORE.
14—7—1918.

T. V. SESHAGIRI IYER.

I find the selections in Santhopadesa Manjari to be typical, varied and interesting. That the book has now passed the 3rd edition speaks for itself about its excellence This is the sort of book which will induce our youths to take interest in religious studies. I hope the book will sell by thousands and encourage the author to publish other useful books.

Perambur, MADRAS
14—7—1918.

P. CHELVAKESAVAROYAN, M.A.,
*Pachaiyappa's College.*

I am very glad to have seen this little collection of devotional and religious songs by the Tamil Saints. The more we have of such books the better it will be for South India. I hope that many in South India through the aid of this little book which has been compiled through the devotion of Mr. Arumugam Mudaliar will find help and joy in these songs I wish the author success in his subsequent publications

BANGALORE,
*22nd May 1918.*

REV. H. A. POPLEY,
*Lyrical Preacher of Erode.*

